

ஸ்ரீ



ஸ்ரீராமஜெயம்

நளநாடகமென்று வழங்குகின்ற

# தமயந்தி நாடகம்.

தஞ்சைமாநகரம் சொக்கலிங்கதேசிகர்
மாணாக்கராகிய தஞ்சைமாநகரம் ம-ா-ா ஸ்ரீ
கிருஷ்ணசாமிபிள்ளை அவர்களால்
இயற்றியது.

இஃது
மயிலம்.
**சுப்பிரமணியசுவாமிகளால்**
பார்வையிடப்பட்டு.

சென்னை-இட்டா
**பார்த்தசாரதிநாயுடு**
அவர்களாற்றமது
ஸ்ரீபத்மநாபவிலாசஅச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

—(*)—

MADRAS.
1901.

நெ 1. திருப்பள்ளிசந்து பெத்துநாய்க்கன்பேட்டை.

உ

கடவுள் துணை.

# தமயந்தி நாடகம்,

## விநாயகர் துதி

காப்பு.

நேரிசை-வெண்பா

சுத்தமிகுமாநிடதத் தூநளனைமாலையிட்ட
நற்றமயந்திச்சரிதை நாடகமா-யுற்றுரைக்கத்
தங்குமுமையோர்பாகன் சங்கரனீன்றகரித்
துங்கமலர்த்தாளே துணை.

விருத்தம்.

திங்களெனும்பதுமமலர்ப்புயத்தோனெட்டுத்
திக்குமன்னர்வணங்கவெகுசெயத்தோன்வெற்றிச்
சிங்கமெனுநிடதநகர்தன்னில்வாழுஞ்
சித்ரபதிச்சத்திரபதிச்செங்கோனீதித்
துங்கநளச்சக்ராவர்த்திச்சரிதைதன்னைத்
துதித்திடவேயக்காவந்தும்பைசூடுங்
கங்கையணிசங்கரனீன்றசத்திக்
கணபதிபொற்பாதமலர்காப்பதாமே.

ஈசுவரர் துதி

சக்கரத்தாற்புவியனைத்துமொருகுடைக்குளாண்டநளச்சக்கிரவர்த்தி
தக்ககதைநாடகமாம்முக்கியமிகுஞ்செந்தமிழாற்றமியேன்கூற
மைக்கடலிற்பிறந்துவருமிக்கவிடமுண்டுமழுமானையேந்தி
நக்கனெனும்புரமெரித்தமுக்கணன்றன்பதமனதினுடினேனே.

முருகர் துதி.

நிடதநகர்தனக்கதிபன்றுதிவேலாற்கருதலர்தநெஞ்சினட்டிக் (டத்
கடல்சூழ்ந்தபுவிமுழுதுமொருகுடையிலாண்ட நளன்கதையைப்பா
துடியிடைத்தெய்வானைவள்ளி தனையிருபாகத்தில்வைத்துத்துலங்கு
ஙவேற், றிடமுடன்கொண்டுயர்மயிலில் வருமுருகனிருபதத்தைச்
சென்னிசேர்ப்பாம்.

### திருமால்துதி.

வாலமதிபோலுநுதற்றமயந்திக்கினியமணவாளனை
நிலமிதுநிடதக்கராண்டநளன்சரிதையினைச்செப்பமுன்னூல்
மூலமெனவோலமிடுவேழமதைக்காத்தருளுமுகின்மெய்போன்ற
வேலைநடுத்துயின்றதிருமாலிருபாதம்புயத்தைவேண்டுவேனே

### ஈஸ்வரிதுதி

நிதிபெருகும்நுநீதிவிதிமுறைமைதனைநடத்துநிடதர்கோமான்
ததிபெருகுஞ்சரிதையிதன்விதமதனைச்செந்தமிழாற்சாற்றுதற்கு
மதிமுகமுங்காதமலவரைத்தனமுந்துடியிடையின்வடிவுபோன்ற
துதிபெருகுமலைமகடன்னிணையடியேயநுதினமுந்துணையதாமே.

### சரஸ்வதிதுதி,

நிலமாதுதிருமாதுதனதுடையவசமாகநிறுத்துநீதி
நலமானபதிமேவுநிடதநளன்சரிதைதனைநவிலப்பாரிற்
பலமானகலைநூலினைப்பொருளாகநின்றிலங்கிப்பநுவற்கூறுங்
கலைமாதுதிசைமுகனின்பூங்கமலத்தாளிணையைக்கருதுவேனே

### நூலாசிரியர்.

கங்கைக்குலந்தனிலுதித்தசொக்கலிங்கதேசிகன்சொற்கவிகடன்னிற்
பிங்கலமாகனையநளராசன்மனையாளைவிட்டுப்பிரிந்தபின்பு
கொங்குலவுவனவேடன்றனையெரித்ததமயந்திக்குறைகடீர
மங்களமுற்றுளகவியுமவர்சீடன்கிருஷ்ணபிள்ளைவகுத்ததாமே

### அவையடக்கம்

பஞ்சிதன்சொற்பநுவலினைப்புலவர்வஞ்சிக்கதிர்மதியரம்பதுமை
க்கைவாய், விஞ்சையர்சொன்னூலறியாப்புன்மொழிகொண்டின்பமு
ற்றுவிளங்கியானுமிஞ்சுபுகழ் நளன்சரிதைதனையறிவின்றுமுதுரைசொ
ல்விரும்பிவெண்மை, யிஞ்சன்மொழிதனையறிஞரறிவலர்சொற்பிழை
யிதெனவியம்பிடாரே

### பாயிரமுற்றும்

### தோடையம்-நாட்டைராகம்-சம்பைதாளம்

புவனமுழுதொருகுடையி லணிந்துசெங்கோல்தான்செலுத்தும்
புஜபலநளன்சரிதை-யிசைதனைக்கூற
பணிபதிவருமுடி காருடனுணசிவ
பாலனுமையருள்விக்கினேஸ்-பரன்பாதந்துணையே செயசெய
நீதிநெறிதவறும-லாதிநெடுமால்பதமும்
நேயமுடனதுதித்திட-நிருபன்புகழுரைக்க
தாதவிழுங்கடம்பமலர்த்-தாரணியும்புயமுருகன்
சரவணபவன்கமலத்-தாளிணைகடுணையே செயசெய

செய்திருவைகிகரழகு சுந்தரஞ்சேர்த்தமயந்தித்
தேவிமணவாளன்புகழ்-அவளுடன்றுதிக்க
சந்ததமுங்தொண்டர்முன்னே-வந்துவரந்தந்தன்ப
தாமனெழில்பெருமேனி-வாமனடித்துணையே — செயசெய

மங்களம்.

தரு-இ-ம-பந்துவராளி-ஆதிதாளம்.

மங்களம் நளேந்திரனுக்கு மங்களம்
மதிமுகத்தமயந்திக்கு மங்களம்
பங்கயக்கண்மாயனுக்கும் பாலைதிருநேயனுக்கும்
சங்குசக்ரதாரனுக்கு மங்களம் நித்ய
சர்வதயாபரர்க்கு மங்களம்
திங்களணிவேணியர்க்குஞ் செய்யமழுபாணியர்க்கும்
மங்கையுமைபாகனுக்கு மங்களம்-கொன்றை
மாலையணிவாகனுக்கு மங்களம்
ஓதுமறைவேதனுக்கு முற்றகலைமாதினுக்கும்
சீதநளராசனுக்கு மங்களம்-யாவும்
சிருஷ்டிக்கும் ரக்ஷகனுக்கு மங்களம்
வாரணமுகவனுக்கும் வல்லபைக்கணவனுக்கும்
சூரசம்மாரனுக்கும் ஜெயமங்களம்-பசுந்
தோகைமயில்வீரனுக்கும் சுபமங்களம்

பொது-அகவல்,

பூதலம்புகழும் புராதனராசன்
சீர்சேர்மன்ன னிடதநாடுடையோன்
சந்திரகுலத்தான் சக்கராயுதத்தான்
தந்திரநயத்தான் சயிலநேர்புயத்தான்
ஆனையொட்டகமு மசுவமராதமுஞ்
சேனைகளுடனே யிவிகைதண்டிகையும்
அவனியோர்குடையா னறிவொன்றுடையான்
மமதைவப்படையான் வசிகாமுடையான்
எண்ணேழுதேச மிருக்குமன்னவர்கள்
தண்மையால்வந்து தான்புடைசூழ
கவிராயர்பாடக் கட்டியங்கூற
நவரத்நமயமாய் நலமுடனிழைத்த
சிங்காசனத்தில் ஸ்ரீநளராசன்
மங்களக்கிரீட வர்த்தனராகி
ஆச்சிரியமாக வரசுசெங்கோலால்
ராச்சியபார நடத்துமநாளில்
வேட்டையில்விருப்பி வேந்தனுங்கண்டு

நாட்டிகில்லாத நல்லன்னப்பட்சியை
தூதுக்குவிட்டுத் தோகையையிணக்கிச்
சேதிகள்வந்து ஜெயமென்றுசொன்னார்
இந்திரர்நளனை யினிதூதுவிட்டுச்
சந்தேகமாகத் தானவர்சென்றார்
சுமுகனும்வீமன் சுந்தரப்பெண்ணும்
தமயந்திதனக்குந் தான்கலியாணம்
ராச்சியமன்னரில் நளமகாராஜன்
ஆச்சரிமாக வப்போதேவிவாகம்
கருத்தின்படியே கலியாணஞ்செய்தார்
இருவருநிடநாட் டினுக்கிவர்வந்து
நளபூபால னளமருண்மைந்தரை
வளமையாய்ப்பெற்று மருவுமந்நாளில்
இந்திரன்சொல்லா லேழரைநாட்டான்
வந்துமேபுஷ்கரன் வடிவாநளன்முன்
சொக்கட்டானுடித் தோற்றிடச்சீர்மைச்
சிக்கியேசீயையைச் செல்லெனக்காட்டி
மைந்தரைத்தந்தை மனைக்கேயனுப்பி
சிந்தையுநொந்துச் சென்றனர்வனத்தில்
மறிந்தன்னப்பட்சி மன்னவன்புடவையைப்
பறித்திடநளனும் பாவையுமொருதுகில்
உடுத்தியேதுயின்றா ருணர்வறியாமல்
புடவையைக்கிழித்துப் போகவேயரசன்
அரவங்கடிக்க வப்பாலயோத்தித்
தருமரிதுபர்னன் சமுகத்தில்வந்து
சுயம்பாகஞ்செய்துத் துலைத்திடக்காலம்
பயந்தேமுழித்துப் பார்த்திடமங்கை
புருஷனைத்தேடிப் புலம்பித்திகைக்கச்
சரீரத்திற்சர்ப்பம் தான்வந்துசுற்ற
வேடனுங்கண்டு வெட்டியேபாம்பைக்
கூடவேமையல் கோதைமேற்கொண்டான்
பக்கமேநெருங்கப் பதிவிருதாடன்
அக்கினியிலே யவ்வேடனெரிந்து
வேதவியாசர் மிருமாசிரம
மாதரவாக வவடங்விட்டேகி
செட்டிவாதடக்கச் செட்டியையானை
முட்டியேகொல்ல மொய்குழலாளும்
திருமால்தனையே சேவித்துவணங்கி
வணிகரையெழுப்பி வந்தனள்சுவாகு

தாயாற்வீட்டிற் றனவள்வந்து
வாயாற்புலம்பி வதிமிகக்கலங்கி
தாதிநானென்றுந் தான்பெயரிட்டு
ஏவலுஞ்செய்து விருக்குமந்நாளில்
தந்தையாம்வீமன் றன்புரோகிதரைத்
தேசங்களெங்குந் தேடிவரவெங்க
வந்தவர்கண்டு மாதுக்கிரண்டாங்
கலியாணசுயமரங் களங்கமாய்நாட்டி
வலியவேயயோத்தி மன்னவனறிந்தான்
ராசாவினுடனே நளமகாராசன்
ஓசையாய்த்தேர்விட வூர்கலிதுலைய
விதர்ப்பதேசத்தில் மேவியேயிருக்கத்
தப்புளமொழியாள் தமயந்திகண்டு
வணங்கியேயழைக்க மன்னவனளனும்
இணங்கிலனெனவே யீசனுமுமையும்
வேதனும்வந்து விரவியேகாட்சி
யாதரவாய்த்தவ மளித்தருள்செய்ய
பகர்நளன்மாதும் பதியெனுநிடத
நகரதுபுகுந்து நல்லபுட்கரனொடு
மறுசூதாடி வாழ்வெலாங்கெலித்துத்
திறனவமணியொளி சிம்மாசனத்தில்
நளமுடனிருந்த நகிழ்தமுன்னூலை
நாடகமாக ஓம்நமசிவாய
முறைத்திடுநமிழை யுகமுடிவளவும்
கல்மேலெழுத்தாய்க் கவிப்புலவோர்கள்
சொற்பிழைதிருத்திச் சொல்வதுகனமே

பொது-விருத்தம்,

பொன்னினவமணியிழைத்தமௌலிதோன்றப்
புநிதநுதற்றிலதமதிபோலுநால்வாய்க்
கன்னமதமொழுகுதிருமுகமுமைந்து
கரமதிலங்குசபாசங்காணவேந்தி
பன்னுமறைமுன்னூலாபரணமாடப்
பசும்பொன்னுடையுமிலங்கப்பதாம்புயத்தில்
வன்னமணிக்கிண்கிணியுங் கலகலென்ன
வாலகணபதிசபைவில்வருகின்றாரே

விநாயகர் வருகிற-தரு-இம்- மத்தியமாவதி-ஆதிதாளம்.

ஆதிவிநாயகர்வந்தார்-ஆருவிலேறி-ஆதிவிநாயகர்வந்தார்
காதல்நளன்சரிதை யோதுமதுபேரிதை
சாதனை யுடன் கார்க்கப் போதுமேல்லோரும்பார்க்க ஆதி

வானவர்மலர்தூவ வணங்கிவந்தென்னைத்தாவ
கானமொழிகள்கூவக் கனகசபையைமேவ ஆதி
மும்மதத்துடன்சோதி முச்சுடர்தனக்காதி
நன்மைதருகுநீதி நளன்கதைக்கநுபூதி ஆதி
சோதிமகுடமின்னத் துலங்குமணிகள்துன்ன
நீதியாய்கடாநின்ன நிறைந்தசபைக்குமுன்ன ஆதி

பொது-விருத்தம்.

தட்டிசல்லடக்காரன்றுடிக்காரன்
சரிகைமுண்டாசிக்காரன் சால்வைக்காரன்
பட்டநாமத்திலதப்பொட்டுக்காரன்
பச்சைக்கல்முருகுவண்டிக்கடுக்கக்காரன்
இட்டவெள்ளித்தகுக்காரன்கேலிக்காரன்
இன்பநயஞ்சொல்லவெகு கெட்டிக்காரன்
கட்டழகுபெற்றநளராசன்வாசற்
காக்குமெழிற்கட்டியக்காரனும்வந்தானே.

கட்டியக்காரன்வருகிறதரு-இம்-பூரிகல்யாணி-ஆதிதாளம்

'கட்டியக்காரனுமவந்தானே நளேந்திரன்வாசற்
கட்டியக்காரனும்வந்தானே

கட்டியக்காரனும்வந்தான் றுட்டநிக்ரகமிகுந்தான்
அட்டதிக்கெங்குஞ்சுகந்தா னிட்டமும்பெருகத்தந்தான் கட்
நீடியபிறப்பங்கோலும் நாடியேகொண்டுமென்மேலும்
தாடியுமவாயிற்சால்போலுங் கூடியசபைமுன்னாலும் கட்
சரிகைமுண்டாசுக்கட்டி வெகுலக்கண்ணைமிரட்டி
மருவுங்கச்சையுந்தட்டி யிருகவிசித்துகெட்டி கட்டி
பாரினில்மிகுந்துமோடி வீரநளனைக்கொண்டாடி
ஆரபாரத்துடனாடி பூரிகலியாணிபாடி கட்டி

வசனம் அசோகெதப்படியென்றால் ராசாதிராச ராசமார்த்தாண்ட ராசவுத்தண்ட ராசகெம்பீர ராஜகோலாகல ராசதுரந்தரா நவகண்டங்களும் ஒருகுடைக்கீழாளப்பட்ட நளச்சக்கிரவர்த்தி மகாராசாவே புரிபக்தசிரோமணியான மகாராசனே பராக்பராக் எச்சரிக்கை

பொது-விருத்தம்,

ஒப்பமாயன்பத்தாறு தேசமுமொருகுடைக்கீழ்
திக்கெங்குஞ்சக்கரத்தாற் செலுத்திமன்னர்க்கொற்ற
சப்புடன்றடியுங்கொண்டு தலைதனிற்கணக்குக்கட்டுஞ்
செப்பமாயலங்கரிக்கச் செய்வீரசாம்பன்வந்தான்

வீரசாம்பன் வருகிற தரு இம் தன்னியாசி ஆதிதாளம்,

வீரசாம்பனிதோவார வேடிக்கைப்பாரும்
தேரியவாய்விட்டுக்கூவித் தென்புடனெழுந்துதாவி வீரசாம்

மாடமுக்கும்பெருஞ்சூரி மடியிற்சொருகி மீறி
பாரிக்களுண்டுவாய்நாறிப் பண்புடனுருமிக்காறி வீரசாம்
சொத்தைபல்லுங்கண்ணீர்ளைசொரிந்தவழியுங்கோழை
மெத்தவாயினுற் படித்துச் சுற்றிநின்றோரையடித்து வீரசா
கம்பட்டமடித்துக்கொண்டு சாமிநளன்வாறுரென்று
கும்பிட்டுக்கும்பிட்டுநின்று கோணவாயைமென்னுக்கொண்டு

கட்டியன் வசனம்.

அடாவாடா வெட்டியாரப்பயலே நம்மிடநவகண்டபதியாகியந ளச்சக்ரவர்த்தி மகாராசாகொலுவுக்குவருகிறபடியினலே வெள்ளிவா ழைபொன்வாழை மகுடதோரணம் பூரணகும்பம்வைக்கும்படிக்கும் வீதி அலங்காரம்செய்யும்படியாகவும்தமுக்கடித்து எச்சரித்துவாரும் பிள்ளாய் வீரசாம்பனே.

வீரசாம்பன்சொல் தரு இம் மோகனம் ஏகதாளம்.

திடுந்திட்டந்திடுந்திட்டம்போடுங்கள் நல்ல
திட்டமுடனேசெய்துவையுங்கள் நன்றாய்
வெள்ளிவாழைத்தோரணங்கட்டுங்கள் நன்றாய்
வீதியலங்காரஞ்செய்யுங்கள்
பந்தல்விரிவாகப்போடுங்கள்மிக்கப்
பருத்தவண்ணஞ்சோலை கட்டுங்கள்
பூரணகும்பங்கள்வையுங்கள்மணப்
பூவாலேயலங்காரஞ்செய்யுங்கள்
மங்களசோபனம்பாடுங்கள் மகா
ராஜனுக்கிவ்வாறுசெய்யுங்கள்

பொதுவிருத்தம்

மதிமுகமுந்திருமுடியில்மகுடமின்ன
மணமகாகுண்டலமுஞ்செவியிற்றுன்னக்
கதிதருசெம்புயவளைமுத்தாரஞ்செமபொற்
காந்திதருஞ்சீவரத்நமாலைபூண்டு
விதமுடனேயங்கிதமான்சாதருவும்
விளங்கமலர்க்கரந்தனிலேவில்லுமேந்திச்
சதிருடன்கட்டியங்கூறமறையோர்வாழ்த்தச்
சக்ரவர்த்திநளராசன் சபைவந்தானே.

நளராசன்வருகிறதரு இம் தோடிஆதிதாளம்

நளமகாராசேந்திரன் வந்தான்செகம்புகழும்
நளமகாராசேந்திரன் வந்தான்
தளபதிமந்திரிகள் கூடத்
தத்தைமொழிமாத ராட
வளமிருக்கனிடத யாநகர்தன்னில்வாழும்
களபமுங்கஸ்தூரிபுப புனைந்தவிஸ்தாரப நாமகா

சந்திரவட்டக்குடை தாங்கவே யிருபுறமுஞ்
சாமறைசுருட்டி யோங்கவே
வந்துமன்னர்திரை தேங்கவே வந்தனையுடன்
மானிலத்தோர்கலி நீங்கவே
பைந்தமிழ்கவிஞர்கள் சிந்துபதங்கள்பாட
அந்தமிகுந்தசய துந்துமியொலிநீட
ஆர்த்திடுஞ் சேனையிணங்கப்
யாத்திபரெல்லாம் வணங்க நளமகா

ஆரணம்புகழு நீதியேமறையோர்சொல்லி
ஆசிமகிழ்ந்திட வோதியே
பூரணகும்பங்கள் சோதியேசெழிக்கநிதம்
பூவுலகெங்கும்பிரக் யாதியே
ஆரணக்குடநல்லத் தாரணித் தனங்களும்
வாரணம்பரியுடன்காரண மாகவெங்கும்
மாமறையாளர்க்கு கித்தம்
நேர்முகமாகக் கொடுத்துநளமகா

கதிர்மணிமகுடஞ் சூட்டியே தகதகெனக்
கனகபொற்பணிகள் பூட்டியேசிங்காரநவ
மதனென்னுஞ்சம்பிரமங் கட்டியேஒயிலுடனே
வந்தனநயம்பா ராட்டியே
சுதியுடனே தோடி யிதமுடனேபாடித்
துதிக்குமனமகிழ்ந்து மதிக்குந்தயவுகந்து
சுந்தரமயுயவு தாரப்
பைந்தருவெனுங்கெம் பீர

நளராசன்சொல்விருத்தம்.

சென்னியிற்பாகணிந்து திகழுநற்பணிகள்பூண்டு
நன்னயநமதுவாசல் நயந்தகட்டியனே கேளாய்
சொன்னயமிகுந்தமந்திரி சுமுகனேயின்றுநீயும்
மன்னியசமுகந்தன்னில் வருகவேயழைப்பிப்பாயே

வச்னம் அகோவாரும்பிள்ளாய் கட்டியக்காரா நம்மிடமதியூகிமந்திரியை அதிசக்கிரத்துலழைத்துவாரும்பிள்ளாய்கட்டியக்காரா.

கட்டியன்சொல்விருத்தம்

சீலமுங்குலநீதி தெளிந்ததல்லறிவுமூன்று
காளமுங்கருதியோதுங் கருத்துளவமைச்சநாரே
ஞாலமேபுகழுங்கீர்த்தி நவகண்டநளராசேந்திரன்
கோலமாஞ்சமுகந்தனிற் குணமுடன்வரச்சொன்னாரே

வசனம்.

அகோசரணஞ்சரணமையா சுவாமிதேவரீரவர்களே நளச்சக்கிரவர்த்திமகாராசாவான்வா கொலுவுக்குவரச்சொன்னா ரையா சுவாமி

பொது-விருத்தம்.

தேசமெனுமன் பந்தாறதனைத்தன்கைத்
 திகிரியிலடக்கி வென்றிசெங்கைவேலோன்
நேசமெனுமுறைதவறாதவணியாண்டே
 நிதியுதவுந்தண்டதியாம்பிடதர்சோமான்
வீசுபுகழ்பெருகிவ்ளர் போசராசன்
 விஜயமார்த்தாண்டனெனும்வெற்றிவேந்தன்
வாசல்வளர்மதியூகிமந்திரிமன்னன்
 மன்னவர்பணிகளன் சமுகம்வருகின்றாரே

மதியூகிமந்திரிவருகிற தரு இம் தன்யாசி ஆதிதாளம்.

வந்தனன்மதியூகி மந்திரி-நளேந்திரன்சபைக்கு
வந்தனன்மதியூகி மந்திரி
செந்திருமேவி விந்தைநிடதமுயர்
தந்திரமிகுமதி மந்திரிசபையினில் வந்தனன்
வெற்றிமகுடஞ்சொர்ன அஸ்தக்கடையமின்ன
சுற்றிமாதர்கள்துன்ன நத்துக்கிதங்கள்பன்ன
தந்திரமிகுந்தனன் சத்ரபதியின்முன்ன
தத்துவமுயர்கன்ன சித்தகனிவனென்ன வந்தனன்
அங்கிசார்மாட்டி தங்கப்பணிகள்பூட்டி
துங்கமலர்கள்சூட்டி தங்குங்கீர்த்தியைநாட்டி
பொங்குந்தந்திரங்காட்டி சங்கமிகவேகூட்டி
சிங்கமெனவேமேட்டி யெங்கும்பகையைவாட்டிவந்தனன்
ஆசையதனைநீடி வாசமலரைச்சூடி
நேசமுடனேகூடி பேசுமதுரம்பாடி
தேசமந்திரிகோடி பேசவந்தென்னைத்தேடி
வீசிநடந்துமோடி ராசனசபையைநாடி வந்தனன்

மதியூகிமந்திரிசொல் விருத்தம்.

புவனமீரேழுமோங்கப் புரவலர்வணங்கிப்போற்ற
அவனியோர்குடையிலாளுமண்ணலேயரசர்கோவே
நவமணிமாலைமார்ப நடேந்திரமகிபாயென்னை
யுவகையாயழைத்தசெய்தி யுரைசெய்வீர்சரணந்தானே

வ-ம்,அகோசரணஞ் சரணமையா சுவாமி நளச்சக்ரவர்த்தி மகானுபாவரே தேவரீரவர்கள் அடியேனையழைப்பித்தகாரிய மின்னதென்று அருள்செய்யவேண்டுமையா சுவாமி,

இராசன்சொல்விருத்தம்,

மதிதனிலதிகமான மந்திரிசொல்லக்கேளாய்
அதிபதிமகுடதாரி யரசர்கோன்மற்றுமுள்ளோர்

சதிர்குணபதியின்மேவுஞ் சகலருஞ்சுகங்கள்தானே
புதியதாய்நமதுவார்த்தை புகலுவாய்புகலுவாயே

வ-ம் அகோவாரும்பிள்ளாய் மதியூகிமந்திரியே நம்முண்டய ஐம்பத்தாறுதேசத்து ராசகூட்டங்களும் நிஷதாபுரமாதியந்தமும் அன்னசத்திரமுதலானதுகளும் தேவாலயம் பிர்மாலயமும் செவ்வையாகவும்சுபசந்தோஷகரமாகவும யிருக்கிறார்களா பார்த்துவந்து சொல்லும் பிள்ளாய் மந்திரியே.

மந்திரிசொல்விருத்தம்.

நவகண்டமதனையாளு நளமகாராசனேகேள்
சிவன்செயலாலேயிந்தத் தேசத்திலுள்ளோரெல்லாஞ்
சவுக்கியமுன்கிருபையாலே தானிவரிருக்கிறாகள்
சுபமடியேனுங்கூடத் துணையுந்தன்சரணந்தானே

வ-ம். அகோசரணஞ் சரணமையா சுவாமிநவகண்டபதியாகியநளச்சக்ரவர்த்தி மகானுபாவரேசுவாமியினுடையகிருபையினாலும்தங்களுடையஆக்கினைசக்கரத்தினாலும் அடியேனும் ஐம்பத்தாறுதேசத்துராசகூட்டங்களும்நிஷதாபுரமாதியந்தமும்தேவாலயம்விஷ்ணுவாலயமுதலானதும் அன்னசத்திரமும்சுபமாய்நடந்துவருகுதையாசுவாமி,

இராசன்வசனம்.

அகோவாரும்பிள்ளாய்மந்திரியே நம்முடையபிராணபதமாகிய தமயந்திதேவியைநம்மிடசமுகத்திற்குவரும்படி திட்டஞ்செய்துவாரும்பிள்ளாய்மந்திரியே.

மந்திரிவசனம்

அப்படியே மகாபாக்கியமையாசுவாமி

தமயந்தி சிறப்பு அகவல்.

காரணிகூந்தல் கமழ்தருமலரின்
தாரணிபின்னல் சடைப்பில்லோநாகம்
பகல்மதிப்பிறையும் படரொளித்தரள
நகைமுகம்தனில் நற்பணிதுலங்க
நவமணிச்சுட்டி நன்னுதலிலங்கத்
தவழ்மதிநீக்கிற் றரிவெயிலெரிப்பக்
காதினிலணிக் தகதிர்மணிக்கொப்பு
சோதிமாணிக்கத் தோடதுவிளங்க
பத்தரைமாற்றுப் பசும்பொன்னிழைத்த
முத்துமூக்குத்தி முழுநிலவென்ன
மங்கலந்திகழு மாணிக்கமுத்தணிந்து
தங்கவகட்டிகையின் றன்னிலேமின்ன

அத்தசந்திரார மழகியபவழக்
கொத்துமல்லிகையுங் கொப்பினிற்சூடி
சாமிந்திரநீலச் சரப்பளிபதக்க
தருவியமோகன மாலையும்பொன்னின்
வம்பணிமுலைமேல் வயங்கெழிலியங்க
அம்புலமயரி னஸ்தமுதாரி
கங்கனிச்சூடங் கலைமதினயிரச்
செங்கையில்வளையுந் திகழ்விரலாழி
புனைந்திடுவங்கிப் பொன்பரகுபந்து
வனைந்ததாயித்தி மணியெழில்காட்டங்
துய்யபொற்சரிகை துகளணியிழைமின்
தையலினிடையிற் றகதகவென்ன
மேகலைரத்நம் விளங்குமொட்டியாணங்
தேகம்பசும்பொற் றிருவழகிலங்கத்
தண்டைச்சிலம்பு சதங்கைகள்கொஞ்ச
மணடொலிபொங்க மலர்ப்பதமெட்டியும்
மானிணைவிழியாள் மலர்க்கரமேந்தத்
தானடைபயிலுஞ் சாதியன்னம்போல்
பரிமளசுகந்தப் பனமலர்மாலை
மருவுகஸ்தூரி மான்மதமணிந்து
வாடையெங்கெங்கு மலிமணம்வீச
ஆடவர்மயங்க வமரருந்தியங்க
நாமகளிந்திரை நங்கையர்துதிக்கக்
காமனுமுரதியுங் கைதொழுதேற்ற
விஞ்சையர்கீத மிகுந்துகொண்டாட
நஞ்செனுங்கண்ணார் நாட்டியமாட
தாளமத்தளஞ் சரமண்டலங்கள்
மேளவாத்தியங்கள் மிகவுமேமுழங்க
இருபுரங்கவரி இணையிருந்தோங்க
அருவையர்பாங்கி யாலாத்தியேந்த
தன்னொளிவென்ன மிருதமயந்தி
தன்னகர்மிடத நளனெதிர்வந்தாள்

பொது-கொச்சகம்.

அம்மோகமிழ்ந்துநத லால்வயிறேகொங்கைகரிக்
கொந்திபாதமுதமொழித் தொண்டனிகரோகூந்தல்
செம்பூதலாதிபதித் தீரனளராசனுடன்
சமபோகரஞ்சிதஞ்சேர் தமயந்திவந்தனளே.

தமயந்திவருகிற-விருத்தம்.

கருமுகிலையனையகுழலணிபுமலர்கமகமெனகனகமதிகதிரொளிசெய்இ
ருகுழையுநவமணியுமுகமதியு நிகநிகெனவிலகுதுடியிடைதுவளவேமு

ருகுபரிமளகலபமொளிருபிறைவடமசைய முலேயொளிரவருப துமை போல், தருவளரமரர்முனிவர் மனமுருகியெதிர்பரவு தையல்தமயந்தி வந்தாளே.

தமயந்திவருகிற-தரு-இ-ம்-கலியாணி-ஆதிதாளம்.

அதிரூபசிரோமணிவந்தாள்-தமயந்திதேவி
அதிரூபசிரோமணிவந்தாள்
மதிகதிரொளிரத்ந மாலைதகதகென
அதிவிதநயகுண பதியெனப்புகழ்மிகத்
திதிகூடனுயர்சபை தனிலுறவருஞ்சுக அதிரூப
செங்கை வளைதுலங்கவே-மெய்ய லணித்துச்-சிறந்தபணியிலங்கவே
கொங்கையிணேகுலுங்கவே - வச்ரமணமுக்-குத்தியொளிவிளங்கவே
செங்கைதனிற்பூச்செண்டு சிந்தைமகிழ்வுடன்கொண்டு
மங்கையர்சூழ வணங்கியே தாழவும்
இங்கிதமாமயல் தங்கமெய்போலுயர் அதிரூப
காலிற்சதங்கைகொஞ்சவே-கூந்தலேக்கண்டு-கார்முகிலினமுமஞ்ச
பாலினுமொழிகள்மிஞ்சவேயென்னமுங்கண்டு, பயிலுநடைக்குக்கெஞ்சவே
வாலமதிப்பிறைபோலே சீலநுதலதின்மேலே
மணமுயர்திலதமும் புனேகழல்விழியென
இணையொருவருமிக ரிலேயெனமலர்முக அதிரூப
உபயசாமரைவீசவே-மாதர்கள்நின்று-வுகந்துநயங்கள் பேசவே
சுபப்பன்னீரொளிகூசவே-சவ்வாதுபன்னீ-சுகந்தமாதர்கள் பூசவே
சபையர்ப்புதைத்தநாடிச் சரிகைப்பட்டாடைசூடித்
தவமதுபெருகிய தருநளமதிவளர்
சபையினிலமுகியதமயந்திமெனும் அதிரூப

தமயந்திசொல்-விருத்தம்.

வங்கணத்தோழிமாதே வஞ்சியர்க்கரசியான
சிங்காரவல்லிநாமுந் தேன்வலர்க்காவிற்புக்கிப்
பங்கயமுலலேவாட்சிப் பாரிசாதங்கள்செய்து
இங்கிருபேருமாக ஏகுவோம்வருகுவாயே.

தமயந்தியும் தோழியும்பந்துவிளேயாடுகிற-தரு.

இ-ம்-யமுனகலியாணி-இரத்திதாளம்.

வாரும்வாருஞ்சகிமார்களே-விளேயாடுவம்நீங்கள்
வாரும்வாருஞ்சகிமார்களே.
சீருடன்மல்லிகை முல்லேயிருவாட்சி
சேர்ந்திடுங்கொன்றை யலரிச்சிவந்தியும்
பாரிலுயர்ந்த மருவுங்கொழுந்தும்
படர்ந்தவனத்திற் றடர்ந்துவிளேயாட
சித்திரப்பந்து மிருக்குதுகையிற்
றேன்மொழிப்பாகுடன் சீனிச்சருக்கரை

நத்திருசிக்கின்ற பட்சணமுங்கொண்டு
நங்கையரேநாமு மிங்கிதமாகவே வாரும்

தொண்டலுலாவிய தென்னைப்பனைகளும்
கொழிஞ்சிநாரத்தையுங் கொய்யாப்பிலாவுடன்
அண்டர்துதிக்கின்ற பாதிகிரிப்புன்னை
யரசும்புரசும் வரிசையதாகவே வாரும்

மாடப்புறாக்கொண்ட ளாத்திக்கிளிகள்
மயில்கள்குயிலகளும் வாழும்வனந்தனில்
ஓடத்தடாகமிருக்குதுபட்சிகள்
ஓடிவிளையாடி வேடிக்கைபார்க்கலாம் வாரும்

தமயந்திசொல்-வசனம்.

சதுர்த்தசபுவன சமஸ்தமானதேவரும் புகழ்ந்துகொண்டாடத்தக்கதாக எனதுபிரபலபிரதாப சக்ரேஸ்பராசரணஞ்சரணம்அடியாளை இந்தராஜசபையி லழைப்பித்தகாரியம இன்னதென்றருள்செய்யவேணுமையாசுவாமி.

தமயந்திசொல்-தரு-இ-ம்-தோடி-திரிபுடைதாளம்.

என்னையுமிங்கேயழைத்ததேதையா-என்பிராணநாதா
என்னையுமிங்கேயழைத்ததேதையா
சொன்னமுடிமன்னர் தெண்டுசெய்தேதொழுங்
கன்னிகரில்லாச்சக் ராயுதபூபாலா-என்னை
முந்திவருங்காலமுங்கண்டுமந்திரிகேள்-லோகநீதியுங் கொண்டு
மூடிவணங்கிமொழியுஞ் சபைதனிலே-சாமி
கந்தகஸ்த்தூரி கமழும்புயாசல
செந்திருமேவிய தீரவொய்யாரனே என்னை
எண்ணெழுதேசத்திராசகிரீட்டிகளும்உந்தன்பாதம்போற்றி
யிரைஞ்சுபரவித் தொழுஞ்சபைதனிலே-சாமி
புண்ணியனேநள பூபதியேமன்ன
யெண்ணமில்லாமலே யெங்கன்சகியுடன் என்னை
வித்வசனர்கண்டுமேவியமாதர்களும்-அபிநயமும்பாத
விந்தைபுரியுமுந்தன் சமுகந்தன்னில்
இத்தனைநாளு மிவாமலென்றன்-சாமி
சித்தமகிழ்ந்துத் தெரிவையர்களுடன் என்னை

இராசன்-விருத்தம்.

கன்னலேமயிலேமானே கர்பகக்கனியேதேனே
வுன்னையிங்கழைத்தசெதி யுன்னையாயுரைக்கக்கேளாய்
பன்னகமணிமாடத்தின் பாவுகண்ணாடிதன்னில்
அன்னப்பட்சியைக்கண்டுன்மேலாவலாயழைத்தேன்பெண்ணே

வசனம். அகோவாரும்பெண்ணே தமயந்தி நம்முடையசாபமண்டபத்திலிருக்கிற நிலக்கண்ணாடியிலே அன்னப்பட்சியினிட திழ

லானது தெரியவந்தது அதிருலே அபேட்சையாகஅழைத்தேனடி பெண்ணே.

பொது விருத்தம்.

தங்கப்பிரகாசமான சந்திரமண்டபத்தி
லிங்கிதரதிதன்போலேகாந்தமாயிருக்க
மங்கையாந்தமயந்தியு மருவியமஞ்சமீதிற்
சங்கிதநளராஜேந்திரன் சயனமேசெய்கின்றாரே

தரு-இ-ம்-சாவேரி-ஆதிதாளம்.

சயனமதுசெய்தாரே-நளராஜேந்திரன்-சயனமதுசெய்தாரே
கயல்விழித்தமயந்தி-கனகமடிதனிலே
நிறைகதிரொளிசொர்ணச் சுவரோடுபவழத்தூண்
நிரைநிரை யொருகோடி
மரகதமணிவச்ர-வயிரத்துலாமிழைத்த
மலர்பணிப்பலகை சேர்த்து
எழிலிந்திரையொளிக்கூட் செய்தமண்டபங்கோடி சயன

அரவமணிமிகுத்த தீபங்கணிரைநிரை.
யலங்கரமாய்த் துலங்க
பரவியநவதீபமனந்தங் கோடி
பத்திபத்தியா யிலங்க
கருமுகிற்குழல்நேசகன்னிகவரிவீச சயன

ஆயிரத்தெட்டுமாத்துத்-தங்கச்சங்கிலியுஞ்ச
லழகுபஞ்சணை யாட
தூயமலர்பிச் சொகுசாய்த்தழுவணைமேற்
சுகந்தவாசனை மூட
நாயகித்தமயந்திநளினமின் னுடன்சேர்ந்து சயன

பொது-விருத்தம்.

உத்தமிதமயந்திப்பெண் ணுடன்மகிழ்ந்தழகன்றாளி
மெத்தையினித்திரைசெய்து வேந்தனுங்கனவுகண்டு
சித்தமாயனந்தல்நீங்கித் தேவிகள்முகத்தைப்பார்த்துக்
கொத்தவனளராஜேந்திரன் கூறுவான்கூறுவானே.

இராசன்-கனவுகண்ட-தரு-இ-ம்-எதுகுலகாம்போதி
திரிபுடைதாளம்.

கனவுநான்கண் டேனே-அடிபெண்ணே
கனவுநான்கண் டேனே
மணமகிழ்ந்தின்பசை யோகத்துடன்கூடி
மஞ்சத்தினித்திர செய்யும்பொழுதனில் கனவு
ஏர்க்கவென்னேவல்செய்புஷ்கரராசன்வந்தென்னுடன்சூதாடவும்
பார்க்குளுயர்நிடத பதிசெல்வமானையும்
பந்தியந்தனிற்றோர்க்கவும் அடிபெண்ணே

கார்குலவும்விதர்ப்ப தேசந்தனிற்சொல்லவென்
காதலன்றனை யுனதுதந்தைமுன்
னேகிடும்படி யேநடந்திட கனவு
வனந்தனிலேகாமிருவருமாய்க்கூடிமனந்தளர்ந்தேகிடவும்
இனம்பிரிந்ததுபோலு மனந்தன்னைப்பிடித்திட
வெனந்துயில்போய்விடவும்
கனங்கொளகதிர்மறைந்த இறவிலோர்மடத்தினிற்
கன்னியுனைப்பிரிந் துன்னியரவொடு
பின்னியனலது தன்னில்நடந்திட கனவு
கதிக்கும்ரிதுபன்னன்பால் விதிக்கும்வேலைகள்செய்துகாலம்நான்போ
மதிக்கும்மூவர்வகனை மானேயுனக்குமறு (க்கிடவும்
மணமென்றுகேட்டிடவும்
பதிக்குள்ளுயர்விதர்ப்ப தேசந்தனிலெல்லோரும்
பருதிமணிமுடி காத்திபணிந்திட
வுறுதிநிடதநன் னகரிலிருந்திட

இராசன்வசனம்.

அகோவாரும்பெண்ணே தமயந்தியேமீதா நான்புஷ்கரராசாவி னிடமாகச்சூதாடிநம்மிடஅரசும்பதியும் இழந்துபோனதும்,நாமிருவ ரும்வனத்துக்குப்போனதும்.ஒருவரையொருவர்பிரிந்ததும், உன்னைப் பாம்புவந்து சுத்திக்கொண்டதும்.நான் ரிதுபன்னராசாவினிடமாக யேவல்பணிவிடை செய்துக்கொண்டிருந்ததும்.மறுபடி நாமிருவரும் பட்டாபிஷேகஞ் சூட்டிக்கொண்டதும்,இப்படிக்குவிபரீதகாலங்களா ய்சொர்ப்பனங்கண்டேனடி பெண்ணே.

தமயந்தி-விருத்தம்.

சூரனேநளேந்திரபூபா சொற்பனங்கண்டாலென்ன
நாரணன்கிருபையாலே நமக்கொன்றுமணுகாதையா
வீரனேநினைவல்லாமல் வேறினியிலையெந்த
னுருயிர்ப்பிராணநாதா வையமுமகற்றிடரே,

வசனம். அகோசரணஞ்சரணமையா சுவாமீஎனதுபிராணநாய காகனவிலேபட்டகாயத்துக்குகாயங்கட்டுகிறவர்களுமுண்டோ ஆன தினாலே தேவரீரவர்கள் ஒன்றுக்கும் விசனப்பட வேண்டாமையா சுவாமி.

பொது-விருத்தம்.

துளிர்மதுசுகந்தமாது சொருகுகுந்தளவேற்கண்ணாள்
நளபதிநளனைக்கூடித் தரித்துவயிற்றிற்கர்ப்பம்
வெளிரிடமுகநனக்கண் மிகக்கறுத்திடைபெருந்துக்
கிளிமொழிதமயந்திப்பெண் கெர்ப்பமாய்வருகின்றாளே

தமயந்தி கெர்ப்பமாய்வருகிற-தரு.இம், கேதாரகௌளம். ஆதிதாளம்

கெர்பத்துடனே வந்தாளே தமயந்திதேவி
கெர்ப்பத்துடனே வந்தாளே

அற்புதமடமாத ரனந்தம்பேர் சூழவே
பொற்புள்ளா ரதி பொன்பணி தாழவே
பொங்கமகாய்வரு மங்கையர் நடமிட
விங்கிதவன்பெனத் திங்களி ரைந்துள-கெர்ப்ப

திருகுசக்கிலிகுப்பிச் சொருகுங்குழல்கள்சோர
மருமலரணிந்துபொன் மதிமுகம்வேர்வைசாரப்
புருவங்களைவளைப்பப் புதியதரம்வெளுப்ப
பொங்குசெழுங்கசி யிஞ்சொலதரகவே
துங்கமுடன்பெறு சங்கையில்லாமறு-கெர்ப்ப

தோகைமயிலைப்போலுந் தேகம்பசுரம்புந்
தோன்றும்விழியின்சுவை வேண்டிமனம்விரும்பும்
வாசனமோகினியென்ன லோகநாயகிமின்னாள்
வஞ்சியின்மிஞ்சியே செஞ்சொல்தருங்குயில்
குஞ்சரமும்பயி லுஞ்சரிநடையென-கெர்ப்ப

புடைத்துப்பணைத்துவிம்மித் தடித்திருமாதுதங்கக்
குடத்திருமுலைநுனி யடர்கறுப்பனுமணி
வடத்திலைவலற்றுன்னிப் பிடித்துக்குடித்துக்கன்னி
வங்களகரமிரு செங்கதிரொளியென
வுந்தருபுதல்வனை யங்கருள்புரிந்திடும்-கெர்ப்ப

பொது-விருத்தம்.

ப்ருத்திருதனத்தாளான பைங்கொடிதமயந்திக்குத்
தரித்ததுவயிற்றிற்கர்ப்பங் தவத்திலெனமகிழ்ந்து
கருத்தினில்நளன்சீமந்தக் கலியாணஞ்செய்யவெண்ணிப்
பொருத்தமேபார்க்குநல்ல புரோகிதரழையென்றாரே

பொது-விருத்தம்,

அஞ்சாமலருணகாலமாற்றினிற்றீர்த்தமாடி
நெஞ்சுடன்காயஸ்திரிகள் நேமமாய்முடித்துக்கொண்டு
ரஞ்சிதப்பழுப்புச்சோம னுற்மடிபூணூலிட்டுப்
பஞ்சாங்கஞ்சொல்லும்வேதப் பிராமணர்வருகின்றாரே

பிராமணர்வருகிற.தரு.இம்.சங்கராபரணம்-ஆதிதாளம்.

வாசநான்மறையோன்வந்தானே பஞ்சாங்கஞ்சொல்ல
வாசநான்மறையோன்வந்தானே
காசினியோர்புகழ் போசதுரந்தரன்
ராசனளேந்திரனுக்கு நேசமங்களஞ்சொல்ல வாச
கையினிற்பஞ்சாங்கம்பிடித்து-பிர்ம்மமந்திரக்
கற்பனைவிடாமற்படித்து
செய்யகலையன்புதொடுத்து-வாரக்கிரகங்கள்
சித்திக்குமாசிகளெடுத்து

துய்யநாமந்தாளணிந்து சுத்தவாய்ப்பூணூற்புனைந்து
பையப்பையவேநடந்து பத்மபாதாரம்நினைந்து வாச

அக்ஷதையவர்க்குந்தரித்து ஆசீர்வதித்து
அனந்தசாஸ்த்திரமுங்குறித்து
மெச்சியேமகிழ்ந்து பூரித்து துளபமாலை
மெய்யினிலணிந்துபாரித்து
நச்சரவினிற்றுயிலும் நாரணமுகுந்தநந்தா
அச்சுதகோவிந்தாவென்று அனந்ததோத்திரங்கொண்டு வாச

ஓமளக்கியங்கள்செய்யவே தர்பைகள்கொண்டு
ஓதுமந்திரங்களுய்யவே
பூமலர்தேவர்கள் பெய்யவே துந்துமியார்ப்பப்
புண்ணியவசனங்கள்செய்யவே
சோமசூரியகுலமன்னன் தோகைதமயந்தியர்க்கு
மாமணஞ்செய்யநூலோதமகிழ்வுடன்சபையில்வேத வாச

(வ-ம்) அகோசிரஞ்சீவி ஆசீர்வாதமையா நளச்சக்கிரவர்த்தி மகானுபாவரே நம்மையழைப்பித்தகாரியம் இன்னதென்றுசொல்லவேணும்மகாராசனே.

இராஜன் வசனம்.

அகோசரணஞ் சரணமைம்பாசுவாமி நம்முடையபட்டபூதேவியாகிய தமயந்திக்கு ஐந்துமாதம்கெர்பமாய்வருகிறபடியினாலே சீமந்தமுகூர்த்தஞ் செய்யவேணும்அனபடியினாலேநன்முகூர்த்தம்பார்த்துச் சொல்லவேணுமையர் சுவாமி

பிராமணண்விருத்தம்.

திரனேநளராஜேந்திர ஸ்ரீமந்தமுகூர்த்தஞ்செய்ய
வர்ரமுங்கிரகராசி வளர்இதிநட்சத்திரங்கள்
சீருளதேவியென்று செம்மையாயிருவருக்கும்
பூரணமானயோகம் பொருத்தமாயிருக்குதையா

(வ-ம்) அகோவாருமையா நளமகாராசாவே நாளதுமாதம்௳ழாந்தேதி சுக்கிரவாரம் அமரபக்ஷசம்சப்தமி திதிஅஸ்தநட்சத்திரங்கூடியசுபதினத்தில் ஸ்ரீமந்த முகூர்த்தஞ்செய்யலாமையாராஜனே.

பொது-தரு-இ-ம்-மோகனம்-ஏகதாளம்

சீமந்தக்கலியாணம் செய்தார்அந்தத்தேவர்கள் பூமழைபெய்தார்
வீமன்றனதுசொல்பரித்தார் செக
வேந்தர்கள்தன்மனம்பூரித்தார்
மாமந்திரபீடிகை யாமந்தச்சூடிகை
வறன்மணிக்கொடி பன்பணித்தூணட்டி

தாமந்தநீலமரகதக்கோதக்கோமளச்
சம்பிறமமாடத்திற் பொன்மயில்கூடத்தில் சீமந்த

சித்திரச்சாலைகள் சோடித்தார்மணி
முத்திரச்சாலை மூடித்தார்
கற்றிலுமணிமாலைத் தூக்கினார்புட்பஞ்
சுகந்தபரிமளந் தாக்கினார்
பந்திபந்தியாக வாலாத்தியேந்தியே
பங்கயமலர்விழி நங்கையர்நடமாட
உத்தரதேசாதி வர்த்தனர்மகிழவும்
ஓமங்கள்வேதியர் தூபங்கள்செய்யவே சீமந்த

மங்கைக்குவார்குழற் பின்னினார் மணி
வாளரவச்சுட்டி யெண்ணினார்
கொங்கைக்குவாரழுத் திருக்கினார்மணிச்
கோவைவடங்கள் பெருக்கினார்
செங்கைக்குச்சூடக மூன்கைக்குப்பொன்வளை
திங்கணுதலிற் றிலதமழுத்தியே
பங்கயபாதத்திற் றண்டைசிலம்பிட்டுப்
பச்சைநற்சுட்டிகைப் பாடகமுடுத்தியே சீமந்த

சொன்னமணிமுடி சூட்டினார்தங்கத்
துய்யமிஜாரங்கி மாட்டினார்
வர்ன்னப்பதக்கம் புனைந்தார் கெந்த
வாடைசவ்வாது திமிர்ந்தார்
தன்னமைசுடர்வடி வாள்கையிலுடவே
சந்திரவட்டக்குடை தன்னிழலாடவே
மன்னர்க்குமன்ன னளேந்திரன்றமயந்தி
மங்கைக்குசோபன மங்களம்பாடவே சீமந்த

பொதுவிருத்தம்

சீமந்தமானபின் தேசமன்னவருஞ்சென்றார்
வீமராஜேந்திரன்றானும் விதர்ப்பதேசத்திற்போனார்
தாமரைமலர்முகத்தாள் தையலீரைந்துமாதம்
நேமமாய்நிறைந்தபுன்பு நேரிழைவருந்துவாளே.

தமயந்தி பிரசவேதனைபடுகிற தரு இம் தன்யாசி ஆதிதாளம்.

என்னசெய்குவேனடிபாங்கி யேதுநான்செய்வேன்
அன்னமேயென்மனமுமஞ்சுதுயென்னமா வுழுவேன
சிற்றிடைநோகுதே யடிமாதே செப்புவாயிதே
மெத்தநீர்ச்சுண்டி வலிக்கு இத்தனைப் போதே
அரையுளைக்குது துடைநடுக்குது அன்னமே பாங்கி
இதையிலவுஞ்சகிக்கலாமோ யென்மனந் தாங்கி

அடிவயிற்றை மிகவலிக்குது அம்மம்மா தாயே
துடிக்கிதேபிள்ளை யுள்வற்றிற் சுருசுருப் பாக
படபடென்றுடல நடுங்குதென்னடிபாங்கிசகி மாரே
சடலமெல்லாம் நோகுதென்னடிவாதிசகி மாரே
தன்னினைவுமறந்து தென்மனந்தாளா தின்னே ரம்
மன்னவரிடமாய்ச்சொல்லி வந்தாலுப காரம்

பொது விருத்தம்.

சட்டமாய்த்தலைநரைத்துத் தாள்வாயுமூக்குநீண்டு
வொட்டியவயிறுமார்பி லுத்தோல்முலையுமாட
அட்டலட்சுமிக்கொப்பான வணித்மயந்திமுன்னே
கெட்டியாய்த்தடியுமூட்டிச் கிழவியுந்தோன்றினளே.

மருத்துக்கிழவிவருகிற-தரு-இ-ம்-அடாணு-ஆதிதாளம்,

நரத்தலைக்கிழநாயகி வந்தாள்-மருத்துவம்பார்க்க
நரைத்தலைக்கிழ நாயகி வந்தாள்
உரைத்ததடியையூனி-வொட்டகம்போலேகூனி
யிரைப்புந்திகைப்பாய்நின்று-யிருமிக்கொண்டு நரைத்தலை

திருத்தமுடனவர்க்கு வருத்தமில்லாமல்பேறும் பார்ப்பேன் பிறந்தப்பிள்ளை
உருத்தெரியாமல்மூடுங் கறுத்தகிரந்தியெல்லாந் தீர்ப்பேன் பச்சிலைமூலியை
மருந்துவகைகளெல்லாந் திறத்துடனேபிடுங்கிச் சேர்ப்பேன் தரித்தபிள்ளை
வயிற்றில்மரித்திடினுந் தாட்சியில்லாமற்பெறக் கார்ப்பேன் சேதமில்லாமல்வருஞ்
கன்னிமார்களுக்கொரு பின்னமில்லாமல்வருஞ்
சன்னிசயித்யமெல்லா முன்னித்தெரியுமென்றுநரைத்

நெற்றுசுரைக்கிணையாயொற்றிடுந்தோற்பைமுலை யாடத் தலைநடுங்கிக்
குற்றிருமலுடனே கற்றுங்குசுப்பறிந்து வோடச் சங்கையில்லாமல்
மெத்தவதெனவே புத்திரர்பேரர்விளை யாடக் கிரைவிரைபோல்
ஒத்தகண்களிற்பீளை மெத்தவடிந்துபாணி யோடக் கீழுமேலுமாம்
பார்த்துத்தமயந்தியை வேர்த்துச்சடலமெங்கும்
பூத்தனுலும்பஞ்சுக் கோத்துமிகவெளுத்து நரைத்த

மருத்துவக்கிழவிசொல்-விருத்தம்.

அன்புள்ள தமயந்திப்பெண் ணன்னையேசொல்லக்கேளாய்
முன்பெருதலைச்சனுக்கு மிகுதியாய்வலிகள்தோன்றும்
பின்பெரும்பிள்ளைக்கெல்லாம் பேதையேவலிதோணுது
தன்செயலாலேவுந்தன் சஞ்சலந்தவிர்த்திட்டாயே

(வ-ம்) அகோவாருமம்மாதாயே தமயந்திதேவி முன்னம் பிரசுப காலத்திலே அதிவேதனை யாயிருக்கும் ஆனதினால் தாங்கள்சஞ்சலப் படாமல் சுவாமியை நினைத்துக்கொண்டிருமம்மாதாயே

சீசபத்தியம்.

தயங்குதேயென்மனந் தாளுமோவம்மணி
சடலமோமவதனை தாங்கவெளிதோ
மயங்குதேபுத்தியு மலர்விழிகளிருளுதே
மைந்தனும்நெஞ்சினி லேறுதம்மா
பயங்களுண்டாகுதே பரவிகாளென்செய்வேன்
பதருதேயுடலுநொந் துருகுதம்மா
நாங்களாய்ச்சொல்வதும் நாட்டினிலெவர்களும்
கடுங்கவேசெயகால விடங்களம்மா
தைரியமென்பதுசொல் தாயுமில்லையே
குயின்மொழித்தாதிகள் குழந்தையெனது
வயிர்விடுத்தின்னமும் வருகுதில்லையே
செயல்துணைவருந் தாயுமானசெல்வமே

உ-வது-பிரசவேதனை-புலம்பல்-தரு-இ-ம்-புன்னாகவராளி.

ஏகதாளம்.

ஐயையோநானென்னசெய்யவே னடிவயிறுளைக்குது
ஆற்றமுடியதில்லையே சகிமாரே
செய்யாதுஞ்செய்யுவெந்தன் சித்தமுங்கலங்குவது அம்மா
தெய்வகற்பனைத்தானோடி சகிமாரே
உற்பனமாகியகெர்ப்பமிப்படிவருத்துமென்றுமோ
ரளவுநானறிகிலேனே சகிமாரே
காலனென்பதாகுமிதைப் பாலகனென்றேமொழிந்தாற்
காரணமிதென்னசொல்வீர் சகிமாரே
மேலெல்லாம்வலிக்குதையோ விஷம்போலேறுதேயெங்கும்
வேதனைகடினமாகுதே சகிமாரே
தேகமுநடுங்குவதுஞ் சித்தமுங்கலங்குவதுந்
தீரமருந்தவ்வீரோ சகிமாரே
கோகிலமார்மொழியேயென் குலதெய்வந்தனைவேண்டிக்
கொண்டுதிருநீறணிவீர் சகிமாரே

பொது-விருத்தம்,

அதிகமாய்ப்பிரலாபித்தே யருவைதன்கர்ப்பமுத்திக்
கதிரவனொளிவைப்போலக் கற்பித்தான்பிரமதேவன்
சதிர்பெறுந்தமயந்திப்பெண் சஞ்சலமிகவுந்தீர
மதிகுலம்விளங்கவேதான் மைந்தனும்பிறந்திட்டானே,

தரு-இம்-மோகனம்-ஏகதாளம்,

பாலகன்பிறந்தானே சுபதனத்தில்-பாலகன்பிறந்தானே
கோலநளனமகிழ்க் குவலயமேபுகழச்
சிவன்குலம்விளங்கச் செயபேரிகைமுழங்க பாலகன்
தத்தைமொழியாள்கிண்ணக் குத்துமுலைப்பாலுண்ணச்
சித்தமகிழ்ந்துகூவி மெத்ததமயந்திதேவி பாலகன்
விரைதானம்நளராசன் மிகுதியாய்த்தானங்கொடுக்க
அரசனுந்தழிகவே யிரவலர்பெருகவே பாலகன்
விந்தைமதிகுலத்தில் சிந்தைமகிழ்ந்துதித்த
கந்தனெனவேசொல்லும் சந்திரனெனவேநல்ல பாலகன்

விருத்தம்,

மைந்தனும்பிறந்தேனென்று மன்னனளராஜேந்திரன்
துந்துமியார்ப்பவெங்குஞ் சோடசதானமீந்தார்
மைந்தற்குந்தமயந்திக்கு மஞ்சணீராடச்செய்துப்
புந்தியுமகிழ்ந்துமாது புகழ்ந்துதாலாட்டினளே,

தமயந்திதாலாட்டுதல்-தரு-இம்-கொண்டா-ஆதிதாளம்.

ஆரா ராராரோ ஆரா ராரா ராராரோ
ஆரா ராராரோ ஆரா ராரா ராராரோ

தங்கமுடியணிந்து-எந்நாளும்-தழைக்கும்புவியனைத்தும்
செங்கோல்செலுத்திவரும்-நடேந்திரன்-செல்வமேகண்வளரீர் (ஆ)
இந்திரர்வானவரும்-புகழநல்ல-விலமயில்போல்வளரும்
சந்திரகுலந்தழைக்க-வந்துதித்த-தங்கமேகண்வளரீர் (ஆ)
தெள்ளமுதேயினிக்கும்-மதுரம்-தெகட்டாதமுக்கனியே
வள்ளால்நளேந்திரனுர்-மகிழ்ந்திடும்-மைந்தனேகண்வளரீர் (ஆ)
மண்டலந்தோர்மதிக்கும்-நவரத்ன-மரகதமேதேனே
கொண்டல்மணிக்குயிலே-மயிலே-குழந்தையேகண்வளரீர் (ஆ)
ஆலைக்கரும்பமுதே-சங்கீத-அரும்பொருளேயெனது
மாலைமணிவிளக்கே மயிலேயென்ன-மைந்தனேகண்வளரீர் (ஆ)
ஏக்கம்பிடியாமல்-குழந்தையென்-றில்லையென்றெண்ணுமல்
பாக்கியமானதுபோல வந்துதித்த பாலனேகண்வளரீர் (ஆ)
மெத்தவருந்தவேநான்-சலித்து-மெலிந்துயிர்வாடாமல்
அத்தனருளதனல் வந்துதித்த-வையனேகண்வளரீர் (ஆ)
பாரிலுள்ளோர்புகழ-ராஜாக்கள்-பணிந்திடக்கீர்த்திபெற்ற
வீரசேனென்றன்-பேரனெனவந்த-மெய்யனேகண்வளரீர் (ஆ)

இந்தப்பிரகாரமாக நளச்சக்ரவர்த்தி மகாராசர்வுக்குப் புத்திர சந்தான முண்டானபிறகு சகலதேசத்து ராசாக்களும் மகிழ்வதாகநா மதேயமிட்டு வித்தியார்ப்பியாச முதலானதுகளுஞ் செய்விக்கச்செய் துமனமகிழ்ச்சியா யிருக்கிறநாளையிலே புஷ்மாநகராளப்பட்ட விஷ்க ரராசா தன் கொலுவுக்கு வருகிறவிதம் எப்படியென்றால்.

பொது-விருத்தம்.

இக்குவின்மாரனென்ன விருபுறங்கவரிவீச
மைக்குழலிரதிபெற்ற மாதர்கள்நடனஞ்செய்யச்
சொற்கவிராயர்பாடச் சூழ்ந்துமந்திரிகள்போற்றப்
புஷ்கரராசன்தீரன் புனிதன்போற்கொலுவந்தாரே.

புஷ்கரராஜன்-கொலுவுக்கு வருகிற-தரு,

இம்-ஆனந்தபைரவி-அடதாளம்.

இந்திரனுமிவனென்னவே எல்லோருமகிழவெகு
தந்திரன்புஷ்கரராஜன்சபைதனில்வந்தானே
சுந்தரஞ்சேர்முகமிலங்க விந்தைரத்நமுடிதுலங்கத்
துங்கரணசிங்கமேநா மெங்கும்புகழ்வையோக
வச்சிரமணிப்பதக்கமின்ன வளைகள்வெயில்பரக்கக்-குழை
மகரமணிக்குண்டலங்க ளகிலமெங்குஞ்சிறக்க
கச்சைப்படைக்கலமுங் கையில்வடிவாளுறக்க-வுயர்
கானமயில்வீரனைப்போல் திரேகவொளிசிறக்க
நற்சரவமணியிழைத்த பொற்சரிகைத்துயிலணிந்து
நளினமின்னார்நடனமாட நாவலர்களிசைபாட இந்திர

ஆனைரதகெஜதுரகஞ் சேனைபுடைசூழத்தினம்
அமைச்சர்மதிமந்திரிமா ரடியிணையினிற்றாழத்
தானதிகசயமிகுந்த சந்திரகுலத்திலகனென்னுந்
தத்துபரிமீதுலவுஞ் சித்திரவில்விசயமிகும்
செந்திருவாழமடமாது சிறந்துவிளையாடவிந்தத்
தேசமெங்குமிவன்புகழைத் தினந்தினங்கொண்டாட
மூந்தவருஞ்சநிபலத்தால் மியர்ச்சியெங்குங்கூடவெகு
மூர்க்கத்துடனெதிர்த்தமன்னர் முறிந்துப்பயந்தோட
சுந்திரநளராசனுடன் பந்தயச்சூதாடிவென்று
தொல்லுலகுமுழுதாலும் வல்லவனரேந்திரபதி இந்திர

பொது-வசனம்,

அகோதெப்படியென்றால்இந்தப்பிரகாரம்புஷ்கரமகாராஜாவான வர் கொலுவுக்குவந்த சமாச்சாரந்தெரிந்து சூரியபகவானுடைய பிள் ளையானசநி யீசுரபகவான்புஷ்கரராஜாவினிடமாக வருகிறவித எப்ப டியென்றால்.

பொது-விருத்தம்

புனிதன்மாலயனீசர்க்கும் புகழ்தந்தைக்கதிரோனுக்கும்
சனிதிசையிந்திரனுக்குஞ் சகலசிவர்த்மாவுக்கும்
இனிரிஷிகெற்பத்துக்கு மேழரைநாட்டானென
சனிபகவானும்வந்து சபைதனிற்றோன்றினனே

சநிபகவான்வருகிற-தரு-இ-ம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்.

குவலயம்நடுங்கிடச் சநிபகவானிதோ கோபமாய்த்தான்வந்தார்
தவமுனிவர்களொடு ரிஷிகளிந்திரன்முதல்
தானவர்வானவர் மானவரொடுங்கிட குவல

நீலமந்திரத் கோலும்-பருத்தவுடல
சாலவுநதியும் காலும்
சூலமுந்தண்டு கோலும்-நெத்தியிலிட்ட
நாமமுங்கர நாலும்
ஞாலமுந்தியங்கிட நான்முகன்மயங்கிட
வேலனுமிரண்டிட விமலமருண்டிடகுவல
ஈசனுங்கைலே விட்டே-சுடலேயில்
வாசமுந்துயில விட்டேன்
பூசுரன்றலையைப் புட்டேன் மலைப்பாம்பாக
வாசவன்றனையும விட்டேன்
பாசமோடியமனைப் பாரில்விழுகவென்று
கோசிகனைப்புலியில் குன்றச்செய்குவனென்று-குவல
மனக்கவலேயுந் தீர்ப்பேன்-துதிப்பவர்
வாழ்வுபெற்றிருக்கவைத்தே சார்ப்பேன்
நினைக்கவுமறி யாதபுல்லர்களே
நீசர்க்கடுமையாக்கி பிரியாத
அனைத்துலகுநளனை யாளவைப்பேனேமென்று
வனத்தில்விடுவனென்று வாசகம்பொய்யோவென்றுகுவல

புஷ்கரராஜன்-சொல்-விருத்தம்.

கார்நிறமாகயந்த கலேபகவானேபோற்றி
வாரிசூழ்புவியிற்றேவர் மனிதரைப்பொருட்டாயெண்ணிப்
பூரணமாஞ்சிதேவி புறப்பட்டகதையைப்போலச்
சீருடன்வந்ததென்ன திருவுளம்பற்றுவீரே.

அகோசரணஞ் சரணமையா சுவாமி சநீஸ்வரபகவானே அடியேனை ஒருபொருட்டா யெண்ணிவந்த காரியந் திருவுளம்பற்றவே, ணுமையா சுவாமி.

சநிபகவான் சொல்-விருத்தம்

வானவர்புகழுண்டாகி வளரும்புஷ்கரனேகேளாய்
ஆனதுவொன்றுமல்ல வற்பகாரியமேயாகும்

நான்மெத்தவாசையாலே நற்றமயந்தியாளை
மானிடனளனுஞ்செய்த வஞ்சகந்தன்னைக்கேட்டாயோ

தரு-இ-ம்-புன்னுகவராளி-ஏகதாளம்

நளச்சக்கிரவர்த்திசெய்த-அந்த-நியாயந்தனைகேட்கிலேயோ
விதமாகபூலோகத்தில்-அந்த-விதர்ப்பதேசத்திலே யொருபெண்
தமயந்தியென்றவள்பேர்-பூரணச்சந்திரவதனத்தைக் கண்டவர்கள்
இமையோர்மயங்கிடுவார்-அந்த-இந்திரன் கூடவேயிச்சைகொண்டா
எந்தன்விகாரமெல்லாம்-அவள்.எவ்வனமாகட்டுமென் றிருந்தேன்
அந்தபெண்ணைவிவாகம்-நளன்மன-தாசையினுற்செய்யலாமோகேள்
இருவோரும்வேறாகப்-பிரித்-தென்னவிதனப் படுத்திவைப்பேன்
தருவாகநீதான்போய்-நளன்-றன்னுடன்சூதாட வேண்டுமென்பாய்
பார்ப்பாயரைக்ஷணத்தில்-அவன்-பதியுமரசுனக்காக்கி வைப்பேன்

சனிபகவான்-வசனம்.

அகோவாரும்பிள்ளாய் புஸ்கரராஜனே நான் அந்தத் தமயந்தியைக்கலியாணஞ் செய்யவேணடுமென்று மிகவுஞ் சந்தோஷமாயிருந்தேன் நளராஜாவானவன் தமயந்தியைக்கலியாணஞ்செய்தபடியினாலே நீயிந்தட்சணமே அந்தநளன்கிட்டப்போய்ச் சூதாடினால் அவனைத்தோர்க்கவைத்து உன்னைக்செலிக்கவைத்து அவன்பதியும்அரசும்உனக்கே பட்டாபிஷேகம் பண்ணிவைக்கிறேன் நீர்போய்வாரும் பிள்ளாய் புஷ்கரராஜனே.

புஷ்கரராஜன்-விருத்தம்.

ஈசனையிரக்கவைத்த வென்கலிப்பகவனேகேள்
ராசர்க்குராசனுன நளமகாராஜனுக்குத்
தாசனுன்கப்பங்கட்டித் தன்மையாய்நிற்பன்யானும்
பாசப்வைதேவர்க்காசப் பயந்துநான்போறேனையா.

(வ-ம்) அகோசரணஞ் சரணமையா சுவாமிதிருமூர்த்திகளாயும் நடுங்கச் செய்துவைத்த சநியீசுரபகவானே அந்தநளமகாராஜனுக்கு நான்கப்பங்கட்டுகிறபடியால் எனகுப்பயமாயிருக்கிறது தங்களிடபரிபூரணகடாட்சம் அடியேன்பேரிலிருக்குமட்டும் அடியேனுக்கொருகுறைவும்வாராது நான்போய்வருகிறேன் என்னைவைத்துரட்சிக்கவேண்டுமையா சுவாமி.

பொது-விருத்தம்.

தந்தரமாகச்சொல்லிச் சநிபகவானுஞ்சென்றான்
சுந்தரநளேந்திரன்முன்னே சூதாடப்போகாவிட்டால்
இந்தயேழரைநாட்டானு மெதிர்பகையாகாதென்று
அந்தமாய்நிடததேச மனபுடன்வருகின்றானே.

புஷ்கரராஜா-நளராஜனிடத்தில்-சூதாடவருதல்-தரு
இராகம்-பந்துவராளி-ஆதிதாளம்.

நளபதிசமுகந்தேடி நடந்தான்புஷ்கரராஜன்

அழகானசமூகந்தேடி யமைச்சருடனேகூடி நளபதி
இனியானடனமாடக் கவிராச்சகீதம்பாட
மன்னவர்வணங்கிப்போற்ற மகுடவர்த்தனர்கள்சூழ நளபதி
சூதால்நளனைவென்று தோர்க்கச்செயலாமென்று
வாதாடும்புஷ்கரராசன் மனமகிழ்ந்தேவுல்லாச நளபதி
பருதிமகன்சனிசொல்லப் பண்புடன்றுணிந்துசெல்ல
விருதெனரிஷபக்கொடி வெற்றியுடன்கொண்டுகெடி நளபதி

புஷ்கரராசன்விருத்தம்

திருவடிசரணமையா ஜெயநளராசகோவே
அருமையாய்ப்பந்தயங்க ளநேகங்களாகவைத்து
இருவருஞ்சொக்கட்டானை யெதிரியாய்விளையாடத்தான்
வருகவேவேணுமையா மனதுசந்தோஷமாக

வசனம்.

அகோசரணஞ் சரணமையாசுவாமி நளச்சக்கிரவர்த்திமகாராசனேசொக்கட்டானுடவேண்டுமென்கிறமனதால்வந்தேன் தேவரீரும் அடியேனும்பந்தயங்களுக்குப்பதிலாகஉம்முடைய சீமைபூமியையும் என்னிடசீமைபூமியையும் ஈடாகவைத்தாடுவோம்எழுந்தருள்வேணுமையாசுவாமி.

நளராசன்விருத்தம்

சந்தோஷம்புட்கராநீ சமானமாய்த்தானுட்காரு
முந்தநனமனப்படிக்கே வுச்சிதமாகவெல்லாம்
பந்தயாபரணரொக்கம் பரிவாரமிருவருக்கும்
விந்தையாவைத்துக்கொண்டு விளையாடவருகுவீரே

வ-ம், அகோவாரும் பிள்ளாய்புஷ்கரராசனேசொக்கட்டானுடவேணுமென்கிற மனதாகவந்தீரே உம்மிடமனதின்படியே பந்தயங்களாகவும்மிட சீமைபூமிக்கும் உம்மிடசீமைபூமிக்கும் பந்தயமாகவைத்து சொக்கட்டாடுவோம் வாருமையாராசனே.

சபைவிருத்தம்.

கைமரஞ்சேர்த்திலாத கட்டியவீட்டுக்குள்ளே
கொய்மலரன்றுகாய்த்த கூறுநற்காய்பரப்பிப்
பொய்யவதானமாகப் புரிந்திடுஞ்சொக்கட்டானை
மெய்யென்றுநளராஜேந்திரன் விரும்பியேயாடினாரே

நளராசன்சொல் தரு இ ம் காமபோதியேகதாளம்

போடுகிறேன்பாரும் புஷ்கரனேநான்போடுகிறேன்பாரும்
போடுகிறேன்முன்னுட்டம் பிள்ளையார்தமக்கிது
ஆடுந்துக்கும்பச்சையந்தவிடுதோய்ந்துது போடுகிறேன்

4

வ-ம் அகோவாரும்பிள்ளாய் புஷ்கரராசனே முதல்முதலாகஎன்னக் குழுணைத்தொண்ணூவிழுந்தது இதுவும் தெய்வச்செயலல்லாமல் வேறில்லை நான்துவைத்துக்கொண்டேன் நீர்போடும்பிள்ளாய்ராசனே

புஷ்கரன்சொல்தரு

நான்போடுகிறேன்பாரும் நளமகிபா நான்போடுகிறேன் பாரும்
நான்போடுகிறேனிதோ நலமாய்விஜயசர்க்கும்
நான்போடுகிறேன்விடு நானேதுவைத்துநிற்கா நான்

வ-ம் அகோவாருமையா நளமகாராசாவே நமக்கும்முதல்முதலாகப் பந்தயம்பனிரெண்டு எட்டுஇருக்கால் விழுந்தது நான்துவைத்துக்கொண்டேன் நீர்போடும் பிள்ளாய் ராசனே.

நளராசன்சொல்தரு

எட்டுடன்பனிரெண்டுமேமழரைவேணும்
என்காய்சோடு கட்டவேணுவம்
பட்டுடனேகறுப்பும் பழமேபழுக்கவேணும்
பாரிலாறெண்ணேழு பகடையும்விழுந்தது

வ-ம் அகோவாரும்பிள்ளாய் புஷ்கரராசனே நமக்குப்பந்தயம் இரண்டுபகடை ஆறெண்ணேழுவிழுந்தது இதுவும் அரியின் செயலல்லாமல்வேறல்ல நீர்போடும்பிள்ளாய் ராசனே

புஷ்கரன்சொல்தரு.

இருக்காலும்பகடையிதோ எந்தனுக்கிப்போ
ஒருக்கால்விழுகுமதோ
பெருக்காயிரண்டுமெட்டுமே குங்குமபச்சை
பிரளாமற்சோடுகட்டுமே
சுருக்காகப்பனிரெண்டு சொல்லுமுன்போடுகிறேன்
பிரிக்காமல்நெருக்கிய போர்த்துயிலோடுகிறேன் இருக்கா

வ-ம் அகோவாருமையா நளமகாராசாவே இருக்கால் பனிரெண்டு எட்டுஇரண்டுபத்து விழுந்தது நான்சோடுகட்டிப்போர்த்துஉயிலோடினேன்நீர்போடும்பிள்ளாய்ராசனே,

நளராசன்வசனம்.

அகோவாரும்பிள்ளாய் புஷ்கரராசனே நமக்கு விழுகிறபந்தயமெல்லாம் மூணத்தொண்ணூநாலத்தோரைந்து ஆறெண்ணேழுவிழுகிறதேயல்லாமல் பந்தயம்விழவேயில்லை இதுவும்சிவன்சியலேயொழியவேறல்ல நீர்தானே போடும்பிள்ளாய்ராசனே,

புஷ்கரன்சொல்விருத்தம்

பனிரெண்டும்பனிரெண்டுமே விழுகுதிக்தா
தனியாகத்துடிகொண்டுமே
கனியெடுத்தேன்விளையாட இனியுன்சம்மதங்கூறும்
மனிதர்வலுவோதெய்வவலுவெனக்கிருக்கையால்
சந்திசைபலமர்கத்தானுடவர்செயலில் பனிரெ

வ-ம். அகோவாருமையா னளராசாவேமக்குவிபரீதபந்தயம்விழுந்ததினாலே நான் சோடுகேட்டிப்போர்த்து பழம் ட்ழுத்துவிட்டபடியால் உம்முடையஆட்டம் தோர்த்துவிட்டுதையாராசமேன்.

பொது-விருத்தம்,

மத்தியமான சூதை மன்னவனாடும்போது
சித்தமேபேதித்துமந்திரி திராதுகவலையாகி
மெய்த்தவப்புரிந்தமாது மின்னிழைதமயந்திப்பெண்
பத்தினிசமுகந்தேடிப் பதறியேவருகின்றாரே.

வ-ம். இந்தப்பிரகாரம்நளராசாவானவர்புஷ்கரராசாவுடனேசூதாடித்தோர்க்கிறசமயத்தில் மந்திரிகண்டு விசனமடைந்து தமயந்திதேவியின் அண்டையில்வந்து சொல்லுகிறதெப்படி யென்றால்

மந்திரிசொல்-விருத்தம்.

பைங்கிளிகொடியேயம்மா பாவிபுஷ்க்கரனைக்கண்டு
சங்கையில்லாமல்ராசன் சமதையாயிருக்கவைத்தார்
வங்கணமாகச்சூதை மகிழ்ந்துபந்தயங்கள்வைத்து
இங்கிருவோருமாட விடர்வருஞ்சொன்னேனம்மா.

வ-ம். அகோவாருமம்மாதாயே நம்மிடராசாவானவர் புஷ்கரராசாவைச்சரிசமானமாய் உட்காரவைத்துக்கொண்டு பந்தயங்கள் வைத்து சொக்கட்டாணுடுகிறபடியால் ஏதோஅனர்த்தகாலமாகத் தோன்றுதம்மாதாயே,

தமயந்திசொல்-விருத்தம்.

மந்திரிராசாவுக்கு வந்துமோவிபரீதங்கள்
இந்தமாமொழியைக்கேட்டு விருசெவிகுளிர்ந்துதையோ
அந்தமாஞ்சபையிற்சென்று வரசருக்குகந்தவார்த்தை
தந்திரமாகச்சொலலித் தடுத்துநீவருகுவாயே

வ-ம். அகோவாரும்பிள்ளாய் மந்திரியேஎம்முடைய ராசாவினிடமாகட்போய் உபாயதந்திர மாகச்சொல்லி சூதாடவொட்டாமல் நிறுத்திவைத்து மறுசமாச்சாரம் வந்துசொல்லும்பிள்ளாய் மந்திரியே.

மந்திரிசொல்-விருத்தம்.

பார்தனிலநேகமன்னர் பந்தயம்வைத்துக்கூறி
சூரியகுலத்துராசர் சூதினால்மோசம்போனார்
தாரணிமன்னர்க்கன்று தாசியர்க்கடுத்தவித்தை
வீரனேயிந்தசூதை விளையாடவொண்ணாதையா

வ-ம். அகோ காரணஞ்சரணமையா சுவாமி நளச்சக்கிரவர்த்திமகாராஜாவரே இந்தப்பூலோகத்திலே சூரியகுலத்து ராசாக்களில் வெகு

பேர்சூதாடிசகலமுமிழந்தார்கள் இந்தச்சூதாடுகிறதொழில்தேவதாசிகளுக்கும்யோகமானதல்லாமல்ராசாக்கள் சூதாடக்கூடாதையாசுவாமி

நளராசனுக்கும்மந்திரிக்கும்தர்க்கம் தரு

இராகம்-ஆனந்தபைரவி-ரூபகதாளம்,

ஏதடாமந்திரி இவ்வார்த்தைகளெனனுடன்சொன்னாய்
ஏதடாமந்திரிநீ இவ்வுலகந்தனனில்
சூதினையாடிய தொல்வேந்தரில்லையோ ஏதடா

வசனம். அகோவாரும்பிள்ளாய் மந்திரியே நம்மைச்சூதாடவேண்டாமென்று சொல்லவந்தாயே அதினாலேவருகிற காரணத்தைச்சொல்லும்மந்திரியே.

மந்திரிசொல்-தரு.

நிறுத்துமையாயிருந்தசூதைநிறுத்துமையா
முன்னிந்திரன்சூதினால் பொருத்ததன்பதியருத்திழந்தனன்

வ-ம்- அகோசரணஞ்சரணமையா சுவாமி முன்னாளையிலே தேவேந்திரனானவன் இந்திராணியுடனே சூதாடிதன்னரசும் பதியுமிழந்து போனானையா சுவாமி.

இராசன்சொல்-தரு.

இழந்தனனென்று எனக்குமுன்னின்று
வளந்தன்னைநீரிரைத்தால்-மூன்
தளர்ந்கவர்செம்பொன் அழிந்திடுமென்று
தயங்கிமயங்கிப்பயங்கரமாதலால்
உளந்தனிலொன்றுங் குறையாமலிப்போது
உன்மொழிகொண்டோநான் பொன்னரசால்வந்து ஏதடா

வ-ம். அகோவாரும்பிள்ளாய்மந்திரியே நம்மைச்சூதாடவேண்டாமென்று கொஞ்சமாகிலும் அடக்கம்ஒடுக்கம் பயமில்லாமல் என்னெதிரில்வந்து சூதைநிறுத்துமென்று சொல்லவந்தாயே நாமென்னகொஞ்சமனிதர் கைப்பொருளிழந்து போமென்று மதிமயங்கிப் பயந்து சொல்வார்கள் உள்ளத்திலொன்றுங்குறையாது உன்சொல்லைக் கேட்டோ நான்அரசாளுகிறது சீ அப்பால்போமபிள்ளாய்மந்திரியே.

மந்திரிசொல்-தரு.

அருவதென்று அடிமைமுன்னின்றுநீர்
நீளமொழிகூறலுற்றீர் அந்த
வேளையறிந்து அரசர்க்கமைச்சன்
விளம்புவதென்று தளப்பாமலேபுவி
தாழ்மையில்லாமலே வாய்மைபொறுந்தன்மை
சாஸ்திரத்தின்படி தோற்றியேசொல்கிறேன் நிறுத்து

வசனம். சரணஞ்சரணமையா சுவாமிராசாக்களுக்குத் தோற்றாமல்

துன்பம் வருங்காலத்திலே மந்திரியானவன் தடுத்துச்சொல்லவேணு மென்று தரும்சாஸ்திரத்தின்படியே சொன்னேனையாசுவாமி

இராசன்சொல்-தரு.

சொன்னதினாலென்ன அன்னீதமோஇந்தச்
சூதகற்றுத்தி சொன்றாய்
பன்னுமறைகளை யெண்ணெதிரேநீ
படிக்கிறதென்ன வொருத்தமில்லாமலே
கன்னியரக்கன் வலைதனிலகப்படும்
காமுகர்போலென்னை லாபோவருந்துறாய் ஏதடா

வ-ம்- அகோவாரும்பிள்ளாய் மதியூகிமந்திரியே இந்தச்சூதினாலே மோசமாகுமென்றுவந்து நீதிமார்க்கங்களைச் சொல்லவந்தாயோகாமெ ன்னஸ்திரீமயக்கத்தினால் அகப்பட்டகாமுகர்போலெண்ணி வருத்த ப்படுகிறாய் இனிமேலே என்முன்னே நிற்காதே வாளாலே வெட்டி எறிந்துபோடுவேன் அப்பாலேபோம் பிள்ளாய்மந்திரியே.

மந்திரிசொல்-தரு.

வருத்தமில்லாமல் திருத்தமுடனிந்த
வையகமாண்டிருந்தோம்-நீர்
பொருத்தமுடியு மரசுங்கனமும்
பொருந்துமதியுமிருந்துமில்லாமலே
வெறுத்துமதியுங் கருத்துடனெங்களை
விட்டகலச்சதி தொட்டதுகாணிது சிறுத்

வ-ம். அகோசரணஞ்சரணமையா சுவாமி இந்தனும்பத்தாறுதே சமும் ஆக்கினை சக்கரத்தினாலாண்டு தாட்சியில்லாமல் செங்கோல் செலுத்தி வந்தும் இப்போது சனீசுரன் மாய்கையினாலே எங்களைவரு த்தப்படும்படியாக விருகிறதாய்த தோணுதையாசுவாமி.

மந்திரிசொல்-விருத்தம்

செந்திரிமாதுபோன்ற தேன்மொழியனையாளானும்
உந்தனல்லுரைப்படிக்கு வோடியேவந்தனுர்க்கு
விந்தையாய்வுலகநீதி விளம்பவுங்கேட்டிடாமல்
எந்தன்மாமுனியே தாழ்ந்து விங்குநான்வந்தேனம்மா.

மந்திரிதமயந்தியிடம் வந்துபுலம்பல்-தரு.

இ-ம்-காம்போதி-திரிபுடைதாளம்.

தாயேதமயந்தி ஞாயமினியென்ன சொல்வேன்-நளச்
சக்கிரவர்த்திசெய்த அக்ரமத்துக்கென்னவுய்வேன்
மாயச்சூதாடவேண்டாம்மத்திப மென்றேன்-அந்த
மன்னவரெந்தனைக்கோபிக்கவணங்கி நின்றேன்
தாசன்மொழிதள்ளமோசம்வருமென்று சொன்னேன் மன்னன்
தளராமலதன்கை வாளையுருவினை கொல்ல
காசினியாண்டிடு ராசர்க்குமேதாகாதென்றேன் யானும்

கற்றிடும்வித்தையனைத்தையுங்காட்டிநான்கின்றேன்
கண்டுவணங்கினேன் தெண்டனிட்டேயிங்கு வந்தேன்-தெய்வ
கற்பனையால்வருந்துற்பலமென்றுளம் நொந்தேன்
பொல்லாதபுஷ்கரன் தன்னுடனே மிகச்-சூது அவர்
பிரியமாகவே தேடிக்கொண்டாரையோ வாது
சல்லாபமாகிய தன்னரசுமவின் டாரே சீமை
சகலமும்புஷ்கரராசனேவொப்பிக்கொண் டாரே

வ-ம். அம்மாவாகுமம்மாவாகவே நம்முடையராசாவானவர் எவ்வள வுநீதிசாஸ்த்திரமெல்லாஞ் சொல்லியும் அவர்கேளாமல் அந்தப்புஷ் கரராசனிடமாகச்சூதாடி நமயிட சீமை பூமியானை ரதகசதுரகபதாதி களெல்லாந்தோர்ந்துவிட்டார் இது சனிசுரபகவான் மாயையாயிரு க்குதம்மாதாயே.

பொது-விருத்தம்

மந்திரிசொல்லக்கேட்ட மாத்திரந்தமயந்திப்பெண்
சுந்தரவதனஞ்சோர்ந்து துடித்துமேயணையில்விழுந்து
சிந்தையுங்கலங்கும்போது சேடியருபசரிக்க
எந்தனற்பிராணநாதா வென்றுமேபுலம்புவாளே

தமயந்தி புலம்பல்-தரு

இராகம் பைரவி-ஆதிதாளம்

ஐயோயிதற்கென்னசெய்வேன் என்மந்திரியே
ஆருடன்சொல்லிநோவேன்
வையகத்தரசர்கள் கைதொழுததும்போக
வைதுகைக்கலாச்சே வாழ்வுமரசும்போச்சே ஐயோ
பாருலகும்வேந்தனிடம் புஷ்கரன்பாவி
நேரச்செய்தானே யடம்
தூரனைசூதாடத் தோராமல்ராசனிட
திராப்பகைமுடித்தான் வாராச்சரிபிடித்தான் ஐயோ
சிங்காரமுடிசூட்டியே ராச்சியபாரஞ்
செய்தெங்கும்புகழ் நாட்டியே
பொங்கமுடனேவளர்ந்து பொல்லாச்சூதிற்றளர்ந்து
பங்கப்பட்டுதவேதான்படைத்தானேலோகநாதன் ஐயோ
நாடுநகருமிழந்தோம் பஞ்சைகள்போலே
காடும்மனதுதளர்ந்தோம்
பாடிபட்டுஞ்சேர்ந்தப் பாலருடனேயிருக்க
காடேகும்படியாகக் கலிராசன்செய்தவிந்தை ஐயோ

பொது விருத்தம்

சிந்தையுமெலிந்துவாடித் தேன்மொழிபுலம்பியேதான்
தந்தைதன்னூருக்கேகத் தனயரையனுப்பவேண்டி
அந்தமாஞ்சபையிற்செல்ல வழைத்தநல்லுரையைக்கேட்டு
இந்திரசேனன்றானு மெழுந்துமேவருகிறானே

விருத்தம்.

செந்நிதனில்மகுடமின்னப்பணிகள்பூண்டு
திக்குழையில்ரத்தினக்குண்டலங்களிட்டு
கன்னல்மதன்றனக்கிணையாமிவனென்றெண்ண
கவரிகுடைவாத்தியமெக்காளமூத
தன்னையமாயக்கையினில் வில்லம்புகொண்டு
நாரியர்கள்நடனமிடக்களிகள்கூர்ந்து
மன்னர்மன்னர் துதிக்குளன்சபையைநாடி
மைந்தனிந்திரசேனனிதோவருகின்றானே

இந்திரசேனன்வருகிற-தரு

இராகம்-கமாசு-ஆதிதாளம்,

வந்தானிந்திரசேனன்-ஒயிலாகவே
வந்தானிந்திரசேனன்

செந்திருமலர்முகச் சந்திரோதயர்தயங்கத்
தெய்வரம்பையர்கண்டு சிந்தைமிகமயங்க-வந்தான
சென்னிதனில்மகுட மூன்னிதமாயிலங்கத்
திகழுநூதலிற்றிரு நாமமயமிலங்கக்
கன்னக்குழையில்ரத்னக் கடுக்கன் தகதகென்னக்
கழுத்தில்மோகனமாலைக் கண்டசரங்கள்மின்ன-வந்தான
சரிகையிடையிருக்க சாதருவங்கிதமான
தரித்திடையினிற்சர்வ பூஷணமுமணிந்து
யிருசரணத்திற்றண்டைக் கொலுசுவெண்டயமிட்டு
யிகந்தனினேமார ணினையாச்சவாரிவிட்டு-வந்தான
வெற்றிக்குடையிலங்க வெண்சாமரைகுலுங்க
சுற்றிலுமாகராடச் சூழ்ந்துகட்டியம்பாட
மத்தளமேளதாளம் வையமெங்குமதிர
சுத்தமிகுமாலாத்தி தோகையரேந்திவர-வந்தான

இந்திரசேனன்-விருத்தம்.

ஆவலாயென்னையீன்ற வன்னையேசரணங்கேளும்
பூவினில்விசனங்கொண்டு பொன்முகம்வேறுபட்டுக்
கவலமாகவுள்ளங் கிலேசம்தடைகுவானேன்
ஜீவரட்சகியேயம்மா திருவடிசரணந்தானே,

வசனம், அகோசரணஞ்சரணமம்மா தாயேகாங்காளிக்கனைதுயரத்துடனே அடியேனையழைப்பித்தகாரியம் இன்னதென்று திருவுளம்பற்றவேணுமம்மா தாயே

தமயந்தி-விருத்தம்.

சுருதியேவுனதுதந்தை காசினியரசுமெல்லாம்
பொருதியசூதினாலே புஷ்கரனெடுப்புக்கொண்டான்

உருதுதேசிக்கைதவாடி வுங்களைப்பிரிந்துநானும்
வரும்விதியறியேனின்னம் மைந்தனேயென்னசெய்வேன்,

தமயந்தி-தரு-இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்,]

மைந்தனேநானென்னசெய்குவேன் பட்டமுங்கட்டி
வைத்துநான்கண்டாலோவுய்குவேன்
இந்தகளனிதமாக வுங்களைப்பிரிந்துபோக மைந்தனே
மிககதேர்குதிரையானையும்-ரதங்களுடனே
மிருதிரளாகிய சேனையும்
பொக்கிஷமாளிகைமனையுஞ்-சூதால்பறித்துப்
புஷ்கரன்செய்தவஞ்சனையும்
மககள்மனைவிகளோடு மருவுமுயர்புகழ்நீடு
தக்கவுன்பாட்டனூர் விடுதனிலேநீசென்றுகூடு மைந்தனே
தாயுடன்தந்தைப்பிரிந்து-போகிறோமென்று
தயங்கிடவேமன முறுந்து
காயமோடிருநதாம்பறிந்து-பொன்முடிசூட்டிக்
காசினியாளலாமிருந்து
நேசமாய்மொழிதள்ளாதே நெஞ்சினிற்றுயர்வையாதே
வாயினாலென்றும்விள்ளாதேவஞ்சனையிதென்றுன்னாதே மைந்தன்
மன்னவருனறந்தைமதியே-யிந்தச்சூதாட
வந்ததுமென்றன் விதியே
இன்னமும்வருமோசதியே-அப்பாமகனே
யோகுவீரொன்துப்தியே
பொன்னிரதத்திலேறிப் போய்வாரும்மனதுதேரித்
தன்னிலேவிதனமாறிச் சங்கராபரணங்கூறி மைந்தனே

இந்திரசேனன்-விருத்தம்.

அன்புடனென்னைப்பெற்ற வன்னையேசொல்லக்கேளாய்
துனபமேமவந்தால்பெற்ற சுதனையும்பிரிவாருண்டோ
தென்புடன்பாட்டனூர்க்குச் செல்லெனச்சொன்னீர்நீங்கள்
முன்புசெய்வினையோவம்மா மொழிந்ததுமறந்திடீரே

இந்திரசேனனுக்கும்-தமயந்திக்கும்-தர்க்க-தரு

இராகம்-மத்தியமாவதி-ஏகதாளம்,

தாயேயென்னம்மா பிரிந்துபோகத்
தகுமோநான்கம்மா
ஓயாமலுனைத் தேடிவுள்ளம்பதறிவாடிப்
போயென்பாட்டனைக்கூடிபிரிந்திருப்பதென்னடி தாயே

தமயந்தி-தரு,

பாலாகண்மணியே வுங்கள் மனதுபதறமற்றனியே
ஆலமதையுகந்த வண்ணல்கற்பனைஇந்தக்
காலமதனைவெல்லுங்காரணமோசொல்லும் பாலா

இந்திரசேனன்-தரு.

காரணமேதுளனதுடனே கருத்தாகவோது
தாரணியிழந்துதோ தயையென்னமறந்துதோ
ஆரணமொழிந்துதோ வரசென்னவொழிந்துதோ தாயே
அரசனைக்கண்டான்புஷ்கரன் சூதாலவனிகைக்கொண்டான்
பரதேசியாகவே பதியைவிட்டேகவே
தருவனமெய்திடச் சண்டாளன்செய்திடப் பாலா
அவன்றலைக்கொய்வோம்கலிகள் துன்பமணுகாமற்செய்வோம்
கவலைப்படுவதுண்டோ காரியமேதுகொண்டோ
புவனமுழுதுங்கூறும் பூவையேவிடைதாரும் தாயே

இந்திரசேனன்-விருத்தம்.

எந்தனைப்பெற்றாய்நீயே யேந்திழைக்கரசேதாயே
வந்தனைப்பிரிந்துநாங்க ளொருபோதுமிருக்கமாட்டோம்
விந்தையாம்வனவாசங்கள் மேவுவோமுங்கள்பின்னால்
மைந்தரைக்கூடக்கூட்டி வனந்தனிலேகுவீரே.

வ-ம் அகோசரணஞ் சரணமம்மாதாயே எங்களை யெவ்வளவோதவமிருந்துபெற்றெடுத்து எங்களைவிட்டு நீங்கள் வனவாசம்போய் வருகிறேனென்றால் நாங்களுங்கூடவருவோமம்மாதாயே.

தமயந்தி-விருத்தம்.

சிறுபிள்ளைபுத்தியாகச் செப்பினாயிந்திரசேனா
உறுதியாய்வுங்களைய ருல்கொருகுடையின்கீழே
அருமையேயரசுபெற்று ராக்கினைசக்கரத்தாற்
பெருமையேயதிகமென்று புத்திரனுக்குரைசெய்தாளே

தர்க்கம்-தரு-இராகம்-புன்னாகவாளி-ஆதிதாளம்.

செந்தாமரைவதனதாதை திருமனைக்கேசெல்வாய்
சென்றிருந்தால்நாங்கள் வந்துசேர்வோஞ்சேருபிள்ளாய்

இந்திரசேனன்-தரு.

பிள்ளைபெண்டீர்காடுஞ்சூதால் பின்னொருவர்க்கீய்ந்து
வுள்ளதெல்லாந்தோர்த்தீர் நாங்கள் பிள்ளையென்னசெயவோம்

தமயந்திசொல்-தரு.

என்னசெய்வீரப்பா வுங்கட்கிடராய்ச்சநியிருந்தான்
பொன்னேநவமணியேநாங்கள் போறோம்வனவாசம்

இந்திரசேனன்-தரு

போறீர்வனவாசந்தாயே வுங்கள்பின்னால்வந்தாலென்ன
காரணத்தைநினைந்துயெம்மைக் கடந்துசெல்லத்துணிந்தீர்

தமயந்தி-தரு.

சொன்னேனிளங்குழந்தையென்று தோஷமில்லைசுதனே
அன்னங்கரிசாதங்காட்டி லகப்படுமோவப்பா

இந்திரசேனன்-தரு.

அகப்படுமோவென்றுசொன்ன வம்மாயுன்னைப்பார்க்க
அன்னங்கரிசாதமேகங்கட் கபுரூபமோவம்மா

தமயந்தி-தரு.

அபுரூபசித்திரமேதா னெனையேசொல்லும்வார்த்தை
தவராயமேலேபாட்டனிடந் தானிதோபோயிருப்பீரோ

இந்திரசேனன்-தரு.

போய்வருவந்தாயே புத்திமொழிதட்டாமல்
ஆய்ன்செயலுள்ளபடி யாகுமெந்தம்மா

தமயந்தி-தர்க்கம்-தரு.

இராகம்-பந்துவராளி-ஏகதாளம்.

உந்தனையிழந்திருக்கவு மனதுண்டோகண்மணியே-நீங்கள்
சிந்தைவாடியிருக்காமலே செல்லும் நீசுதனே

இந்திரசேனன்-தரு.

செல்லுமென்றுசொல்லி வந்தசேதியொவ்வாதே
செல்வதுசரியில்லையிது தோதகவிந்தை

தமயந்தி-தரு.

விந்தையாய்விதர்ப்பபுரி மேவிநீயிருந்தால்
எந்தவிதமானாலுமே வந்துசேருவோம்

இந்திரசேனன்-தரு.

சேருவோமென்றுவாதுகூறிச் சேயேநீயுரைத்தாலிது
போராதகாலமோநாங்கள் பின்னேவருவோம்

தமயந்தி-தரு.

பின்னேவருங்காரியத்தை யெண்ணிப்பாராம-லெந்தன்
மன்னவன்சூதாடித்தோத்ததற்கென்னசெய்குவோம்

இந்திரசேனன்-தரு.

என்னசெய்வோமென்று சொல்லியேகவேவுரைத்தால்
சின்னபாலர்தம்மைவிட்டுச் சேருவதுண்டோ

தமயந்தி-தரு.

விட்டுப்பிரிந்திருக்கவேசெய் விதித்தானேபாவி-யெங்கள்
கஷ்டகாலந்தீர்ந்தவுடன் பட்டணம்வருவோம்

இந்திரசேனன்-தரு.

பட்டணத்திற்செல்வோம்நாங்கள் பார்புகழ்விமன்
இஷ்டமுடனேகவிடை மட்டுந்தருவாய்

வசனம் அம்மா சரணஞ் சரணமம்மாதாயே மாதாபிதாக்கள்சொல்லு கிறவார்த்தையைத் தட்டலாகாதென்று தருமசாஸ்திரத்திற் - சொல்லியிருப்பதினால் நாங்கள் விதர்ப்பதேசம் போய்வருகிறோம நீங்கள் மனஞ்சஞ்சலப்படாமல் போய்வாருங்களம்மா தாயே.

வ-ம் அகோவாரும்பிள்ளாய் நளராசனே நீர்தோர்த்த யிரண்டாட்டத்திற்குப் பந்தயங்கள் ஒப்பித்துப்போட்டு அப்பாலே போம்பிள்ளாய் ராசனே.

நளராசன்-விருத்தம்.

எந்தன்ராயசக்காராநீ யியலுடனுரைக்கக்கேளாய்
அந்தமானிடதேசம் யானைகள்சேனையோடும்
தந்தரப்பொக்கிஷங்கள் சமஸ்தானமுதலதாக
இந்தபுஷ்கரனிடத்தி லிக்ஷணமொப்பிப்பாயே.

வ-ம். அகோவாரும்பிள்ளாய் ராயசக்காரா நம்மிடசீமைபூமி யானைரதகஜதுரபதாதிகளெல்லாம் இந்தபுஷகரராசாவினிடத்தில் ஒப்பித்துப்போடும்பிள்ளாய் ராயசக்காரா

பொது-விருத்தம்.

நளராசன்சீமையெல்லாம் நலமுடனிழந்தபின்பு
வளர்பதிரிடதர்கோனும் வனவாசந்தன்னிற்செல்லத்
தளவிலாச்சநிபகவான் றன்னிடசெயலினாலே
நளராசன்போலபுஷ்கர ராசனுமிருக்கின்றனே.

வ-ம். இந்தப்பிரகாரம் நளராசாவானவர் புஷ்கரராசாவுடனே சநிபகவான் மாயையினாலே சூதாடி ராச்சியங்கள் சமஸ்தமானரொக்கம் இதுமுதலானதுகளெல்லாந்தோர்த்தபிறகு புஷகரராசாவானவர் அந்தராச்சியமுதலானதுகளெல்லாம்கைக்கொண்டு செங்கோல்செலுத்த பிறகு நளராசாவானவர் தன்னுடையராச்சிய முதலானதுகளெல்லாம் புஷ்கரராசாவினிடத்தில் ஒப்பித்துப்போட்டு விசனப்படுகிற விதங்காண்க,

பொது-விருத்தம்,

பதியுடனரசுசேனை பரிவாரமானயாவும்
மதிதப்பிசூதாற்றோர்த்து மன்னவன்றலைகுனிந்து
விதியினாற்சனியன்செய்த விதமென்றுமனதிலெண்ணிச்
சதிமோசமானபின்பு தமயந்தியிடம்வந்தாரே

இராசா-முதல்புலம்பல்-கண்ணிகள்,

இராகம்-நவரோஸ்-ஏகதாளம்,

இருபத்தொருவம்சமதா யிருந்தோம்நிஷதாபதியில்
கருமவசத்தாற்செல்லவுங் காட்டிற்றலைவிதியோ
சித்திரமேவியமர்டமுங்கன சேனைகள்தோறும்நவ
ரத்தினமாமணிபீடமும் அதில்நிறைந்தமந்திரிமாரும்
நேயமாகியபெரியோரவந்து நீதியாலெனையடுத்தார்
நியாயமாகவேகேளாமல் நான்சூதையுந்தொடுத்தேன்
சோதிமோகனமாலையுந்திகழ் சொன்னமாமணியிழந்தேன்
அந்தசூதுவேத்தனைசெய்யுமென்பலதநான் தோணுமலேதொடு
(த்தேன்

ஆசாரமுமதில்வாசலுமகழ் வீதிகள்கடந்தோம்
ஒன்றும்பேசாமலேவனமேகுவோம் பெண்ணேவழிநடப்போம்

இராசன்-கலித்துறை

கண்டோர்க்கிருவுட லாவியொன்றுன்னென் கண்மணியே
விண்டானவர்க்கு மலரயன்செய்கின்றவிதியதனு
லுண்டானசூதிட பந்தயத்தாலென்னுளமயங்கச்
சண்டாளன்புஷ்கரன் செய்துவிட்டானடிதையலரே,

நளராசன்சொல்-தரு

இராகம்-பைரவி-நவரோஸ்-ரூபகதாளம்,

அதிரூபசித்திரமேதலை விதியால்மதிமயங்கினான்
ஆளும்புவியனைத்தும் பழித்தாளும்படியானேன்

தமயந்திசொல்தரு,

என்பிராணநாதனேயேனி ரிந்தத்துயர்மனதில்
முன்பாய்ச்செய்யுந்தவப்பலனிதோ மூண்டதோபுவியாண்டதுரையே

இராசன்சொல்-தரு

துரையானசெங்கோலுங்கனை நிறையானகைவேலும்எல்லாஞ்
சூதால்பறிகொடுத்தேன்எந்தன் மாதேபதிவிடுத்தேன் அதிரூப

தமயந்திசொல்-தரு

விடுத்தாலென்னுடுகொடுத்தாலென்னசுநிவினைக்கஞ்சிடலாமோ
அடுத்தோர்நம்மைக்கெடுக்கும்நினைவு அரனிருக்கிறாவரும்விதிக்கெல் (லாம்

இராசன்சொல்தரு,

விதியேதினிசதியாகவே அதியாசைக்கொண்டதினுல்சூதை
விரும்பும்படிவரும்புஷ்கரன விருதாய்வெற்றிக்கொண்டான் அதிரூப

தமயந்திசொல்-தரு.

விருதாவிந்திரன்கெருவத்தாலிந்த விதஞ்செய்தானேகண்டிதஞ்செய்
பொருதாய்க்குப்பினமறுதாயைக்கண்ட
பிள்ளைகள்போலக்கலி கொள்ளலாமோசுவாமி என்

இராசன்சொல்-தரு

கொள்ளுங்கலியுள்ளந்தனி ளெள்ளளவுமில்லையேயுன்னைக்
கூட்டிநடந்தேகியெந்தக் காட்டில்தரித்திடுவேன் அதிரூப

தமயந்திசொல்-தரு

காடேகுவதேதென்னைந்நா நாடேகிராமிருக்கலாம்சுவாமி
வீடாப்பைறவிநவரோஸ்சோடாய் மொழிந்திருந்துவாழலாம் என்

தமயந்தி-கலித்துறை.

பூதேவிசூழ்ந்தபஞ்சாயகோடிப் புவனமன்னர்
நீதேவரென்றுவந்தேதொழுதார் நீங்காதிருந்தால்
சிதேவிவாசத்தினுலு காண்டுதிருப்பிபெந்தன்
நாதாவரு விதியார்செயலோ சொல்லும்நாயகனே

வ-ம், அநேகாவாருங்களையாசுவாமி செல்காலம்நிகழ்காலம்தவிழ்கா லம் இந்தமூன்றுகாலமு மறிந்திருக்கும் தேவரீர் இப்படியிலேசப்படலாமோ எதுகாரியம் எப்படியிருந்தபோதிலும் தைரியலட்சுமியைக் கைவிடாமலிருக்கவேணுமையாசுவாமி,

இராசன்-விருத்தம்.

சட்டமாயழகுபொன்ற தமயந்தியயிலேகேளாய்
விட்டகிழந்தபோதே விதர்ப்பதேசத்தைநோக்கித்
திட்டமாய்ப்பாலரோடு செல்லுவாய்சீக்கிரத்தில்
கஷ்டகாலங்கள்தீரக் கடுகியேவனந்துசெல்வேனே

இராசனுக்கும்-தமயந்திக்கும்-தர்க்கம்-கண்ணிகள்
இராகம்-காம்போதி-ஆதிதாளம்

கன்னியேநான்வனம்போகிறேன் கஷ்டகாலந்தீர்ந்திடவும்
உன்னிடமாய்மனைக்கேகும் உறுதியாய்பெண்ணே

தமயந்திசொல்-தரு
உறுதியாயினதனைநான் உமமுடன்கலந்திருக்கப்
பிரியமனங்கூடுமோநான் பிராணநாயகா

இராசன்சொல்-தரு
நாயகித்தமயந்தியெந்தன் நல்லரசிழந்தபோதே
தாயகமேகுவாயெந்தன் தையலரசே

தமயந்திசொல்-தரு
அரசிழந்துபோனதினாலேயெனையுமைப்பிரியச்
சரசமோசொல்லிரெந்தன் சுவாமிநாதனே

இராசன்சொல்-தரு
நாதனருளால்வந்த காதலருடன்வனத்தில்
வேதனைகளாகத்திரிய வேணுமோபெண்ணே

தமயந்திசொல்-தரு
பெண்ணையுங்குழந்தையுமே பெற்றதாய்மனைக்கனுப்பி
திண்ணமாயும்முடன்வனந்து செய்குவேன்மன்னா

இராசன்சொல்-தரு
சொல்லுவாயுனறனையிடத் தேன்மொழிமாதேநமக்கு
நல்லகாலம்வந்தவுடனே நாமுங்கூடுவோம்

தமயந்திசொல்-தரு
கூடநீர்வந்தென்றகப்பன் நாடுராச்சியமெல்லாம்
ஈடில்லாதரசையாண்டு யிருக்கலாமையா

தமயந்திசொல்-விருத்தம்
போவனேயுன்னைவிட்டுப் பிரிந்துநானிருக்கமாட்டேன்
ஆவலாய்ப்பாலர்தம்மை யனுப்பினேன்றந்தையூரிற்
பூவலநாடுமன்று பிராணநாயகரேயானுஞ்
சீவனையுன்பாதத்திற் செலுத்துவேனென்னமட்டும்

இராஜனுக்குந்தமயந்திக்கும்-தர்க்கம்

இராகம்பைரவிஏகதாளம்.

துரையேயுமைப்பிரிந்துதுணிவாளோ இந்தத்துரைத்தனம்விட்டுத் ;
தரைமீதினிற்றயங்கியங்கியே .

இராசன்சொல்-தரு.

மயங்கியேநான்றியங்கித் திரியவேயிந்தமாநிலந்தனில்
செயமாய்தந்தைப்பதிநீ செல்லலாம்

தமயந்திசொல்-தரு

செல்லவோநான்பிள்ளைகளையும்விட்டுசெகப்பதியிழந்துநாதா
கல்லோமனதிரக்கமில்லையோ

இராசன்சொல்-தரு

இரக்கமில்லையென்றுநீ சொல்லுவதும்என்னை
மறக்கேனொருநாளு முந்தனை

தமயந்திசொல் தரு

நாளுமுந்தன்பாதங்கெதியென்றே சுவாமியுமையல்லாமலே
காலஞ்செய்தாற்சகியனும்பாவி

இராசன்சொல்-தரு

சகியன்செய்தாலவ்விதிக்கென்ன செய்வேன்புஷ்கரன்செய்தான்பாவி
அநியாயந்தாயடுத்துக்கெடுத்து

இராசன்சொல்-கந்தார்த்தம்,

விதியின்பயன்களெனையுந்தொடர்ந்து விகடம்புரிந்தகலியால்
மதியுங்கலங்கமணியுஞ்சிறந்த மகுடம்புனைந்தவாசம்
பதியுந்தொருண்டமதிமந்திரிசேனை பலவும்பிரிந்துதனியே
புதுமன்றல்செய்தவுன்தந்தையூரிற்
போனால்பெருமைதருமோ
இந்தவேஷமுமானாற் கணிசம்வருமோ
மானமில்லாமலே நானுமுன்னோடெதிர்
கோனெழில்விமனுந்தானரசாளையில் போனால்

தமயந்திசொல்-கந்தார்த்தம்

சுல்லாபமானமுடிமன்னர்வந்து சரணம்பணிந்துமகிழ்
வுல்லாசமாகமணியாசனத்தி லுலகோர்குடைக்குளாள
எல்லாமிருக்கவருகேனெனச்சொல்லியல்லோ வெவர்க்குமிலையோ
மல்லார்புயத்தினாசேவிதர்ப்ப
மாநகர்தன்னில்சென்றதால் நம்மையொருவர்
நீளஞ்சொல்வார்களுண்டோதான்
மானறிவாள்புரிக் கானகமேகுவோம்
தேனெனதாருயிரானவேந்தனே மாநகர்

இராசன்சொல்—கந்தார்த்தம்

ஒயிலேமிகுத்தநடை யென்னவஞ்சியுடலேயினைத்தவர்களும்
அயலார்மனைக்குள்மிகவாடியேகி லழகோநமக்குமுறையோ
மயிலேசிறக்கவனமேநடக்கமகிழ்வாயெனக்குவிடைதா
கயலேபழிக்கும் விழியால்மதர்த்த
கண்ணேயென்ருய்மனைசேரும் யென்றமயந்திப்
பெண்ணேவிடையினித்தாரும்
கண்ணேமணியேயிது வுண்மையதாமென
வெண்ணுதலேமன தென்னிருமெண்ணிரும் கண்ணே

தமயந்திசொல்கந்தார்த்தம்.

இடியோசைகொண்டஅரவாமலிந்த விருதாள்பணியெழிலாய
மடமானேபென்சொல் தமயந்தியன்புமறவாமலெந்தனரசே
விடைதாருமென்றுயெனையேமொழிந்த விதமேதுமொன்றுமறியேன்
அரைநாழிகையுமுய்வேனோ வுமைப்பிரிந்து
தரைமீதிலென்ன செய்வேனோ
அரசுமிழந்திட மருவியிருந்திட
இருவர்பிரிந்திட வுரைகள்பகர்ந்திட அரைநாழிகை

இராசன் விருத்தம்.

அன்னிதச்சூதையாடி யால்வனம்போறேனென்ருய்
என்னுடன்வருவேனென்ரு யேதுகாரணங்கள்தானோ
அன்னமீதேறும்பிர்ம னமைத்ததுவீண்போகாது
கன்னியநகரம்விட்டு கானகமேகுவோமே

இராசனும்-தமயந்தியும்-வனம்போகுதல்-தரு
இ-ம்பரசுவகதாளம்

வன்மயிலேயென்னமேயினிவருகுவீர்வனமேகுவோம்
இந்நகர்தனிலென்னரசையு மிழந்துநாணியிருக்கவேமன
தேர்க்கவேபயந் தீர்க்கவேநம்மைக்
கார்க்கவேதுணைப் பார்க்கவேயுண்டோ வன்ன

வாசமாகியமாளிகைவிட்டு வேஷமாறியேவந்ததும்-இங்கு
நேசமானவரொருவருமல்லாது பேசிடாமலேயிருந்தும
நீடவேமுகம்வாடவே எந்தன்கூடவேதுய
ரோடவே பெண்ணே வன்ன

காட்டுக்கிழங்குமிலைகளுண்டேமை வாட்டும்பசியைத்தீர்க்கலாம்
இநதநாட்டிற்காணுதலநிசங்களும பேட்டியாகவேபார்க்கலாம
அடிநங்கையேநிவங்கையே யென்னசங்கையேதீர
மங்கையே இப்போ வன்ன

கோட்டைவாசலுங்கடந்துபாட்டையில்வந்துகூடியே
நாட்டமுடனேபரசுராகமுறுகுட்டும் பதங்கள்பாடியேநமமை

பாதியாடையுமுடனுன்வெய்யில் பத்துமோவெந்தன்கர்த்தனே
நேயமாகியநாயகிதன்னை நித்திரையில்விடுத்தனே
தாயகந்தன்னிற்சேர்வளோவெந்தன்தையலாள்தேடிவாருளோ

பொது-விருத்தம்.

துரும்பிடையொப்பிலாத தோகையையழைத்துவந்து
அரும்பழிசெய்திராஜ னரிவையைத்தனியேவிட்டு
விரும்பியேபிரலாபித்து மெத்தவுந்துயரத்தோடு
திரும்பியேபார்த்துப்பார்த்து சென்றனனயோத்திதானே.

வ-ம். அகோகேளும் இந்தப்பிரகாரம் நளராசாவானவர் தன்பெண்சாதியைக் காட்டிலே தூங்கவைத்துவிட்டு அவளுக்குத்தெரியாமல் அவள்கட்டியிருந்தபுடவையில் பாதிகிழித்துக் கட்டிக்கொண்டு திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டு காடுகள் மலைகள் இதுமுதலானதுகளைத் தாண்டி அயோத்தியாபுரியில் ரிதுபர்னமகாராசாவினிடம்வரவும்போது ரிதுபர்னமகாராசா கொலுவுக்கு வருகிறவிதம் எப்படியென்றால்

பொது-விருத்தம்.

தங்கமாமகுடமின்னச் சரப்பளிபதக்கமுத்துத்
துங்கமாமணியிழைத்த தோள்வளைத்தகதகென்ன
மங்கையர்நடனமாட மதிமந்திரிமார்கள்சூழப்
பங்கயமுகவேள் ரிதுபர்ன னுஞ்சபைவந்தானே.

ரிதுபர்னராசன்கொலுவுக்குவருகிற-தரு-இ-ம்-சஹானா-ஏகதாளம்.

ரிதுபர்னன்சபைவாற வுன்னதம்பார்த்தியல்
பாகவிலாசவுலாசமதாய்
கன்னல்வில்மன்மத னென்னமகிழ்ந்தெழில்
பொன்னகர்மேவிய மன்னவன்போரில் ரிதுபர்னன்

துலங்குமதிவதன மிலங்கிடவேரத்நச்
சுடர்மணிமகுடம் விளங்கிடவேசெம்பொன்
இலங்குகுண்டலஞ் செவிதயங்கிடவேயண்ட
ரெவரும்பபக்துமனந் தியங்கிடவேநல்ல
பிலன்கொளும்சதுரங்கப் பெலன்களும்நெருங்கவே
களங்கமில்லாமல் கவிகைபிடிக்க ரிதுபர்னன்

அரசர்மந்திரிமார்கள் சூழ்ந்திடவேகண்ட
அரிவையர்மயல்கொண்டு வீழ்ந்திடவேசெங்கோல்
தரணிமுழுதுமெங்கும் வாழ்ந்திடவேவந்து
சகலஜெனமுமடி தாழ்ந்திடவேநல்ல
அருமறையவராசி தருகவேகடலோசை
விருதுஜயபேரிகை முரசுமதிர ரிதுபர்னன்

ள

சபை விருத்தம்.

மருவளர்சோலைசூழு மாநகரயோத்திவீதித்
தெருவினிற்பலர்சொற்கேட்டு தியங்கியேநளராஜேந்திர
னுருவமுமனதும்வேறு யுருகியேகலங்கிநெஞ்ச
மருவியவிதனத்தோடு மன்னவன்றனைக்கண்டானே,

ரிதுபர்ணராசன்சொல்-விருத்தம்.

மங்களசமுகந்தன்னில் வந்தவனீதானாரு
எங்கிருந்தெங்குவந்தா யிதற்குமுன்பழக்கமுண்டோ
தங்கியேயின்னதென்ன தனித்துமேயாசனையுமேது
இங்கிதவுன்பேரென்ன விருந்திடும்பதிசொல்வாயே.

வ-ம். அகோவாரும்பிள்ளாய் நீயார் எந்தவூர் எந்ததேசம் எங்கிருந்தெங்குவந்தாய்உன்னிடவூரும்பேரும்தெரியச்சொல்லும்பிள்ளாய்.

நளராசன்சொல்-விருத்தம்.

காவலாநிடததேசக் கருத்துளநளராஜற்கு
ஏவலாயிருந்தேன்யானு மேழுனைநாட்டானாலே
மேவியேவனத்திற்போனார் விட்டுமுன்சமுகந்தன்னிற்
கேவலமாகவந்தேன் கீர்த்தியுண்டெனைக்காப்பாயே.

வ-ம். அகோசரணஞ்சரணமையா சுவாமி மகாராசனே நான் நிஷதாபுரியாளப்பட்ட நளச்சக்கிரவர்த்தி மகாராசாவுக்குச் சுயம்பாகம் சாரத்யஞ்செய்துக்கொண்டிருந்தேன் அவர் சநிபகவான் மாயையினாலே சூதாடி ராச்சியம்விட்டு அவாள்வனத்துக்குப்போனார்கள் தங்களுடைய சமுகத்துக்குவந்தேன் என்பெயர் பாகவனென்று சொல்வார்கள் என்னைவைத்து ரட்சித்திடவேணுமையா சுவாமி.

ரிதுபர்னராசன்சொல்—விருத்தம்.

நியாயமோவென்பால்வந்த நலமுளபாகவாநீ
தாயகமாகவேதான் சாரதியிருவர்கூட
நேயமாயிருந்தையாகி னித்தமுந்தாழ்விலாமல்
ஆயிரம்பொன்கொடுப்பே னகமகிழ்ந்திருந்திடாயே,

வ-ம். அகோவாரும்பிள்ளாய் பாகவா நான் உனக்கு மாதமொன்றுக் காயிரம்பொன்தருகிறேன் நீ நம்மிட சாரதிகளுடனேகூடி சவுக்கியமாகச் சாப்பிட்டுக்கொண்டு சுகமாயிரும்பிள்ளாய் பாகவா.

நளராசன்சொல்-விருத்தம்.

திக்குகளெட்டும்வென்று திரையளந்தரசர்போற்றச்
சக்கிரவர்த்தியென்று சகலதேவருங்கொண்டாட
இக்குவின்மதவேளென்ன விதமனுபவித்தேனெந்தன்
அக்ரமத்தாலேயானு மடிமையாக்காளானேனே.

நளமகாராசன்-தரு-இ-ம்-புன்னாகவராளி—ஏகதாளம்.

மன்னர்புகழ்ந்திட்ட நன்னகர்தன்னிலே வாழ்ந்தேன்-இப்ப
சொன்னபடியேயிரு பன்னிர்க்கேவல்செயத்தாழ்ந்தேன்

பொன்னரியாசனந் தன்னிலிருந்தவ காண்டேன்-எந்தன்
கன்னியைப்பிரிந் தின்னகர்தன்னிலே மீண்டேன்
தாரணிராசர்க்குச் சிறுடனேவிடை கொடுத்தேன் என்னைச்
சாரதிராவென்று கூறவேநானும்பே ரெடுத்தேன்
பாரிலெல்வர்க்கும்பொன் வாரிக்கையால்தினந் தந்தேன்-இப்ப
சோறுசமைத்திட நேரிட்டதால்மன நொந்தேன்
தங்கச்சரிகையி னங்கிமுத்தாரங்க ளணிந்தேன் இப்ப
மங்கைநற்றுயில்பாதியுங்கொய்துபோற்றிடத் துணிந்தேன்
குங்குமங்கஸ்தூரி தங்குஞ்சரீரத்திற் றேனே-பாம்பு
பொங்குங்கவிஷத்தினு லெங்குங்கறுத்திட லானேன்
வஞ்சித்தமயந்தி அஞ்சியெனைத்தேடு வாளோ-தந்தை
வாழும்பின்னகை வராளிசொல்லக்கூடு வாளோ.

நளராசன்காலத்தைவெறுத்தல் விருத்தம்.

சீருலவுநீட்டதகராண்டரூர
சேனைசூழ்பாலனெனுஞ் செழிக்குங்காலம்
பாருலவுமுழுதுமொரு குடையிலாண்டு
பைம்பொன்முடிவேந்தரென்னைப் பணிந்தகாலம்
தாருலகிலன்னமது தூதுக்கேகித்
தையல்தமயந்திமணம் புணர்ந்தகாலம்
காருலவுசோதியெழி லானமேனிக்
கலிராசனென்னைத்துடரக் கருதுங்காலம்
கோலமதாய்வாழ்நிடத நாடிழந்து
கொடுங்கானில்வாழ்சனி குனிந்தகாலம்
பாலவனந்தன்னில்வந்து நித்திரைபோன
பாவையைவிட்டுவரும் பாவிகாலம்
ஆலவிடைநாகமது தீண்டவென்னை
யங்கமெலாநொந்துபுண்க ளானகாலம்
சீல்முள்ளரிதுபர்னன் சொன்னவேலை
செய்யவிதிகொண்டுவந்து சேர்த்தகாலம்.

பொது-விருத்தம்.

துரிதமாய்நிடதமாண்டு சுகத்துடனிருந்தமன்னன்
சரிசநிபகவனென்போன் றன்னிடசெயலினாலே
கருதுரிதுபர்னராசன் காட்டிடயேவல்செய்துத்
திருவிளையாடல்போலச் செய்தவனிருக்கின்றானே.

வ-டி. இந்தப்பிரகாரம் நளராசராவானவர் தமயந்தியை நித்திரையில் காட்டிலேவிட்டுவிட்டு அயோத்திபாபுரியில் ரிதுபர்னராசனிடத்தில் ஏவற்பணிவிடை செய்துக்கொண் டிருக்கே இப்படியிருக்க காட்டிலே நித்திரையில்விட்டுவந்த தமயந்திதேவி நித்திரைதெளிந்து தன்னண்டையிலிருந்த ராசனைக்காணுமல் திடுக்கென்றெழுந்து நாலுபக்கமு மோடிப்பார்த்து ராசனைக்காணுமல் புலம்பித்தவித்த மெப்படி யென்றால்.

பொது-விருத்தம்,

திடுக்கெனவிழித்துமாது திகைத்துராசனைக்காணுமல்
நடுக்கியேபதறியுள்ளம் நாவரண்டழுதுவிம்மி
வடித்திருகண்ணீர்வெள்ள வாரிபோலோடவெங்குஞ்
சடுக்கெனவோடிப்பார்த்து தமயந்திபுலம்புவாளே

தமயந்தி புலம்பல்-தரு-இ-ம்-சுத்தசாவேரி-ஏகதாளம்.

அருகிலிருந்தவரசனைக்காணேனே தெய்வமே-எந்தன்
ஆவிதுடிக்குதே பாவிநானென்செய்வேன் தெய்வமே
இருகண்ணில்நித்திரை யேனின்றுவந்ததோ தெய்வமே-இப்போ
என்பிராணநாதனு மெங்கேபோய்ச்சேருரோதெய்வமே
உருவினகத்தியை யோங்கிவெட்டாமலே தெய்வமே-என்னை
ஒண்டியாய்விட்டு வொளித்திடதர்மமோ தெய்வமே
பரிபாசம்போலென்னைப் பார்த்திடலாகுமோ தெய்வமே-இந்தப்
பாரவனந்தனிற்பயங்கரமாகுதே தெய்வமே
கட்டியிருந்தகலையும்ரெண்டாச்சுதே தெய்வமே-மன்னன்
கையால்கிழித்திடச் செய்திடுமோசதி தெய்வமே
விட்டுப்பிரிந்திட வேளைவந்துற்றுதோ தெய்வமே-நிமிஷ
வேளைதனில்மண வாளன்பிரிந்தாரோ தெய்வமே
சித்திரைதன்னில்நினைவுமறந்தாரோ தெய்வமே-உயிர்
நிருபனைக்காணுமல் நின்றுமயங்கிறேன் தெய்வமே
சத்தியஞ்சொன்னதைத் தானுமறந்தாரோ தெய்வமே-சத்த
சாவேரிபாடினுன் பூவைபுலம்பவுந் தெய்வமே

தமயந்திசொல்-விருத்தம்,

துணைவனுர்மடியிலேநான் சோர்ந்துநித்திரையுஞ்செய்து
மணலிலேதலையைமெள்ள வைத்தெனையொண்டியாகத்
தனலிலேமெழுகுபோலத் தனனிலேபுலம்பிவாடிக்
கணவனுர்பிரிந்துபோன கபடமேதறிகிலேனே.

தமயந்திசொல்லுவது-புலம்பல்-தரு-இ-ம்-தன்யாசி-ஆதிதாளம்,

ஓ பாவிநானென்செய்வே னரண்யந்தனிலேதான்
அழைத்துவந்துவிட்டீரோ பிராணநாதா-சுவாமி
இமைமாறுனுமெந்தன் நித்திரையிலுமுந்தன்
நினைவுமாறறியேன் பிராணநாதா-சுவாமி
இமிசைப்படுத்தவென்னை யிவ்வனத்திற்பிரிந்தால்
என னுயிர்பிழைப்பேனே பிராணநாதா-சுவாமி
பண்டுபரியாசம்போற் பக்கத்தினிலொளிந்தால்
பாவிநான்சகிப்பேனே பிராணநாதா-சுவாமி
மண்டலத்திலுமுந்தன் மடிமேற்றலையைவைத்து

மயக்கிநித்திரைசெய்தேன் பிராணநாதா-சுவாமி
உற்றமனிதரில்லை யொருவர்துணையுங்காணேன்
உருகுதேயென்மனது பிராணநாதா-சுவாமி
இத்தலந்தன்னிலேநா னெங்குங்காணுமே னுமமை
இரங்கிவந்தருளுவீர் பிராணநாதா-சுவாமி

தமயந்திசொல்-விருத்தம்.

சருவியமாலையிட்ட நளபதிதனைக்காணாமல்
அரைநொடிபிரிந்ததில்லை யவருமேநானுமின்று
பருதிகண்டிடுபனிப்போற் பகவானுமெனக்கோ தான்
அருவனந்தன்னிலேயோ வலையவேயமைத்திட்டாரே.

௩-வது-தமயந்தி-புலம்பல்-தரு-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

என்செய்வேனெந்தன்மன மஞ்சுதேத்திவ்வனத்தில்
பஞ்சமாபாவியாகினேன் யென்சுவாமிநாதா
முன்செய்ததீவினையோ வஞ்சகமேசெய்தேனோ
தஞ்சம்வேறுருங்காணேனே யென்சுவாமிநாதா
மானுங்கலையதுபோல் தேனுஞ்சுவையெனவும்
நானுங்கலந்திருந்தேனே யென்சுவாமிநாதா
கானகந்தனிலேதான் மானமில்லாமல்விட்டு
போனதடமுங்காணேனே யென்சுவாமிநாதா
சின்னஞ்சிறுவயதிலென்னை மணம்புணர்ந்த
மன்னவாவென்றுகாண்பேனோ யென்சுவாமிநாதா
அன்னமுடனேமுன்னாள் சொன்னவுறுதியெல்லாம்
என்னமாய்த்தான்மறந்தீரோ யென்சுவாமிநாதா

பொது-விருத்தம்.

உறுதியாய்மாலையிட்ட வுத்தமச்சக்கிரவர்த்தி
மருவியெந்நாளுமின்று வனத்திலெந்தனைவிட்டேக
இருவிழிநீர்களோட வேங்கியேபரதவித்துத்
தருவனந்தன்னில்வீழ்ந்துத் தமயந்திபுலம்புவாளே.

௪-வது-தமயந்தி-புலம்பல்-தரு-இ-ம்-காப்பி-ஆதிதாளம்.

சநிபகவானே தயவுசெய் வோனே
இனியென்னைக்காரையா ஏழைமுகம் பாரையா-சநி
சின்னஞ்சிறுபோதினிற்செங்கைதொட்ட நாதனே
அன்னியமாகவேதொட்டீர் அரசிழந்தலைய விட்டீர்-சநி
பாலகரும்பிரிந்தாரே பத்தாமோசம் புரிந்தாரே
காலம்பொல்லாததாகக் காட்டில்விட்டுப் போக-சநி
சென்றவழிகாணேனே தேடிப்புலம்பினேனே
என்றுவருவாரோசுவாமி என்னைக்காண்பதென்று பாவி-சநி
காட்டில்விடலாச்சே கணவனும்பிரிந்தாப் போச்சே
நாட்டைவிட்டுநலந்தன்னிலேயிருந்தது [illegible] யென்னை சநி

மானுங்கலைபோலே மருவிப்பிரிந் தாலே
யானென்னசெய்குவேனையோ ஆதியிச்சொன்ன சொல்பொய்யோ-சகி

தமயந்திசொல்-விருத்தம்.

இந்திராணிபாம்பைபோற்ற வெழிலுடனிருந்தவென்னைச்
சிந்தைநொந்துசுகமாய்க்காட்டிற் றியங்கவேவிட்டுப்போன
சந்திரகுலமன்னேந்திரன் றனக்குமேபாரியாகத்
தந்திடவென்றேவையா தவமிருந்தென்னைப்பெற்றாயே

௫-வது தமயந்திபுலம்பல்-தரு-இ-ய-பூரிகல்யாணி ஆதிதாளம்.

ஐயாவென்னசெய்வேனிந்த ஆரண்யந்தன்னிலேதான்
செய்யாத்தவம்புரிந்துதேவாலயந் திரிந்து
மையலுடனேபயின்றே வனத்தில்விட்டு ரின்றே-ஐயா
சந்திரகுலபோசன் சக்கரவர்த்தி யிராசன்
வந்தென்னைக்கைதொட்டார் வனத்திலே விட்டார்-ஐயா
பாதச்சரமெட்டும்பாதந்தனி விட்டீர்
பூதலத்தென்காலிற் புழுதிபடிய விட்டீர்-ஐயா
காட்டில்விட்டுப்போன கணவரைக் காணேன்
கூட்டிமுடிப்பாயோ குமாரவெதிர் தோண-ஐயா
பஞ்சணைதனிலே பயிலவைத் தாயே
அஞ்சிவனத்தில் அலையப்பெற் றாயே-ஐயா
கண்களிருளாகுதே காதடைத்துப் போகுதே
பெண்களுள்ளேநான் பொல்லாப்பெரும்பாவியா நீ சொல்லாய் - ஐயா
தாங்கியேமார்பிற்றழுவியே வளர்த்தீர்
வாங்கியென்னுயிரைவனத்திலே விட்டீர்-ஐயா

தமயந்திசொல் விருத்தம்

பஞ்சணைமீதிலெந்தன் பதம்பட்டாலுருத்துமென்றே
அஞ்சலிசெய்துமார்போ டணைத்துமுத்தாடிக்கெஞ்சுங்
குஞ்சரமேருவெந்தன் கொற்றவனென்னைப்பிரிந்து
சஞ்சலந்தீறவெந்தன் றந்தையேயென்னசெய்வேனே.

௬-வது-தமயந்திபுலம்பல்-தரு-இம்-அசாவேரி ஆதிதாளம்.

எத்திசையும்புகழ்மெய்த்தவம்புரிந் தென்னை
யீன்றெடுத்தீரோவெந்தன் ஐயாவே
சித்தமகிழ்ந்துநீயும் பெற்றபெண்ணை வனத்தில்
திகைத்தலைந்திடக்கண்டு சகிப்பாயோமனங் கொண்டு-எத்தி
காவலனென்னையாளுமவனுடனே யன்று
கைப்பிடித்தகுறையோ ஐயா-வென்னை
இப்புனத்தினில்விடவுமெய் யாவே
மேவிநானுன்வயிற்றிற்பாவியாய்வந்தே யுதித்த
பேய்நாயே வழியிலே னையாவே-எத்தி

நாட்டையிழந்துநடுக் காட்டிலெந்தனைப் பிராண
நாதன்பிரிந்துபோக மதி தானோ-சகி
பாதகன்செய்யுமிந்தச் சதி தானோ
வீட்டிலிருந்தேனென்று கேட்டசெவியா லிந்த
வேஷமானேனெனிடப் பொறுப் பாயோ-ஜதி
இருள்வனந்தனிற்றுஷ்ட மிருகங்களைக்கண்டு நான்
எங்குவேனோவிமராசேந் திரன்தமயந்
தாங்குவேனோவிந்த வனந் தி. மே
உருகுதேமனமெந்தப்பெருகுது சாவேரியை
உகந்துசொல்லிவளர்த்த ஐயாவே-எந்தி

தமயந்திசொல்-விருத்தம்

முன்னைவிதியிதன்றே முடித்திடும்பிரமதேவர்
சொன்னசொற்றவறிலாத சுந்தரநளனைக்காணேம்
துன்னிலேபுலம்பிவாடித் தயங்கவேதிரியவிட்ட
என்னுயிர்பிராணநாதா இன்னமும்வரக்காணேனே

எ-வது-தமயந்தி-புலம்பல்-தரு-இ-ம்-எதுகுலகாம்போதி-ஆம.

இன்னம்வரக்காணேனே-என்பிராணநாதன்
இன்னம்வரக்காணேனே
மன்னுயிருந்தன்னுயிர்போ லுன்னியநளராசேந்திரன்
மருவியதேசன்றிருவுரை வாசன்
பிரியமாபாசந்தருளா ராசன் இன்ன
இந்திரன்விடுந்தூதாகச்சிந்தையுமகிழ்ச்சி யா
வந்தவர்மனதுநோகமுந்தான்சொன்னதா லே
அந்தநாள்வர்ம்மங்களுண்டோ அடவியில்வந்துகண்டோ
அதிசுகுணாளன் மதிகுல சீலன்
பதியனுகூலன்துதிமகி பாலன் இன்ன
வேதனையாகவேதேடிச் சூதையும்நான்விளையாடி
நீதிமந்திரியைவாதாடிப் போதைபோல்வனத்தைநாடி
காதமறந்துமிந்தக் காரணஞ்செய்வாரோ அந்தக்
கலைமகள்வேதன்சடைமதி நாதன்
கலைமதியோவென்நலமிகு நாதன்-இன்ன
ராசனுக்கென்றேமனது ஆசைவ்யவிட் டேகினது
தேசமதிலேதனது நேசமுமுண்டோ மனது
காசினியிலெதுகுலக் காம்போதிராகம் பாடிக்
காவினில்வருகப்பாவிநா னுருகச்
சிவனும்பெருக ஆவனுந் தருக-இன்ன

தமயந்திசொல்விருத்தம்.

ஏங்கியேயழுதுவாடி யிருகணீர்ச்சரியவோடி
ஓங்கினுள்வனத்திற்றனு முயர்மலைவனங்கள்பட்சி

பாங்கினில்வருமிருகங்கள் பார்த்துணக்கலக்கங்கூவு
மாங்குயிலெனவேசொல்லி வார்த்தையாலுரைக்கின்றாளே

அ-வது தமயந்தி-புலம்பல்- தரு-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்

மயில்காள்புரவிளங்கா ளெல்லோருமிங்கே
வாழ்மலையேவனங்காள்
குயில்காளெனைக்கூட்டி—வந்தமன்னவன்செய்த
கொடுமையைக்கண்டதுண்டோ முந்த
நான்தான்பிழைகள்செய்தேனோ-புருஷர்மனம்
நலியும்படிக்குவைதேனோ
உண்டோஉலகத்தி-லிதுநித்திரைதன்னில்
ஒளித்துவிட்டோடிப்போவதும்
கரிசனம்போலே யிருந்துகாட்டில்வாடவும்
கருத்துவந்தென்னைமறந்து
கிளிகாளிரக்கமில்லையோ நளன்சேய்தியைக்
கேட்கவென்னுடன் சொல்லையோ
அளிகாள்வரவுங்காணீரோ சொல்லாதிருந்தால்
அருள்பாதங்கள்பூணீரோ
புருஷனைத்தெய்வமென்பதும் நான்குவேதமும்
பொய்யோமுன்னோர்கள்சொல்வதும்
அழகானபெண்ணைக்கண்டாரோ அவள்கொடுத்த
ஆசைக்குசிக்கிக்கொண்டாரோ
தாயுந்தந்தையும்விடுத்தேன்-கணவனையெத்
தேசமெனவேயடுத்தேன்
சேயுஞ்செல்வமுமிழந்தேன்-எனைகொண்ட
சீமான்றன்னையும்வியத்தேன
பழகாதபேளையானும் நம்பிவந்தோரைப்
பழிசெய்யாப்பழிகள்போலும்
காட்டினில்வாழுமன்னங்காள்-காம்போதிபாடிக்
கலித்துரைநீரோமுன்னமே

பொது-விருத்தம்.

கூடியேவனத்தில்வந்து கொற்றவன்றனைப்பிரிந்து
தேடியேபாதவிக்குஞ் சேயிழைபாம்பைக்கண்டு
ஆடியேபடம்விரித்து அரவமுஞ்சந்திரனென்ன
மூடியேராகுபோலமொய்குழல்வருகின்றாளே,

கூ-வது-தமயந்திபுலம்பல்-தரு-இம்-காப்பி-ஏகதாளம்,

தெய்வமேயிதற்கென்ன செய்குவே-னெந்தனெதிரே
தீம்புசெய்திடப்பாம்பு வருகுதே
உய்வதற்கொருவழியுங் காணனே-நெருங்கிவருகு
துடல்நடுங்கவுயிரு மாகினேன்

காலவிஷம்போலாதி சேஷனும்-வுலகமூடிக்
கனலவரவர அனலோ தானிது
ஓடியேபடம்விரித்துச் சீறியே-அரவமென்தனை
உற்றுநிற்கவும்மனது தேறியே
நீடும்புலிகண்டுநடுங்கச் சீறுதேகாணவென்தனை
நெஞ்சமிகவுங்கலங்க லாச்சுதே
மன்னவாமனதிரக்க மில்லையே-அரவந்தன்னையோ
வதைத்தபிதன்னுயிரைக்காக்க வில்லையோ

## முறை யிடுதல்.

திங்களணிவேணியனே முறையோமுறையோ
தேவரயன்முனிவர்களே முறையோமுறையோ
அங்கமெல்லாமரவஞ்சுற்றி முறிக்குதையோ
ஆகாயம்பூமியிரு ளாகுதையோ
துங்கநெடுமாலரியே முறையோமுறையோ
நங்கைதன்னைவனத்தில்விட்டாய் முறையோமுறையோ
நளேந்திரனேஉந்தனுக்கு முறையென்றுளே

௰-வது-தமயந்திபுலம்பல்-தரு-இ-ம்-காம்போதி-ரூபகதாளம்.

அரிநாராயணவாசுதேவனே
ஐயோயிதற்கென்ன செய்வேனேசுவாமி
கருநாகமுமலைபோலென்னைக்
கண்டனேசீறிக்கொண்டுவருகுதே அரிநாரண

இருகண்ணிலுமெரியுதேதண
லீசுரனார்விழிதனக்கொப்பாகவே
திருமாதுபங்காளாயென்ன
செய்குவேனிதற்கெப்படி உய்குவேன் அரிநாரண

மாலையிட்டுவனத்தில்விட்ட
சிலன்றனைத்தேடிவந்த
சோலைதன்னிற்பாம்பைக்கண்டல்
துடிக்குதேகைகால்நடுக்குதேஐயா அரிநாரண

காலனெனவோலமுடன்
சால்வருமரவைக்கண்டு
வேலைத்துரும்பாகச்சடலம்
மெலியுதேமனக்கிலியுமீறுதே அரிநாரண

பூண்டான்மையல்வேண்டாமென்று
புகன்றேனன்றுபுநிதன்வைத்த
காண்டாவனந்தன்னிலேமேவிய
கருநாகமோரமறுநாகமே அரிநாரண

அ

திண்டாமல்முன் றியக்கச்சநி
வேண்டாவெறுப்பாவேஷமாய்த்
தாண்டிக்கொல்லவேண்டிவந்த
சதியோவிலேவிதியோசுவாமி அரிநாரண

பரதேசிபோற்றரியவிட்ட
அரவுக்கிரையளித்திடவென்னைப்
புரியுந்துயில்தன்னிற்பிறந்த
புண்ணியனே யென்கண்ணிற்காணேனே அரிநாரண

மதிதேவனே குருநாதனே
ஒருதுணையும்வரக்காணேனே
கிருபைவைத்துவரவேணுமென்
சரணம்காக்கச்சரணம் அரிநாரண

பொது-விருத்தம்.

ஐயையோசிவனேயென்று அலறியேயழுதசத்தம்
வெய்யதோர்வனத்தில்வாழும் வேடனுங்காதில்கேட்டுப்
பையவேசென்றுநாமும் பார்த்துமேவருவமென்று
மெய்யிருள்வனத்தில்வேட விபுதனுமவருகின்றானே.

இதுவுமது

வல்லயம்வெடி துபாக்கி மருந்துகுண்டம்புறுத்தூணி
மெல்லவேதடியுங்கொண்டு வேட்டைநாய்க்கைவிற்பிடித்துச்
செல்வியாள்தமயந்திப்பெண் தியங்கியவேளைதன்னில்
வில்லம்புகையிற்கொண்டு வேடனும்வருகின்றானே

இதுவுமது.

முடிக்கிலங்கப்பொற்சரிகைச் சந்திரகாவி
மோகவுறுமால்கலிக்கி முறையாய்பூண்டு
வெடிக்கிமருந்துடனே துப்பாக்கிக்குண்டு
வில்லுமெறியீட்டியம்புறுத்தூணிபூட்டித்
துடிக்கவரிப்புலிகொடிநாய் வலையுங்கன்னித்
தோளிலிட்டசலடமும் கச்சைகட்டி
மடிக்கமலேப்புபங்கச்சைகட்டி
மாதுதமயந்திமுன்னே வருகின்றானே.

வேடன்வருகிற-தரு-இ-ம்-மோகனம்-ஏகதாளம்

வந்தான் விபுதகெம்பீரன்-காட்டில்-வாழும்வேடர்க்கதிரூரன்.

வந்தான்விபுதகெம்பீரத்துட னென்னே
வாய்விட்டலறிமங்குவதா ரென்ன
முந்தியவேகத்துடன்பனங் கூடியே
முதன்-நீடியகாடெங்குந் தேடியே-வந்தா

வெற்றிவில்லம்புடன் பற்றிக்கரையில் கண்டு
வேலுஞ்சக்ராயுதச் சூலப்படை கொண்டு
கொற்றவர்மாமலர்சிரத்தினிலே சூட்டிக்
கொம்பனைவெம்பியதுன்பமதா வெட்டி-வந்தா

வெம்புலிபன்றிகள் தும்பிகள் வாடியே
விரிட்டோடுதுங்கிமிரண்டெதி ரோடியே
அம்பரமும்புவியும்பரநடுங் கிட
ஆர்ப்பரிக்குமபடிதுயர்ப்படுத்துங் கொடி-வந்த

ஆவென்றலரியபாவையின்வாய் மொழி
யாமெனவேமனவேகத்துடன் வழி
காவிலுயருழைமாவுநடுங் கிட
கன்னியரைசற்றும்பணமொடுங் கிட-வந்தா

வேடன்சொல்-விருத்தம்.

ஆரம்மாயிவ்வனத்திலாதிலட்சுமியோநீதான்
பார்வதிதானோபிரமன் பாரியோரதியோநீயார்
நேர்மையாய்கானகத்தில் நிதம்வாசங்கள்தானோ
ஊருடனபேரு முண்மையாயுரைசெய்வாயே.

(வ-ம்) அகோவாருங்களம்மாதாயே நீயார் லட்சுமிதேவியோ பார்வதி தேவியோ சரஸ்வதியோ இந்திராணியோ ரதிதேவியோ அல்லவென்று இந்தவனங்காக்கப்பட்ட வனதேவதையோ உன்னுடைய வூரும் பேருஞ்சொல்லவேண்டுமம்மாதாயே

தமயந்திசொல்விருத்தம்.

புவனத்தில்விதர்ப்பதேசம் புகழ்பெறுவீமராசன்
தவத்தினால்வந்தபுத்ரித் தமயந்தியென்றுநாமம்
நவகண்டநளராசர்க்கு நான்பாரியானபின்பு
கவனமாய்வனத்தில்வந்து கணவனைப்பிரிந்தேனண்ணே

(வ-ம்) அகோவாரும் அண்ணே வேடனே நான் விதர்ப்பதேசமாளப்பட்ட வீமராசன்புத்திரியாச்சும் என்பேர் தமயந்தியென்று சொல்வார்கள் நவகண்டமுமாளப்பட்ட நளச்சக்கிரவர்த்திமகாராஜாவுக்கு நான்பாரியானபின்பு சநீஸ்வரபகவான் இடுக்கத்தினாலேநானும் ராசனும் வனத்துக்குவந்தோம் வந்தவிடத்திலே அவர் என்னை விட்டுப்பிரிந்து போனார் அவரைத்தேடிக்கொண்டு வருகிற வழியில் இந்தமலைப்பாம்புஎன்னைச்சுற்றிக்கொண்டு ஆகடியஞ்செய்யுதண்ணே வேடனே.

வேடன்சொல்-விருத்தம்.

அந்திரமானகாட்டி லரிவையேவுன்னைக்கொல்ல
வந்திடும்பாம்புதன்னை வைத்துனதுயிரைக்காட்டேன்
சிந்தனைசெய்யவேண்டாந் தேன்மொழிமாதேயிப்போ
எந்தன்கைவாளினாலே யிருதுண்ட முஞ்செய்குவேனே.

(வ-ம்) அகோவாருங்களம்மா தாயே நீங்களொன்றுக்கும் விசனப்படவேண்டாம் என்கையிலிருக்கிற பாணத்தினாலே இந்த மலைப்பாம்பையிருதுண்டாகச்செய்துப்போடுகிறேன் அம்மாதாயே.

தமயந்தி-சொல்விருத்தம்.

சுற்றியேபாய்மைவேடன் துணித்திடப்பாணத்தாலே
வெற்றிசேர்தமயந்திக்கு விமோசனம்வேடனாலே
சுத்தமாயிடுக்கண்தீர்த்துத் தோகையுமகிழ்ச்சியாகிப்
பெற்றிடதந்தையண்ணே பிராணநாதனைக்கண்டீரோ

(வ-ம்) அகோவாருமண்ணாவேடனே எனக்குமலைபோலவந்த ஆபத்தைதீர்த்தமட்டும் என்னைப்பெற்றுவளர்த்த தகப்பனாக வந்தாய் நீவருகிறவழியில் என்பிராணநாயகரான நளமகாராசரைக் கண்டிருந்தால்சொல்லவேணும் அண்ணாவேடா.

வேடன்சொல்-விருத்தம்,

துணையொருவருமில்லாமற் றுயரமாய்வனத்திலேதான்
கணவனைப்பிரிந்துநீயுங் கலங்கிநின்றழுவதேனோ
புணரியிலருக்குனாறுனும் போய்விழுந்திடுமுனெந்தன்
மணமிருங்குடிசிற்செல்ல மங்கையேவருகுவாயே.

வ-ம் அகோவாரும்பெண்ணே தமயந்தி இந்த அனுந்திரமான காட்டில்அரசனைத்தேடிக்காணாமல் கெதி கலங்கி நிற்கிறாய் சூரியனஸ்தமானமாகுமுன்பாக எனகுடிசைக்குப் போவோம் வாரும் பெண்ணே தமயந்தி.

தமயந்திக்கும் வேடனுக்கும் முதல் தர்க்கம்-தரு-இ-ம்

முகாரி ஆதிதாளம்.

வாருமென்றெனைக்குடிசிற்கூறுறும் வேடனே அடா
பாவிமதியுனக்குவந்ததென்னசதியோடா
சதிசெய்தமன்னனைத்தேடிக்கெதிகலங்கியே-அடிபெண்ணே
தயங்குறாயென்றன்மனதுமயங்கினேன்பெண்ணே
மயங்கநீவேண்டாமிகுந்தபயங்கரமானபாம்பை
வதைத்துநீசெய்யுந்தர்மத்தைச்சிதைக்குறாய்வேடா
தர்மமுந்தனுக்கென்மீதில்வர்மஞ்செய்யாமல் அடிபெண்ணே
சந்தோஷமாகவேபின்னேவந்திடாய்கண்ணே
பின்வருங்காரியந்தன்னை யெண்ணிடாமலே-அடபாவி
பேசுதபாலிறந்துனர்காண்காதலால்-வேடா
காதலாயெந்தனுக்கென்று ஆதரவாகவேநீயும்
கானகத்தில்விற்றிருப்பேபாந்தாணிதப்பெண்ணே
நீதமெனக்குதந்தமன்னன் சதமல்லாய்வேடாபாவி
நேயனைவைத்திழுக்குமுந்தன் நாயடாபோடா
பேயமாயழுத்து மாயமாய்விட்டுப்போன
நிருபனுக்கேதுக்கனதுவருகிறாய்பெண்ணே

வேடன்சொல்-பத்தியம்.

சித்ரமேயொளிமேவு ரத்னமேதிகழ்பூர்ண
திங்களேயபரஞ்சிதங்கமேதான்
கத்தநவரசவினியபுத்தமுதமேசெகந்
துதிசவுந்தரமதன் துணையிரதியே
நித்யவானவரரசுபெற்றவிந்திராணியே
நிகரிலாவமுதமே நின்றவனமே
சித்தமுன்னிருபதத்தினுமர்ச்சனை
செய்துபலகாலமுநீதெண்டனிட்டேனோ
இத்தலந்தன்னில்வரு மத்தைமொழியே
கொத்துவழிபெற்றதொருமெய்த்தவமோதான்
சித்துபெறுமுத்தியருள்சததியிவளே
உத்தமியைவிட்டுமிகவுய்யவசமோ.

வேடனுக்கும்-தமயந்திக்கும்—உ-வது-தர்க்கம்-தரு.

இ-ம்-புன்னாகவராளி-ஏகதாளம்.

அன்னமேநான்மோகமாகினேன்மெத்த
ஆவனுடனேகூடிமேவியிருந்திட
வன்னமயிலேகுயிலேதிரு
வாலமதிபோனுறுதல்வேலின்விழிபாலினமொழி அன்னமே

தமயந்தி.

என்னடாவாய்மதஞ்சொன்னாய்வேடா-வுந்தன்
இச்சையினால்மனதச்சமில்லாமலே
முன்னமேமடமாதர்களால்வெகு
மோகமதனாலேகெடுமோக்கமதிலெண்ணாமல் என்னடா

வேடன்.

வங்கணமாகிபதாயிருவருமனைக்குள்ளேகியேநாம்
இங்கிதவேள்ரதிபோலத்தனமுமிருந்திடலாமினிமேல்
மங்கையென்மாதேவருவாயிப்போதே
சங்கையென்னாதேதடுத்துரையாதே
சம்பிரமதாயென்னையடிமைப்படுத்திடும்
அம்புயனேர்விழிநீர்கள்துடைத்திடும்
லங்கமேயுந்தனல்லக்கமனைத்தொடத்
தாளுந்தில்லைமனங்கேளுமினிநல்ல அன்னமே

தமயந்தி.

பஞ்சையென்றேகுறித்தாய்வரும்விதிபாரமலேயுரைத்தாய்
கெஞ்சுவதேதுக்கடாஉனதுசொல்கேட்பதுமேதுக்கடா
அஞ்சுகமேது அகல்வாயிப்போது
கொஞ்சத்தினத்தைக்குறியாமனத்தை
கோபமுன்டாமென்னிடமோதில்லாதே
பாபஞ்செய்யாதே பழுதுசொல்லாதே

தீபக்கனியென்ன ஆவலுடனுண்ண
திட்டிதனிற்கண்டவிட்டிலெனவண்டா என்னடா

வேடன்.

மீண்டுமிருள்வனத்தில்திரிவதுமார்க்கமோதான்புனத்தில்
கொண்டவனறன்மமதால்சற்றேனுங்குறியாமல்தேந்தினத்தில்
ஒண்டியாய்விட்டுஉடல்சலித்திட்டு
விண்டுனைப்போகவிடாயலெனமோக
மிகுந்தத்தவஞ்செய்து காணவேயுந்தனை
மீறிடமாரன்கணைதொடவெந்தனை
உகந்துநின்சிந்தம்மகிழ்ந்தொருமுத்தம்
உதவிசெய்பெண்ணேயிதழமுதுண்ணவும் அன்னமே

தமயந்தி.

பாரிற்றவமுடையரிஷிகளும்பத்தினியாளுடைய
நோயையளிக்கவென்றுசிவனுமேநிட்சயமாகவென்று
மீறியேவந்துவெட்கமிழந்து
பேருலகத்துப்பிச்சையெடுத்து
பிணுவுகன்போனதுதானறியாயோ
யிங்ஙனம்வந்துஇடர்சொல்லுவாயோ
வேதமெண்ணுதேகூறுதைநீயுன்னுதே
பித்தாவுனதுடன் வித்தைநில்லாதடா

தமயந்திசொல்-கலித்துறை

தனிவழியேவந்மாதென்னை வேடனுந்தப்பிதமாய்
அனியாயமாயிப்படிசொல்வேனுவையையோசிவனே
இனியார்வனத்தில்மறுகதியில்லையெனக்கினிமேற்
சனியேகதியென்றில்லைகார்சிவசங்கரனே

தமயந்தி-தனியேபுலம்பல்-தரு-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்

சிவசிவாயிந்தவேடன்சிந்தைமதமாயென்னைச்
சிவனே-ஐயோ-சிவனே
அவமானஞ்செய்யவென்னையாச்சுதேகேட்கவுநான்
சிவனே-பரம சிவனே
குவலயத்தரசன்கோதைமார்களில்மெத்த
சிவனே-ஐயோ-சிவனே
பாவஞ்செய்துபிறந்தேனோ பாவிகண்ணிற்காணவும்
சிவனே-பரம-சிவனே
கானகவேடனென்மேல் காதல்கொண்டேனென்றானே
சிவனே-ஐயோ-சிவனே
மானமழிபவுயிர்வைத்திருந்தென்னபலன்
சிவனே-பரம-சிவனே

தானேவந்தென்னைசுற்றுஞ் சர்ப்பங்கொல்லாமற்போச்சே
சிவனேஐயோசிவனே
ஈனம்வராமலென்னையின்றுரட்சிக்கவேணும்
சிவனே-பரம-சிவனே.

வேடன்சொல்-கொச்சகம்

மானேபிரிந்துமனம்வாடியலையாமலெங்கும்
நானேவுனைத்தினமும்நன்மையுடன் சேர்ந்திருப்பேன்.
தேனேதமயந்தித் தேவியுனக்கானதெல்லாம்
தானேகொடுத்திடுவேன் தயங்காதேவாமயிலே.

வ. ம. அகோர்வாரும்பெண்ணே தமயந்தி இந்தக்கானகத்தில் ஒண்டியாயழுதுபுலம்பிக்கொண்டுதிரிவானேன உனக்குத்தேவையானமதுமாமிசங்கள்கநிரசங்கள்முதலானவைகளுங் கொண்டுவந்து தருகிறேன்சந்தோஷமாய் நாமிருவரும் சேர்ந்தணைவோம்வாரும்பெண்ணே.

வேடனுக்கும் தமயந்திக்கும்-கூவனு-தர்க்கம்-தரு

இ-ம்-முகாரி-ஏகதாளம்.

அதிரூபவனிதையேயன்னமே பெண்ணமுதேநீ
மதிமுகமலர்ந்தென்னை மருகநீவருவாய்

தமயந்தி

வருவதேதுன்குலவஞ்சியரோசொல்லும்
பருவமதறியாமற்பதருறாய்வீணாய்

வேடன்.

வீணாய்மன்மதன்விடுவினைமலர்க்கணையாலே
வாணாளைவாங்குவதுன்மனதிற்குவசமோ

தமயந்தி

பாராளும்முடிவேந்தன் பாரியென்றெண்ணமல்
ஆருன்னைப்போலிந்த அநியாயஞ்செய்வார்

வேடன்.

சொன்னேனென துயிர்துவைத்திடப்பொருக்குமோ
மின்னேயெந்தன்விரகவேதனைதீராய்

தமயந்தி,

தீர்க்கவேணுமென்று திண்டுமுண்டேசுறாய்.
மார்க்கமாகவுந்தன் வாழ்மனைக்கேகாய்

வேடன.

ஏகபோகமாக விருவருமாய்க்கூடித்
தாகமோகந்திரத் தையலேசெய்வாய்

தமயந்தி

செல்லுமல்லகதி சிந்தியாமலேநீயும்
புல்லர்வாய்மதம்பேசப் பொருந்தாதேவேடா

வேடன்கந்தார்த்தம்

வேதன்புரிந்தவிதியின்பயன்விரகம்பொருந்தமதனன்
போதின்சாங்களெணையும்பொழிந்து பொருமென்றலோடுபனியின்
மீதின்சிறந்தகுயிலும்தெளிந்தவெண்டிங்களும்பகைசெயச்
சூதின்றனங்கன்வடிவேல்மிகுந்த,

கோதேயெந்தனைக்காரடி-வதைசெய்யாமல்
மோகாந்தகாரந்திரடி
தோகையரேமனவேகமதாகவே
சோகமில்லாமல்பாகவேவந்திடும் தோகா

தமயந்தி-கந்தார்த்தம்

ஏண்டாயிடும்புலைசனங்கள்கூடியிடரேநினைந்துவெகுவாய்
மாண்டோரினங்களறியாமலுந்தன்றதியுங்கலங்கிபெருகத்
தூண்டாதிலங்குமணிபோல்விழுந்தசுடர்மேல்விழுந்தபுழுவாய்ப்
போன்றும்லுந்தனுயிர்தப்பியோடிப்

போடாவென்முன்னேநில்லாதே-புத்தியில்லாத
வேடாவாதுகள்சொல்லாதே
போடுனதாசையையீடழிவாயென்னைக்
கூடுவமென்றுநீவாடுகிறாய்பாவி.

வேடன்கந்தார்த்தம்,

போடுவென்றுசொன்னமயிலேபிரிந்து புவியாண்டமன்னனையோ
ஆவென்றிரங்கியேயின்றொழிந்தஅவனென்றெண்ணாதேஎன்னையும்
சீவன்பிரிந்துவிடினும்பிராணசிநேகந்தவிர்ந்துவிடநான்
காவென்றுமுன்னமேவந்தநாகம்

காணுகிறந்ததுமுன்னே-பாராயோபெண்ணே
வாணுலழிந்ததுவுன்னே
காணுமுன்மீதினிலூணுதலாகவே
பூணுதுமாமையல்நாணமில்லாமலே காணு

தமயந்திசொல்-கந்தார்த்தம்

முன்னுலிறந்தவரலால்நினைந்துமொழிகின்றபாவியுனையும்
உன்னுமலிந்தவனியாயமெந்நுடனேகவந்தபுலையா
என்னுலிறந்துபழிபூணவேதனெழுதும்பயன்கள்விடுமோ
சொன்னுல்மிகுந்தகபடேபுரிந்த

சூதால்புலமபிற யடா-வீணிலேசொல்லும்
வாதால்கலங்குவே ணடா
சூதுநினைந்ததிலேதுவரும பல
நீதிகுலைந்திடும்பாதகாநிந்தை செய் சூதால்

வேடன்சொல்-வெண்பா

போமோமதராசன்பூசலிலேயெனைவிட
லாமோமன்றிரங்கியாளவா-மாமோகச்

சுந்தரமேபூங்குயிலே தோகைமயிலேசரசத்
தந்தரமேயுன்காதல் தான்

தமயந்திக்கும்-வேடனுக்கும்-ச-வது-தர்க்கம்-தரு,
இ-ம்-சங்கராபரணம்-ஆதிதாளம்.

சித்தமிழ்ந்தணைந்தொரு முத்தந்தாராயோ-அடிபெண்ணே
மெத்தமையலாகுதெந்தன் விரகஞ்சகியேனே-யுந்தன் சித்த

தமயந்தி,

பித்தாமதிபோயென்னை யெத்தாதேபோடா-அடாபாவி
பத்துந்தணலாமென்றெனைச் சித்தந்தனிலேயெண்ணாதே சித்

வேடன்,

எண்ணமதில்வேறொன்றில்லை யின்பமுடன்கூடிஉந்தன்
இண்ணமுலேதொட்டணையக் கிலேசமதொன்றில்லாமல் சித்த

தமயந்தி,

அல்லடாபாவிசும்மா யாவியைவிணில்விடாதே
நில்லாதேபோடாயென்னுசை நெஞ்சந்தனிலேவையாதே சித்

வேடன்,

நெஞ்சந்தனிலேயென்மீதில் நேயமில்லாமற்பேசாதே
பஞ்சமலர்மாரனம்பு பாயுதுநானென்னசெய்வேன் சித்த

தமயந்தி,

பாயுதுமாரனம்பென்று பரியாசமாகவென்னை
வாயிடும்பாகவேசொல்லி மடிகிறாயுன்மதத்தாலே சித்

வேடன்,

மடிந்தாலுமுன்னுசையெந்தன் மனதைவிட்டுப்போமோபெண்ணே
பிடிவாதம்பண்ணாதேயினி பேதையேநான்மனந்தாளேன் சித்த

தமயந்தி,

தாளாமலென்னடாபாவி சங்கராபரணங்கூவிக்
கேளடாகெருவத்தாலே கிட்டவராதேநான்கோபி சித்

வேடன்சொல்-கலித்துறை.

நாயுண்டோராயிர நரியுண்டுதோலுண்டு நற்றுணைக்குப்
பேயுண்டெங்கண்கிட்ட மந்திரமோவெகு பெரிதுமுண்டு
காயுண்டுகொட்டிக் கிழங்குண்டுதேனுண்டு கம்பளியுண்
டேயிந்தசம்பத்தெவர்க்குப்பாரடி யேந்திழையே,

வசனம்.

ஆகோவாரும்பெண்ணே தமயந்தி எனக்குண்டான சம்பத்துகள் எவர்களுக்குண்டு நாயிலேஆயிரம்-நரியிலேநூறு- பூதப்பிரேதம்பசாசுகளிலேநூறு-இன்னம்தின்னப்பட்ட வஸ்துகள்காய்கனிகிழங்கு தேனும்கட்டவஸ்திரமும் கம்பளிகளுமநேகமுண்டு இந்தச் சம்பத்துகளெல்லாம் அனேகமுண்டாயிருக்குது என்னைச் சேர்ந்து அநுபவிப்பாயடி பெண்ணே தமயந்தி.

9

வேடன்கட்டளைக்கலிப்பா.

பாவியென்றுமொழியுந் தமயந்திப்பாவையையே யென்பரிதாபம்பாரடி கூவுமாங்குயிற்றென்றலுந்திங்களுங் கொடுமைசெய்யக் கொடியமதனு மென், ஆவிசேரவடிக்கணை தாக்கவு மார்ப்பரித்து வில்லுங்கையிலேலந் திமிய, காவிமாமலரம்புதொடுக்குமுன் காதல்தீரடிகாம சஞ்சீவியே.

வேடனுக்கும்-தமயந்திக்கும்-(ரு)-வது-தர்க்கம்

தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்,

லாவணி,

கயல்விழியழகுந் திகழ்மதிமுகமும்
கண்ணில்கண்டபோதே-நான்-காதல்கொண்டேன்மாதே எந்தன்
கருத்தையுமயக்கி யுருக்குதுமாரன்
கணைகள்பாயுதென் கண்மணியே

தமயந்தி.

பாயுதென்றேபகர்ந் தாய்நயம்பாடியே
வாயிடும்போவனை வாயெனவாடியே
பேயெனநீபிழை யாக்கணைதேடியே.

வேடன்,

பிழைக்கலாமோகணையது தாவப்பெண்ணே
வந்திடுவாயொரு முத்தந்தந்திடுவாய்
பிரியாவிடையா ரதிராமன்போலப்
பிரியமாய்வாழலாம் பெண்மயிலே

தமயந்தி.

பெண்ணேயென்வகை பேசுகிருய்பாவிநீ
கண்ணின்முன்னே நில்லாதேநான்கோபி
பண்ணுநம்மேல் பாழாச்சுதேதாவி

வேடன்,

தாவித்தென்றலுமென் னுவியூட்டவனல்ல
சாடுதேம்டமானே-யினி-சகிப்பதில்லை-நானே-நாளும்
தாமசஞ்செய்திடாமலே என்னையுந்
தானணைவாயடி தார்குழலே

தமயந்தி,

அடியேயென்றுசொல்ல லாகுமோவேடா
படியிலுன்னைநீ றுக்குவன்போடா
குவியற்பெண்ணைக்கூட லாகுமோமூடா

வேடன்,

மூடாவென்றுமனைக் கூடாமலேமிகவும்
மோடிசெய்யலாமோ என்மோகந்-தவிர்க்கப்போமோ
மூட்டியேயென்னையும் காட்டியேஆசை
மோசஞ்செய்திடத்தகுமோ

தமயந்தி.

நகுமோவுந்தனைத் தலையையறுத்திடவே
சுகமீதெந்தன்மையல் தான்வெறுத்திடவே
அகமோவெந்தன் அரசைப்பிரிந்திடவே

வேடன்சொல்-வெண்பா.

பெண்ணரசேகாமனம்பு பேதிக்குதேமனது
எண்ணமெல்லாநெஞ்சமிளைக்குதே கண்ணுமலைப்
பந்துகண்டென்னெஞ்சுருகப் பைந்தாமரையிதழைத்
தந்தினியின்பந்தருவாய்த் தான்.

வேடன்சொல்-கலித்துறை.

காட்டிணிற்றனித்த தமயந்தியேயெந்தன் கண்மணியே
வீட்டினில்வாடி யிருவருங்கூடியே வீற்றிருப்போம்
கேட்டதுதாரோன் தடுத்துரையாதே கிளிமொழியே
மாட்டமென்றுல்விட மாட்டேனேயினி வஞ்சியரே.

வசனம்,

ஆகோவாரும்பெண்ணே தமயந்தி இந்தக்காரடிபுலி மிருகஜாதிகளிருக்கப்பட்ட கானகத்தில் நீஒண்டியாயழுது புலம்பித் திரிவானேன் என்னுடையகுடிசைக்குப்போனால் என்பெண்சாதியைஉனக்குயேவல் பணிவிடைசெய்யச்சொல்லுகிறேன் நீயும் நானும்மன்மதனும் ரதியும் போலிருக்கலாம் நீஎன்னகேட்டபோதிலும் கொண்டுவந்துதருகிறேன் என்வார்த்தையைத்தட்டாதே நீதட்டினாலும்நான்விட்டுப்போகிறதில்லையடிபெண்ணே.

தமயந்திசொல் - கலித்துறை.

மூடாவுனக்கென்ன கேடாசண்டாள முழுமூடா
வேடாவறிவில்லையோ வெந்தனுரையை விட்டுவிடு
தாடாளர்போற்று நளராசன்சக்கரந் தலைப்பிளக்கும்
போடாபிழைபொறுத்தேன் செய்தநன்மையும்போய்விட்டதே.

வசனம்.

அடாவாடா துரோகி உனக்குக்கெடுதிகாலம் கிட்டநேரிட்டதோ மூடர்களுக்கெல்லா மெறிந்துபோட்டமுட்டாளே யென்னை இப்படிக்கெல்லாம் வீணுனபேச்சுகளைப்பேசினாய் இது பகவானுக் கடுக்குமோ நீசெய்தநன்மையினாலே இதுவரையிலும்பொறுத்தேன் இந்தச்செய்தி என்பிராணநாயகராகிய நளமகாராசாயில்லாதபடியால் இப்படிக்கு வீணுபேச்சுகளெல்லாம் பேசினாய் அவர்இவட்டு இல்லாமற்போனாலும் அவர்சக்கரமாவதுவந்து உன்தலையையறுத்துப்போடும் இனிமேலாவது ளப்பேச்சும்பேசாமல் தப்பிப்பிழைத்துவந்தவழியைப்பார்த்து ஓடிப்போடா சண்டாளவேடா.

வேடன்சொல்-பின்முடுகுவெண்பா.

பொங்குமதிகாயவனப் பூங்குயிலுக்கூவவென்மேல்
சந்தையில்லாமாரனம்பு தைத்தரும்-மங்கையரே

ஆவிசேயமேபொல்லாது அட்டூசொல்லிடாய்கிலாது
பாவையேயிணங்கவேளை பார்.

தமயந்திக்கும்-வேடனுக்கும்-௬-வது-தர்க்கம்-கண்ணிகள்.

இ-ம்-சஹானுபிலாகி-ஆதிதாளம்.

இணங்கவாவென்றுசொல்லி யிளமதியாய்ப்பேசாதே
சுணங்கனே போலநீயும் துள்ளிவிழுந்தேசாதே
ஏசுவார்தையினு லீகட்சியாய்ப்பேசாதே
ஆசைதீரவந்து அணையத்தருணர்பெண்ணே
பெண்ணேயென்றுசும்மாநீ பிதற்றுகிறாயடாபாவி
கண்ணின்முன்னேநில்லாதே காதல்வையாதேநான்கோபி
கோபஞ்செய்தாலுமுன்னைக் கூடியணையாமலே
சோபந்தீரவேதெண்பாய்ச் சொல்லொரு மொழிநீயென்பாய்
அன்பினுலிராவணனு மழிந்தான்சீதைதன்னாலே
தென்னையிட்டுமொளாதே தெரிவையென்சாபத்தாலே
தெரிவையரோநீயென்பால் சித்தசன்விடும்பால்
உருகுந்தனைச்சேர வுன்மனதுவந்துசேர
மனதுவைத்திடப்பெண்ணால் மாண்டானதுரியன்றன்னுடே
இனமுமென்னுடன்வாது செய்தால்வருமடாதீது,

வேடன்-விருத்தம்.

கலங்கவென்றுரைத்தாயிந்தக் கானகமலைகள்தேசம்
தலந்தனில்வேடரென்னைச் சமர்த்தனென்றிறைஞ்சுவார்கள்
பிலங்கொளுமிருகமெல்லாம் பிடித்தொருநொடியிற்கொல்வேன்
அலங்கிர்தமயிலேயுந்த னாசையால்வணங்கினேனே

வசனம்,

அம்காவாரும்பெண்ணே தமயந்தி இந்தக்காட்டில் வாசம்பண்ணப்பட்டவேடர்களெல்லாம் என்பேர்சொன்னால்நடுங்கி ஓடிப்போவார்கள் ஆருக்குமடங்காத மிருகசாதிகளையெல்லாம் ஒருக்ஷணப்பொழுதிலபிடித்துக்கொல்வேன் அப்பேர்ப்பட்ட நான் உன்னைக்கண்டபோதே என்னைமன்மதபாணம்வந்து துளைக்குது நானெப்படி சகிக்கப்போகிறேன் உன்காலையாவது கும்பிடுகிறேன் நீசொன்னவேலைகளெல்லாஞ் செய்கிறேனென்பேரில் கோபஞ்செய்யாமல் சேர்ந்தணைந்தால்நாளைத்தேசகாலமுமறப்பதில்லை அடிபெண்ணே தமயந்தி.

வேடனுக்கும்-தமயந்திக்கும்-எ-வது-தர்க்கம்-கண்ணிகள்.

இ-ம்-பூபாளம்-ஏகதாளம். [ன்னமே-மனம்

பொறுக்கவொண்ணுதென்று போவென்று சொல்லவந்தாய் அ
வெறுக்கலாமோவிது வேளையல்லவோ பெண்ணே அன்னமே
வேளையல்லடாபாவி மிருகம்போலெண்ணியே வேடனே-என்னை
யாளநினைத்துவந்தா லடுக்குமோவுனக்கிது வேடனே

ஆ[illegible]க்காரிதாவுனைக்கொல்ல அரவத்தைத்துணித்தேனே அன்னமே
[illegible]ம-இடுக்கந்தவிரக்கூடியிருந்தாற்பயமென்னடி அன்னமே
இருந்தி. வென்யனமிறைகளன்றனைவிட்டுவேடனே ஆடா
பொருந்துமோவுனக்கிது புத்திபோசாதடாவேடனே
பத்திசொல்வதென்னடி பூவையேயினிகேளும் அன்னமே-உன்னைப்
பத்[illegible]மானபங்கஞ்செய்வேனடி அன்னமே
பங்கஞ்செய்திடச்சனிபகவானும் பொறுப்பனோவேடனே உந்தன்
அங்கம்பிளக்கவொரு லணுகாமலோடிப்போவேடனே.

வேடன்-விருத்தம்.

ஓடி நீபோடாவென்றே யுரைத்தமாமயிலேயானும்
[illegible]டிப்பொ[illegible]ருக்கேற்ற சித்திரப்பதுமைபெண்ணே
காழ்மினனுக்[illegible]ருசை நற்பவளிதழைக்கோதி
கூடிமேனனணையக்கண்பார் கும்பிட்டேன்கும்பிட்டேனே.

[illegible]ச்சால்-கண்ணிகள்-இ-ம்-பூபாளம்-ஆதிதாளம்,

பாதம்பணிந்துநான்பணிவிடைசெய்கிறண்டி பெண்ணே-உந்தன்
பட்சம்வைத்தென்றனை ரட்சித்தருளடியென் கண்ணே
சீதமலர்வதனமார்ந்த அடிமைகொள்ளும் பெண்ணே-அடி
சிந்தையகிழ்ந்தென்னை வந்துசேரடியெந்தன் கண்ணே
காமன்கணையாலெந்த னாவிதுடிக்குதடி பெண்ணே-என்னைக்
கட்டியணைந்துமுத்த மிட்டருள்வாயடி கண்ணே
சோமனுந்தணலாகத் தேகந்தனில்வீசுதே பெண்ணே-மெத்தச்
சோபமாகுதேயென்மேல் கோபமேதடிசும்மா கண்ணே
பாவிமாங்குயில்கூடக் கூவிச்சதிசெய்குதே பெண்ணே-இப்போ
பாராமலெனதாசை தீராமல்விடுவனோ கண்ணே
ஆவிபதைக்கவிட்டாற் பூவைநான்சகியேனே பெண்ணே-தேசம்
அழியாமற்புவியெங்கும் பழியாமற்காரடி கண்ணே

தமயந்தி-விருத்தம்,

பழிசெயுங்கொடியவேடா பாதகாவுனக்குநல்ல
வழிபெறவோநீயிந்த வார்த்தைகள்சொன்னாயென்னை
எளியெனவெண்ணவேண்டா மிருதயந்தானேணிப்போ
அழிந்திடுமாசைவிட்டு அகலவேயகன்றிடாயே.

வசனம்,

அடாவாடாபாவிவேடா நீயிப்பேற்கொத்த அசாத்யமானவார்த்தைகளைச்சொன்னாயே உனக்குசுவாமிதுணைசெய்யார் நீயும்நல்லகதியிற்போய்ச்சேரமாட்டாய் இனிமேல் மனதுதாளமாட்டாது இப்போதாவது எங்கேயாகிலுமோடிப்போடாவேடா.

வேடன் கலித்துறை,

நானேகரும்படி நீயேயதின்ரசம் நாயகியே
தேனேயுன்வாயிதழ் தந்தென்னைமெல்லவுஞ் சேர்ந்தணைந்தால்

தானேபுணர்ந்திட மனதில்லாதென்னைத் தள்ளுனையோ
மானேவிடேனுன்னை நீபோறதெங்குசொல் மாமயிலே,

வேடனுக்கும்-தமயந்திக்கும்-அ-வ துதர்க்கம்,

கண்ணிகள்-இ-ம்-பந்துவராளி-ஆதிதாளம்.

பூசைசெய்கிறேனுன்னை ஒருபுத்திசொல்லடியென் கண்ணே
நாசகாலமடாவேடாநீ நரகத்துக்காளாவாய்போடா
பாதம்பிடிக்கிறேண்டிமானே என்மேல்பட்சம்வைததாளடி தேனே
வாதுசொல்லாதடாவேடா கேடுவருமுன்சொன்னேனடாபோடா
மறக்கனடிபட்சமானேஎந்தன் மாலமயல்தீரடி தேனே
பிறர்தாரமிச்சித்தநாயே மூன்னால்போனதறியாயடாநீயே
கும்பிடுகிறேனடிபெண்ணே மனக்கோட்டிகொள்ளுதடி கண்ணே
வம்புபயலேஅடாவேடா மெத்தவாய்மிஞ்சாதேயடாபோடா
சகிக்கமாட்டேனடிபெண்ணே கைச்சரசமுன்செய்வேண்டி யுன்னே
நகைத்துப்புரமெரித்தார்வேடா உன்னைநாசஞ்செய்வாரடாபோடா
எட்டிஎட்டிபிடிப்பேனடிபெண்ணே நானினிமேற்கேளனடி கண்ணே
கிட்டவராதடாவேடாபாவி நான்கிட்டிலுனக்குவசனுவி
மருங்குபாரேனடிபெண்ணே உன்னைவலுச்செய்வனடி கண்ணே
நெருங்கிவாராதேகிட்டமோதிஉன்னை நெருப்பாயெரிப்பானடாதுரோகி

பொது-கலித்துறை,

முக்கண்சிவனுலனங்கனெரிய முப்புரமெரியப்
பக்கலநுமானிலங்கை யெரித்தபழமையைப்போல்
மைக்குழலாள்தமயந்தி நளனிடமனைவத்தகற்பு
அக்கினியாலுமவ் வேடனெரிந்தவிசயமே,

தமயந்தி-விருத்தம்,

கோபத்தாலெரிந்தவேடன் கோதையாளடக்குவந்த
ஆபத்தைதத்தீர்த்தானென்றே யடிக்கடிதுயரமாகி
ஈபத்தங்கெட்டசாதி யிவ்வனவேடன்முன்பு
சாபத்தாலெரிந்தானென்று தமயந்திபுலம்புவாளே,

வேடனெரிந்தபின் தமயந்திபுலம்பல்-கண்ணிகள்,

இ-ம்-நவரோஜ்-ஆதிதாளம்,

மனிதரில்லாப்பாவியுலகு தனிலுயிரை
வைத்திருக்கலாமோவிந்தமட்டும்
தனிவழியேவந்தமங்கையர்கள்கணவன்
தன்னைவிட்டுக்காட்டில்வரலானேன்
கொண்டதொருமனக்கணவனில்லையென்று
கொடும்பாவிவேடன்கொட்டிக்கொண்டான்
ஆலங்கள்சத்திரச்சாலைகள்தன்னைநான்
அழித்துநஞ்சைச்சோற்றிற்கலந்தனோதான்
காலிலுலேபசுவையுந்தத்தனோநாள்பசுங்

கொன்றைக்கட்டிப்பாலைக்கறந்தனேதான்
நம்பினேரைக்கூட்டிவந்துயானுமெல்ல
நட்டாற்றினிற்கைவிட்டேனேதான்
வம்புசெய்துப்பிறருடைமைதனைக்கையில்
வாங்கியேதானில்லையென்றனேதான்
வாழ்மனையிற்சிறையைவைத்தானுமண்ணில்
வழக்குநின்றதகள்சொல்லிவாழ்ந்தனேதான்
தாழ்வில்லாமற்செய்தபாவமெந்தன்கொண்ட
சக்கிரவர்த்திதனைப்பிரிந்தேனேயோ
சூழ்பவத்தைத்தீர்க்குங்கைலைவாசதொண்டர்
சுந்தரர்க்காகத்தூதுசென்றவீசா
மங்கையாளென்கண்கலக்கந்தீரவெந்தன்
மன்னவனைக்காணவின்றருள்தா
சங்கைதிங்கள்கொன்றைதும்பைசூடும்லோக
காரணனேகார்க்கக்கடனுமக்கே

தமயந்தி-காலத்தைவெறுத்தல்-விருத்தம்,

திருவளரும்விதர்ப்பநகரானும்வீம
சேனனருள்புதல்வியெனுஞ்செழிக்குங்காலம்
தருகினருங்கற்பகநாட்டனையமென்பால
சக்கிரவாத்திகளன்புகழைச்சாற்றுங்காலம்
கருவளருமென்னுதந்தைநளவேந்திரற்குக்
கன்னியென்னைமணஞ்சூட்டிக்களிகூருங்காலம்
இருவளருங்கலிராசனிடுக்கஞ்செய்ய
எண்ணிடவேயாங்கள்வனமெய்துங்காலம்
எய்திடவேபுட்கரனுவமுலகையாள
இராசனுடன்வனத்தில்வந்திருந்தகாலம்
செய்திடவேநித்திரையிலென்னைவிட்டுச்
சென்றமன்னன்றனைத்தேடித்தியங்குங்காலம்
நைந்திடவேசுற்றுமெனைப்பாம்புதன்னை
நறுக்கிவன்வேடனென்னைநாடுங்காலம்
உய்திடவேபொருந்தாமலெரித்தேயெந்தன்
உத்தமனைத்தேடியழுதுருகுங்காலம்,

பொது-வசனம்,

இந்தப்பிரகாரம் தமயந்தியானவள் நித்திரைசெய்யும்பொழுதுபு
ருஷன்பிரிந்துபோக நித்திரைதெளிந்து புருஷனைக்காணமல் அனேக
காடு மலை வனம் வனாந்திரங்களெல்லாந் தேடிவருகையில் மலைப்பாம்
பானதுவந்து தமயந்தியைச்சுற்றிக்கொண்டு அவதிப்படுத்த அப்போது
சுவாமிகிருபையினாலே காட்டில்வாசஞ்செய்யப்பட்ட வேடனானவன்
வந்து அப்பாம்பை யிரண்டுதுண்டாக்கிவிட்டு தமயந்தி நவியைச் சே

ரவேணுமென்று வாதாடித்தர்க்கிக்க அப்போது அவளிடபதிவிரதாக்கினியானது அவ்வேடனைபஸ்மீகரமாயெரித்துவிட அப்போது தமயந்தியானவள் அவன்செய்த அபசாரமெல்லாம் மன்னித்தும் அவ்வேடன் எரிந்துபோனதைப்பற்றி புலம்பிக்கொண்டுபோகிறவிதம் எப்படியென்றால்,

பொது-விருத்தம்.

வனவேடனெரிந்தபின்பு வனிதையுமனதுநொந்து
தனிவழிநடக்கும்போது ஜனார்த்தனன்கிருபையாலே
முனிவராசிரமங்கண்டு மொய்குழலங்குசேர்ந்து
கனிவொடுமுனிவன்கேட்கக் காரிகையுரைக்கின்றாளே.

முனிவர்-விருத்தம்.

சேயிழைக்கரசியான தேன்மொழிமாதேயம்மா
காயிலைகனியருந்திக் கானகந்தனில்வாழும்
ஏயமாமுனிவர்பக்க லெங்கிருந்தெங்குவந்தாய்
நீயாருன்பேர்தானென்ன நெறியுடனிசழ்த்துவாயே.

வசனம்,

ஆகோவாருமம்மா நீயார் எந்தவூர் எந்ததேசம் இங்கே ரிஷீஸ்வரர்கள்வாசஞ்செய்யப்பட்ட ஆசிரமத்தில் நீ ஒண்டியாயழுதுபுலம்பித்திரிந்து நீ இவ்விடம்வந்தகாரியஞ் சொல்லவேணுமம்மா,

தமயந்தி-முனியீஸ்வரருக்குச்சொல்-அகவல்,

திருவடிசரணம் செயமுனிவேந்திரா
அருமையென்றுயரை யன்புடன்கேளீர்
தருவளர்தேவ தாருவைநிகர்க்கும்
பெருவளமிகுந்த பெருமைசேர்விதர்ப்ப
நகர்வீமராசன் நற்றவத்துதித்த
தகமைசேர்மாது தமயந்தியென்பேர்
ஜெகமெலாம்பரவும் செயவீரசூரன்
பகைவர்கண்டஞ்சும் பராக்ரமமுடையான்
நிடதநாடுடைய நிதிமிகப்படையான்
தண்டமிகுஞ்சக் ராயுதப்படையான்
கொடையினிற்கன்னன் குணசம்பன்னன்
நடமிடும்பரியோ னளேந்திராசன்
பாரியாளிராசன் பார்முழுதாண்டு
காலிதன்பகையால் காசினியிழந்து
ஆரணியத்தி லரசனோடெய்தேன்
பேரணிமன்னன் பிரிந்தனர்துயிலில்
தேடியேசிந்தை தியங்கியேவனத்தில்
வாடியான்மயங்கி வருகின்றவழியில்
ஆடியோர்நாக மதுகண்டுமறிக்க
வேடனும்வந்து வெட்டியவ்வரவை

கூடவேயென்மேற் கொண்டவனென்னுமயல்
நீடியேயென்பால் நெருங்கியேவேட
மூடனையெரித்து மூயக்கியானிங்கு
வந்தனன்சாமி மலர்ப்பதங்கண்டேன்
பின் துணையில்லைப் பிரமகுலத்தாய்
சுந்திரபாதந் தொழுதிடுமகளைச்
சந்ததங்காக்கத் தான்கடன்கடனே.

முனிவர்கள்சொல்-விருத்தம்.

தாளிணை தனிற்பணிந்த தையலேயாசீர்வாதம்
ஏழுணாநாட்டான்வந்து இருந்தநாட்டாதிபோச்சு
ஊழ்வினை துலைந்துதிட்போ வுங்களைச்சகிரட்சிப்பார்
வாழ்நீயங்கிருந்துசுவாமி மாநகர்க்கேகுவாயே.

வ-ம், அகோவாருமம்மா தமயந்தி ஆசீர்வாதம் நீநம்மிடமாயிருக்கிறதுசரியல்ல இவடமிருந்துஎங்களுடன் கஷ்டப்பட்டுக்கொண்டு நல்ல அன்னவஸ்திரமுதலானதுமில்லாமல் காய்கனிகிழங்குகளைப் புசித்திருக்கமாட்டாய் இதோஎதிரேயிருக்குதுசுவாகுபட்டணம் அதில் உனசிறியதாயாரான கோகிலாதேவியிருக்கிறாள் அவளிடம் சுகமாய்ப்போயிருக்கலாம் உங்களுக்குச்சநிபகவான் இன்னமும்மூணாவருஷத்துக்குப் பூரணவதிகாரஞ்செலுத்தப்போகிறார் பிறகு உங்களுக்கு சௌக்கியமுண்டாயிருபபீர்கள் போய்வாருமம்மாதாயே.

தமயந்திசொல் விருத்தம்.

தவமுனிவிடையைபபெற்றுத் தமயந்தித்தையல்தானும்
புவியிலாரென்னைபபோலப பெண்பிறந்தார்களோயோ
பவமெனசெய்திட்டேனோ பத்தாவும்பிரியமுன்செய்
தவமோயிவ்விதிக்காவேதன் ஜனார்த்தனல்விதித்தவாறே.

தமயந்திமுதல் புலம்பல்-கண்ணிகள்-இ-ம்-முகாரி-ஏகதாளம்.

அரிமாதவாமுகுந்தாநந்த அச்சுதாவாசுதேவா
கருடாசலகிருபைவைத்திந்தக் காட்டில்வந்தெனைக்காவா
ஒருதுணையுமில்லையேயெந்த னுயிர்க்கோழனுமவல்லையே
சிறுமைமிகச்சநிபகவான் செய்ததொல்லையோ
அயனமைத்தவிதியோ வதனாலேயிந்தக்கெதியோ
நயமாச்செய்யுங்கருமநலித்தேனோவந்தச்சதியோ
பயமுமென்னைமிஞ்சுதேயிந்தப பாழ்மனமுமஞ்சுதே
துயர்போய்நாங்களெஞ்சவே துணைசெய்குவாய்ச்சநிகெஞ்சவே
ஆமிபொருள் புருஷன் பிள்ளைபூஷணமுமிழந்தேன்
சாமிகொண்டவாதன்செய்த சதியால்மனந்தளர்ந்தேன்

வெய்யல்மிகவாகுதேயென்தன் மேனியெல்லாநோகுதே
கைகால்விட்டுபோகுதே மனங் கலங்கிமிகவாடுதே
நாட்டைவிட்டுநானே இந்தக்காட்டில்வந்தேன்மானே
பட்டைதபமிபோனேனோயோ பரதேசிபோலானேன்
பஞ்சவர்ணக்கிளியேஎன்போல் பாவியுண்டோமொழியே
என்செய்குவேன்மொழியே எங்கள்நகரத்தலைக்குவழியே,

தமயந்தி-உ-வது-புலம்பல்-தரு-இ-ம்-காம்போதி- ஆதிதாளம்.

நாராயணகோவிந்தகேசவா-அரி
நாராயணகோவிந்த கேசவா

நாராயணகோவிந்த நம்பினேனுன்னையிந்த
ஆரணியந்தனிலெந்த வாபத்துந்தீர்க்குமுகுந்த நாராய

ஆராவமுதேகிஷ்ணுமாதாவா வுமக்கபயங்கோகுலபதியாதவா
தீராவினையகற்றுந் தீர்க்குங்கயாபரனே
வேறுருந்துணையுண்டோ வேலைரட்சியுமென்னை நாராய

நாடுநகரைவிட்டு வந்தோமேநாங்கள்
ராபபகல்யுகமாக நொந்தோமே
காடுவீடாய்த்திரிந்து கணவன்றனைபபிரிந்து
வாடும்பேதைமுன்வந்தேன் வருத்தந்தவிர்பபரிந்தே நாராய

வாலவயதில்மணம் புரிந்தாரேபெற்றப
பாலரெனையும்விட்டுப பிரிந்தாரே
காலன்போற்சநிவந்த காரணந்தானேமுந்த
கோலமெல்லாம்நந்த கோபாலாருளெந்தன் நாராய

பொது-விருததம்.

மரகதவடிவம்போன்ற வனிதையுமனதுநொந்து
சரிவழிநடக்கும்போது ஜனார்த்தனன்கிருபையாலே
அரிபதமனதிலெண்ணி யாரணியத்தைநாடி
வருகையில்செட்டிமார்கள் வழியினில்வந்துற்றாரே

பொதிமாட்டுக்காரசெட்டிகள்-வருகிற-தரு இ-ம்
சௌராஷ்டிகம்-அட,தாளம்.

செட்டிமார்கள்வந்தார் -வர்த்தகஞ்செய்யும்
செட்டிமார்கள்வந்தார்

செட்டிமார்கள்வந்தார் கெட்டிபபணம்பறிக்குங்
கொட்டிக்கொள்வோர்களை ஒட்டிபபொருளைவாங்கும் செட்

நாணயமுடையோர்க்கு வேணபொருள்கொடுபபார்
நம்பிக்கையில்லார்க்கு செம்புக்காசுங்கொடார்
ஆணிபபொன்மிகார்வையு மழகுகட்டளைபபையும்
வேணபொன்னெழுத்திய மெழுகுருண்டையங்கொண்டு செட்

நார்மடிபபூணூலும் நவரத்தினபபணிகளுஞ்
சீருடன்பணங்காசு சிலவர்ணமணிகளும்

ஆருங்கொள்ளவேவிற்கும் ஆசைமெருகிநிற்கும்
காரியந்தனிற்கேட்கு வீரியத்துடன்கோமுட்டி. செட்டி.

செட்டிகள்சொல்-விருத்தம்.

அம்மாநீயெந்தவூர்கா ளழுகாதேபயப்படாதே
சும்மாச்சொல்வந்தவாறு துணைசெய்வா சுவாமிதங்கள்
எம்மோடுபிறந்ததங்கை யெனவெண்ணிக்கேட்டோம்நாங்கள்
உம்மோடுபிறந்தோரொன்றே யுண்மையாயுரைசெய்வீரே.

வ-ம், அகோவாருங்களம்மாதாயே நீங்கள் எந்தவூர் எந்ததேசம் இந்தவனத்திலே ஒண்டியாக அழுதுபுலம்பிக்கொண்டு வரவேண்டியகாரணமென்ன எங்களோடுகூடப்பிறந்தோர்க்குச் சமானமாகவெண்ணிபயப்படாமற்சொல்லுமம்மா தாயே.

தமயந்திசொல்-விருத்தம்.

சொல்லுமென்றுரைத்தீரண்ணா தொல்லுலகாளும்ராசன்
வல்லவநளேந்திரன்கொண்ட மயில்தமயந்தியெனபேர்
பொல்லாதசநியனாலே புருஷன்பிள்ளையும்பிரிந்து
எல்லாத்துன்பத்திற்காளா யிருந்திங்கேயான்வந்தேனே

வசனம். அகோவாருங்களண்ணே செட்டிமார்களேநான்விதர்ப்பதேசமாளப்பட்ட வீமராசன்புத்திரியாக்கும், என்பேர்தமயந்தி யென்றுசொல்வார்கள் நிடதபுரியாளப்பட்ட நளச்சக்கிரவர்த்தி மகாராசனுக்குநான்பாரியானபின்பு சநிபகவான் மாயையினாலே ராசனும்நானும் வனத்துக்குவந்து ஒருவரைஒருவர்விட்டுப்பிரிந்து தேடிவரும்போது என்னைக்கொல்லவந்த சர்ப்பத்தை ஒருவேடன்சம்மாரஞ்செய்து என்னைச்சேரவேணுமென்றுவாதாடி அக்கினியா யெரிந்துபோனான் யிப்பால் நான்வரும்போது சுவாமியினுடகிருபையினாலே தங்களைக் கண்டேனண்ணா-தங்கள்பிரவியைப்போலெண்ணி துணையாக வழைத்துக்கொண்டுபோய்சுவாகுபட்டணம் சேர்த்துவிடுங்கோளண்ணா செட்டிமார்களே

செட்டிகள்சொல்-வசனம்.

அகோவாருமம்மாதாயே ஜெகதீஸ்வரி அந்தசநிபகவான் செய்கிறமாயைகளை அரியரப்பிர்மாதிகளாலுமறியக்கூடாது நாங்களும் சுவாகுபட்டணத்துக்கு சிலவியாபாரங்கொண்டுபோகிறோம எங்கள்பின்னே வந்தால் அழைத்துக்கொண்டுபோய் விடுகிறோமம்மாதாயே.

பொது-தரு-இ-ம்-சௌராஷ்டகம்-ஏகதாளம்,

செட்டிமாருடனேகூடித் தேன்மொழிநடந்தனளே

பட்டணம்பறிகொடுத்து பத்தாவையுங்கைவிடுத்து
துஷ்டவேடனையெரித்து சுவாமியைநெஞ்சிற்குறித்து செட.
கொடியிடையுந்தத்தளிக்க கோதைபாதங்கொப்புளிக்க
மடமயில்தமயந்திமாது வரும்விதியையெண்ணியிப்போது செட.

யானைசிம்பசார்த்தூலங்கள் யாளிபுலிபூரவங்கள்
கானகமிருகங்களேர்ந்தீகண்டுபதநினித்தமயந்தி செட

பொது-விருத்தம்.

பத்தினிதமயந்திபெண பக்காவும்வரக்காணுமல்
சித்தமுந்நியங்கிகாட்டில் செட்டிகள்துணையாச்செல்ல
அத்தடங்கனிலோரால விருக்ஷமுங்கண்டுமங்கே
சுத்தமிதாகந்திரவுண்டீருறங்கினுளே

இதுவுமது.

உண்டுநீருறங்கும்போது வுன்னியேகலிராஜேந்திரன்
அன்றுளபகையையெண்ணி யானையைபோலருபங்
கொண்டுகெர்ச்சித்துவீமன் கோதைக்குத்துணையாய்வந்த
திண்டிறல்வணிகர்தம்மைச் சோதிக்கவந்ததன்றே

யானைவருகிற-பொது-தரு-இ-ம்-தன்யாசி-ஆதிதாளம்.

யானைவந்துதே-கலி-யானைவந்துதே

தானதனிற்கடல் தாபதங்கங்கள்
வானத்துள்ளோரு மற்றெவருநிலைகலங்க யானை
பதியுமரசுமிழந்துபோகப
பாவையுமபாவரும் வேறுவேறாகக்
கெதியற்றவண்ணங்கன்னிலேகக்
கிளிமொழிதமயந்திக்குமுன்பாக யானை
ஆதியிற்செய்தகசையைமனதிலெண்ணி
யரசாதுபுஷ்கரனுளுதற்கேபண்ணி
வேதனைசெய்யநாளனுமனங் குண்ணி
விட்டமின்னுளேமிகவருத்த நண்ணி யானை

பொது-விருத்தம்.

ஆனைபோல்வந்து சநிபகவான்றானு
மருவைதமயந்தியைக் கணடார்பரித்துக்
கானகத்தில்நித்ரைசெய்யும் வணிகர்தமமைக்
காலினுற்றேய்த்துயிரை வாங்கும்போது
மான்விழியாணடுங்கியஞ்சிய பயந்துசிந்தை
வாடிவொணடியாகவனுந் திரத்திலோடித்
தினதயாபரநந்த முகுந்தாவென்ன
செய்குவேனென்னபபுலம்பிச் செபபுவாளே,

தமயந்தி செட்டிகளிறந்ததைக்கண்டுபுலம்பல்.

தரு-இ-ம்-கமாஸ்-ஆதிதாளம்.

இந்தவிதிக்கென்னசெய்குவேன் ஏழைபங்காளா
இந்தவிதிக்கென்னசெய்குவேன்

இந்தவிதிக்கென்னசெய்வேன எப்படிநானினியுய்வேன்,
முந்தசெய்பவமிதாமோ முழுதஞ்சோதிக்கலாமோ இந்தவிதி

பச்சைவடம்பறிகொடுத்தே-பரவாசுதேவா,
புத்தாடையுங்காட்டில்விடுத்தே
அச்சமுடனோட்டமெடுத்தேன்-துணையாய்வந்த
யாபாரியைப்பறிகொடுத்தேன்
மச்சக்கூர்மநரசிம்மா லட்சுமித்தாயேயென்னம்மா
ரட்சிப்பாய்சீதாபிராமா நீநினைத்தால்பெரிதாமா இந்தவிதி

இந்திரனால்வந்தகுறையோ-சனிபகவான்
இடுக்கத்தாலெய்தசிறையோ
தந்தையென்தாய்த்தவ நிறையோ அல்லதுராசு
சக்கிரவர்த்திசெய்தகுறையோ
சந்திரகுலத்திற்பிறந்து தண்டகாவனந்திரிந்து
வந்தவழியிற்பிரிந்து சொந்தமாவந்தோரறிந்து
முன்னறியேன்பின்னுமறியேன்-சனியால்வந்த
மோசமென்பதையுந்தெரியேன்
அன்னிதமரையொன்றுங்குறியேன்-உயிர்வைத்திருந்து
அவனியிலினிமேற்றரியேன்
பன்னகசயனபார்ப்பீர் பாவியென்றுயரந்தீர்ப்பீர்
தன்னையடுத்தோரையேர்ப்பீர் தனவணிகருய்யப்பார்ப்பீர் இந்தவிதி

தமயந்திசொல்-பத்தியம்.

பையவேகுதாடி கோர்த்ததற்கழுவனோ-பதிபரசருக்கழுவனோ
பாலனைவிடுத்தே யிருப்பதற்கழுவனோ-பதித்ததுயிலுக்கழுவனோ
தையலெனைவிட்டேகும் நாயகற்கழுவனோ-சர்ப்பந்தனக்கழுவனோ
தப்பிதகிணந்திடும் வேடனுக்கழுவனோ-தனவணிகருக்கழுவனோ
வையகந்தனில்வந்த விதிதனக்கழுவனோ-வளர்தந்தைதாய்க்கழுவனோ
வஞ்சகஞ்செய்தசனி வாதனைக்கழுவனோ-வனம்வந்ததற்கழுவனோ
ஐயோநான்பெண்ணாய் பிறந்ததற்கழுவனோ-யாரார்குறைக்கழுவனோ
ஆதிசெல்வத்துடனரசாட்சியருள்செய்வாய்-அபயவரதக்கடவுளே.

பொது-விருத்தம்.

திருநிகர்தமயந்திப்பெண் செட்டிமாரிறந்தபின்பு
அரிபதமனதிலெண்ணி யடித்தழுதலறும்போது
மருமலர்த்துளவமார்பன் வணிகரையெழுப்பவட்போ
துரிதமாய்வணிகர்பின்னால் சுவாகுபட்டணம்வந்தாளே.

வ-ம், இந்தப்பிரகாரம் தமயந்தியானவள் ரிஷிபீசுராள் ஆசிரமத்தைவிட்டு பொதிமாட்டுக்கார செட்டிகளைத் துணையாக அழைத்துக்கொண்டுவரும்போது இவ்விடத்தில் நல்லஜலமும் குளிர்ந்தகாற்றுமானதினாலே தமயந்தியானவள் தாகந்தீர்ந்து நித்திரைசெய்ய அப்போது சனிபகவான் ஆனைரூபமெடுத்துவந்து நித்திரைசெய்கிற செட்டிமார்களைக்கொன்றுபோட அப்போதுதமயந்தி துணையாகவந்தசெட்டிகளிறந்துபோனதைக்குறித்து மிகவுங்கலங்கி ஸ்ரீமகாவிஷ்ணுவை தோத்திர

ஞ்செய்ய அப்போது ஆகாயத்தில் அசரீரிவாக்கொன்றுபிறக்க இறந்துபோனசெட்டிகள்உயிருண்டாய் தமயந்தியை யழைத்துக்கொண்டுசுவாகுபட்டணம்போகிறவிதம் எப்படியென்றால்,

தரு, அன்னம்போல்நடந்து தள்ளாடி
அகங்குழைந்து முகம்வாடி
பொன்னுடலில் வேர்வையோடி
புந்தியிற்பசியும் மீடி செட்டி,

செட்டிகள்சொல்-வசனம்.

அகோவாருமம்மாதாயே ராசபரமேஸ்வரி உங்களை யிதுவனாயிலுங்காப்பாத்தியழைத்துக்கொண்டு சுவாகுபட்டணம்வந்துசேர்ந்தோம்நீங்கள் சஞ்சலப்படாமல் எவ்விடமும்போகாமல் சுகமா யிப்பட்டணத்தில்தானே வாசஞ்செய்யுமம்மா நாங்கள்கொண்டுவந்த சரக்குகளளங்கேயாவது கொண்டுபோய்விற்கப்போகிறோம் நீங்கள்போய்வாருங்களம்மாதாயே,

பொது-விருத்தம்.

சந்திரவிம்பமொற்ற தமயந்திமாதுதானும்
வந்தனள்சுவாகுராசன் மாநகர்வீதிதன்னில்
அந்தமாநகரிலுள்ளோ ரிவளையொவருங்கண்டு
சிந்தையுமறந்துநின்று திகைததுமேசெப்புவாரோ.

தமயந்தியைப்பார்த்து ஊர்ஜனங்கள்விசனப்படுதல்.

கண்ணிகள்-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

ஆரடியம்மாயிவள் ஆரடியம்மாபோகிற
தாரடியம்மாசுருக்காய் பாரடியம்மா
தாரணிபினீங்களிந்த வாரணங்கைப்போலவருந்
தான்கண்டதுண்டோவம்மா தங்கையரே
நாரணன்மனைவியோதான் வாரணனிந்த்ராணியோதான்
நான்முகனுயகியோதா னிலுமம்மாயிவள்
சங்கரன்படைத்தசிவ சத்தியோநித்யகல்யாணி
தமயந்திதேவிதானோ தங்கையரே
அஞ்சமேவள்ரதியோ வரம்பையருர்வசியோ
ஆகாசவாணிதானோ ஆச்சியமோசொல்லும்
மண்டலத்திலிந்தப் பூவையிருக்கபிரமன்
பெண்களைப்பன்படைக்கான் புகலுமம்மா
ஆமிவளுருவம்போல நாமெங்குங்கண்டதில்லை
அரசன்தேவிக்குறைப்போம் ஆச்சியமோசொல்லும்.

பொது-விருத்தம்,

இந்திரவுலகுமாத ரிறங்கியேபோற்றிநிற்க
வந்தனஞ்செய்துரம்பை மாதர்களாசிகூறச்

சுந்திரவஸ்திரபூஷணாதிகளணிந்துக்கொண்டு
சந்திரமுகத்தாள்கோங்கிலாதேவிசபையில்வந்தாளே.

கோங்கிலாதேவிவருகிற-தரு-இ-ம்-பைரவி-ஆதிதாளம்,

கோகநகத்தைநிகர்கோதையெனும்ராசகோங்கிலாதேவிவந்தாள்
மாநகப்பணிகள் வயிரமுத்துமணிகள்
தேகந்தனிலேபூண்டு சேடியர்கைலாகுகொண்டு (கோ)

தாமரைமலர்பதத்தை தண்டைசிலம்புகொஞ்சச்
சரிகையிடப்பதனந் தகதகவெனமிஞ்ச
மாமதிரதியிவள் வடிவுசாயலுக்கஞ்ச
வாலைநாயகிபோல வந்தாள்சபைகள்கெஞ்ச (கோ)

பாம்பின்மதிப்பிறை பளபளெனமதித்துப்
பச்சைச்சங்கமிழைத்துச் சுட்டிருக்கடிமுத்து
மானவிழிநாசிகாபரண மூக்குத்திநத்து
வரிவிழிநுதலினில் மைத்திலர்தமுந்தரித்து (கோ)

வன்னச்சரிகைதுயில் மருங்கில்வரிந்துகட்டி
மாற்றுயரபரஞ்சி வயிரயிழைத்தமெட்டு
மின்னுமேகலைபணி விளங்கஒட்டியாணமிட்டு
பின்னற்சடைபணிகள் பிரளதொங்கவேவிட்டு (கோ)

தாதிகள்சொல்-வசனம்,

அகோசரணம்சரணமம்மாதாயே ராஜபரமேஸ்வரி நம்மிடஆசாரமுகவழியாய் ஆரோஒருஸ்திரீசாதிபோகிறாள் அவளைப்பார்த்தால்லட்சுமியோ சரஸ்வதியோ இந்திராணியோ அல்லதுரதிதேவியோ இவர்களையெல்லாம் ஒருபங்கஞ்சொல்லலாமா இந்தஸ்திரீயை நாங்களிதுவரைக்கும்பார்த்ததுமில்லை கேட்டதுமில்லை கண்டதுமில்லை நாங்களென்னசொல்லப்போகிறோமம்மா தாயே,

கோங்கிலாதேவி-விருத்தம்,

தாதியேசகியேயந்தத் தையலைநீங்கள்சென்று
போதவேயழைத்துவந்து புகலுவீர்பூதலத்தில்
ஏதொருவருக்காணாத வெழின்மிகுவடிவுமுள்ள
மாதினைநமதுபக்கல் வருகவேயழைப்பிப்பாயே,

அகோவாரும்பெண்களே சகிமார்களே அந்த பெண்ணைப்போல நாங்கள்கண்டதுமில்லை கேட்டதுமில்லையென்று சொல்லவந்தீர்களே அந்தஸ்திரீயை நம்மிடசபைக்கு அழைத்துக்கொண்டுவாரும் பெண்ணேசகிமார்களே,

சகி-விருத்தம்,

தாயேஒஅம்மாநில்லு தாரணியாளுமெங்கள்
ஆயிராசாத்தியுக்க ளரியவாய்மொழியைக்கேட்க
போயழைத்திடவுத்தாரம் புரிந்தனளாகையாலே
சேயமாய்வந்துகண்டு நிமிஷத்திற்சொல்லுவாயே,

வசனம், அகோரவாருமம்மாதாயே எங்கள்ராசாத்தியானவள் உங்களையழைத்துக்கொண்டுவரும்படி உத்தரவாயிருக்கிறது நீங்கள்வந்துகண்டு வார்த்தைபேசிபோங்களம்மாதாயே,

தமயந்தி-விருத்தம்,

நானிலம்புகழுந்தாயே நமஸ்காரமம்மாவென்னை
ஏனழைத்தீர்கள்நானோ யிரப்பவர்தனிலுமேழை
கானகந்தோறுஞ்சுற்றிக் கடிநகர்தன்னில்வந்தேன
தானழைத்திட்டசெய்தி தயையுடன்சாற்றுவீரோ,

வசனம், அகோ சரணஞ்சரணமம்மாதாயே ராசபரமேஸ்வரிஇந்தப்பட்டணத்தில் பிழைக்கவந்தயென்னை அழைத்தகாரணம் திருவுளம்பற்றவேணுமம்மாதாயே,

கோகிலாதேவிக்கும் தமயந்திக்கும்-தர்க்கம்,

தரு-இ-ம்-மத்தியமாவதி-திரிபுடைதாளம்,

ஆர்நீஎன்னம்மா சொல்லொன்றுக்குமஞ்சாதே சும்மா
பாரிலுனைபடைத்த பாவிபிரமதேவன்
ஓரவஞ்சனைக்காரனோ கெடுவானையோ — ஆ

சரணமென்தாயே சொல்வேன்கேளும் சமுகத்தில்நீயே
அருணகிரணவொளி யனைதினகரருள்விழி
திரணமென்மேல்வைப்பீர் செப்புகிறேன்காப்பீர் — சர

எங்கேநீவந்தாய் உன்பேரென்ன ஏன்மனம்நொந்தாய்
உங்களூருமேது வுண்மையாகவோது
மங்கையரோகூது வையாமலிப்போது — ஆ

வான்பதிநாடு விதிவசம் வந்தனன்காடு
நானேபட்டபாடு நாய்சனிலுங்கேடு
கானகந்தான்வீடு காவதிலுஞ்சேடு — சர

அன்னமேதேனே எழில்மிகு மப்ருபமானே
உன்னிடபேரென்ன வுரைத்திடுவாய்கன்ன
லென்னுமொழிக்குயிலே யெந்தன்பெண்மயிலே — ஆ

சுந்தரவதியே என்பேர்சய ஸுந்தரிவிதியே
எந்தன்கணவனேசன கெந்தருவராசன
சொந்தமாயெனைவிட்டார் சோகமுன்னைத்தொட்டார் — சர

சயனந்திரிமாதே நீயெங்கிலும் தனியேபோகாதே
நயனம்போலுன்னை ரட்சிப்பேனுனைத்தானே
பயமில்லாமலிரும் பாக்கியென்றெல்லோரும் — ஆ

கோகிலாதேவி-வசனம்,

அகோவாரும்பெண்ணே சயனந்திரி நீ நம்மிட அரண்மனையிலேயிருந்துக்கொண்டு பிள்ளைகளுக்குத்தலைசீவி எண்ணெயிட்டு ஸ்நானஞ்செய்வித்து புனுகு பன்னீர் பரிமளாதிகளை யணியச்செய்துக்கொண்டு சுகசௌக்கியமாக யிருமம்மாதாயே.

பொது-விருத்தம்.

கோங்கிலாதேவியம்மன் குணமுடனுரைக்கக்கேட்டு
சாங்கமாய்த்தாதியேவல் சயனத்திரிசெய்துக்கொண்டு
பூங்கழைகடடும்போதும் பொட்டுமைசூட்டும்போது
ஏந்திழைடமுமைதன்னை யெண்ணியொரந்துருகுவாளே.

தமயந்திபுலம்பல்-கண்ணிகள்-இ-ம்-முகாரி- ஆதிதாளம்.

வேணபணிவிடைகள் வெள்ளாட்டி மார்கள்செய்ய
விற்றிருந்தேனேஐயோ தெய்வமே
சாணந்தொடவுமெச்சில் தாளெடுக்கவுமவிதி
தானவந்துநேர்ந்துதையோ தெய்வமே
மாந்தளிரனைய சாந்தட்கரம்வலிக்க
பூந்தழைப்பூவுகட்ட தெய்வமே
நேர்ந்துதொடுத்திடவும் பாங்கிவேலைசெய்யவும்
நிலத்திற்பெணபிறந்தேனே தெய்வமே
மங்களராசாகுல மாதர்க்கஞ்சனந்தீட்ட
வைத்தாயோஎனேப்பாவி தெய்வமே
இந்திரசேனையும் என்மனேயுமறந்து
எங்கேயிருக்கிறரோ தெய்வமே
வந்தேன துயரந்தீர்ந்து சொந்தமுடன்கைகோர்த்து
வாழ்வதெக்காலமையோ தெய்வமே

பொது-விருத்தம்.

தாதிபோலேவல்செய்துத் தமயந்திமாதுகாணும்
மாதரிலரசியான மங்கையும்புலம்பிவாடி.
வேதனைமிகுந்துவுள்ள மெலிந்துதன்னுயிர்ப்பிராண
காதன்செய்சதியையெண்ணி காளும்விற்றிருந்தாளன்றே.

வ-ம், இந்தப்பிரகாரம் தமயந்தியானவள் சுவாகுபட்டணம் வந்து தன்சிறியதாயாரான கோங்கிலாதேவியினிடமாகத் தான்சயனந்திரியென்னும்பேரிட்டுக்கொண்டு தாதிகளசெய்கிற வேலைகளைச் செய்துக்கொண்டுமகாவிசனத்தோடிருக்கிறநாளையில் விதர்ப்பதேசமாளப்பட்ட வீமராசன்தனமருமகனை நளச்சக்கிரவர்த்திமகாராசாவும் தமயந்தியும் சனிபகவான்மாயையினாலே இராச்சியம்விட்டுவனவாசம்போனவர்கள் வரக்காணோமென்று விசாரிக்கிற நிமித்தமாகச் சபைக்குவருகிறவிதம் எப்படியென்றால்,

பொது-விருத்தம்.

வயிரநவமணிமகுட முடியிலங்க
வயங்கவிருகுழையில்ரத்னக்குண்டலங்கள்
வெயிலவனைபோலொளிவீசமார்பிற்கண்டி
மின்னலங்கஸ்திராபரணங்கள்மெய்யிற்பூண்டு

நயமிகுரம்பையராட வாணர்போற்ற
நற்கவரிசாமரைகள்சுருட்டிவீச
ஜெயஜெயவென்றேகட்டியங்கள்கூறத்
திசழ்சபையில்வீமராஜேந்திரன்வந்தான்,

வீமராசன் தன்கொலுவுக்குவருதல்-தரு-இ-ம்-சுருட்டி-ஏகதாளம்,

வீரலட்சுமிவாசன் வீமராசன்வந்தானே

சூரியகுல துங்கன்களங்கன்
துரந்தரராஜ புரந்தரனென்ன வீரலட்

மாணிக்கநவமணிகள் பதித்தமகுடமின்னவே-சிரசில்
வயிரப்பச்சைநீல மழைத்தவளைகள் துன்னவே-கழுத்தில்
ஆணிப்பொன்சரப் பணிகளிலங்க
அபரஞ்சிச்சந்திரவாரங்குலுங்க
வானவர்மந்திரி மார்கள்வணங்க
மானிலமன்னர் திறையளந்திலங்க வீரலட்
அதிரதர்மகரதர் சமரதரதர்சூழ
அங்கணர்வங்கணர் கொங்கணர்டங்கணரடியினிற்றாழ
குருதர்குச்சரர் குடகர்போற்றக்
கொந்தியர்வந்தியர் கைகுவித்தேற்றப்
பதியினில்விதிர்ப் பாபுரிவீமன
பண்புதயாளகுணவிசுவாசன் வீரலட்
வித்தைவிநோதங்கள் துதிமத்தாளங்கள்
மேளம்முழங்கிவர
தத்திமித்தித்திமித் தத்தையர்கற்றிச்
சலாம்வரிசைகள்தர
உத்தமவேதியராசிகூற வுறவினர்சந்தோஷமீற
சித்தசனைநிகரெழிலுற்றதார செகபதியதிபதிஒய்யாரதீர வீர

வீமராசன்சொல்-விருத்தம்.

சந்ததமதுவாசல் சார்ந்தகட டியனேகேளாய்
வந்தவாரறிந்துசொல்லும் மாருதநதனக்கொப்பான
தந்திரத்தினிலும்வெற்றி தனிமிகுஞ்சாரணனை
இந்தநாழிகைக்குளேந்த னிடமவரழைத்திடாயே.

வ-ம், அகோவாரும்பிள்ளாய் கடடியக்காரா நம்மிட சாரணபுரோகிதனை அதிசீக்கிரத்திலழைத்துவாரும்பிள்ளாய் கடடியக்காரா.

கடடியக்காரன்சொல்-வசனம்.

அப்படியேமகாபாக்கியமையா ராசகெம்பீரா பராக் பராக்,

பொது-விருத்தம்,

தலமதில்விதர்ப்பதேசன் தனையரசாளும்வீமன்
நலமொழிகேட்டுத்தூதர் நளன்றமயந்திதன்னை

உலகெலாந்தேடிப்பார்க்க வுறுதியாய்வேகமாகப்
புலம்விசாரிக்கவேதான் புரோகிதர்வருகிறாரே.

சாரணுள்வருகல்-தரு-இ-ம்-தன்யாசி-ஆதிதாளம்

சாரணுள் வந்தார்-கூடியிதோ-சாரணுள்வந்தார்
சாரணுள்வந்தார் காரணிமெங்குஞ்சுற்றத்
திரனைான்றம யந்திதமைக்காண சாரணுள்
பாதரகைஷபூனேந்துமிடையில் படுவஸ்திரமணிந்து
பேதுவாங்கத்துணிந்துகையிற் பிரம்புத்தடியும்பூனேந்து
சாதகமாச்சண்டமாருதம்போலே தாவித்தாவிநின்றுலாவிமென்மேலே
காதவழிகணத்திற்சென்றுருக்காலே
காத்தனவீமராசன் சபைமேலே
சரிகைச்சோமன்சூடடிமார்பில் தங்கப்பூணூல்மாட்டி
அரிபகந்தனேநாட்டிஉள்ளம் அதிபராக்ரமமோடி
திரிலோகமுமொரு நொடியினிற்செல்லும்வாம
தெரியாதிருப்பவர் புலங்கண்டுசொல்லும்வாம்
பரிவாயிருவருங் கலந்துறவாடிய
பலருமறியதன் யாசியைப்பாடி சாரணுள்
நாட்டினிற்சென்றாலும்எந்நகரினிறசென்றாலுங்
காட்டினிற்போனாலும் என்னகாரணமானாலும்
தாஷ்டீகமாகவொரு வோட்டமதாக
பேட்டிக்காணவீமராசன்முனபாக சாரணுள்

சாரணுள்-வசனம்

அகோசிரஞ்சீவி ஆசீர்வாதமங்களம் சுகிப்விஸ்து தீர்க்காயஸ்து வீமராசனே எங்களைவரவழைத்தகாரியம்சொல்லவேணுமையா வீமமகாராசனே,

வீமராசன்-விருத்தம்.

புகலறிந்துரைக்குங்கீர்த்தி புகழ்பெற்றசாரணுளே
நகரதுயிழந்தபேதை நம்மிடம்வரவுங்காணேம்
செகமெலாந்தேடியுந்தம் திசையினில்நளனுமெந்தன்
புதல்வியுமிருக்கின்றாரோ போய்பார்த்துவருகுவீரோ.

வ-ம், அகோவாருமையா சாரணபுரோகிதர்களே என்மகளாகிய தமயந்திதேவியும் எனமருமகனாகிய நளச்சக்ரவர்த்திமகாராசனும் சனிபகவான்மாயையினால் ராச்சியம்விட்டு வனவாசம் போனவர்கள் இதுவரையிலும்வரக்காணேம் அவர்களெந்தவிடத்திலிருக்கிறார்களோ தெரியவில்லையே நீங்கள்தேடிபபார்த்துவந்துசொல்லுங்களையாசாரணுளே,

சாரணுள்-தமயந்தி-நளனைத்தேடுதல்-தரு-இ-ம்-பைரவி-ஆதிதாளம்.

தேடிப்பார்த்துவருவோம் நாமுந் தேடிப்பார்த்துவருவோம்

கூடிததேடியிந்தக் குவலயந்தன்னிலுள்ள
நாடெங்கும்புகழ்நள ராஜன்தமயந்தியைத தேடி

குப்பையபோலாரும் சொங்கணகேசஞ்சுற்றிப்பாரும்
தப்பாமல்நளனுந்தமயந்தி கன்னையுமகணமேடதானவாரும்
இப்புவிதனிலெங்கு மிருக்கிறயிடந்தேடும்
எப்படியாகிலு மிருவரும்வெளிப்படும்       தேடி

அங்கமேசமகாடிமலேவன் தன்னிலெங்குந்தேடி
தங்கக்கடம்பெறலாந் தமயந்தி ளேக்கண்மேடதான்போகலாம்
அங்கிருந்தாலழைத்து யாமும ங்களிதத்துச்
சங்கையில்லாமல்வீமன் சமூக செல்லி நில்லாமுன்       தேடி

வீமராசன்சொல்-விருத்தம்.

தாரணி மனையிழந்த தமயந்திநளேந்திரன்றன்னை க
தூரதேசங்கள்சுற்றிச் சுவாகுமாககளைக்கண்டு
பார்புகழ்வீமராசன பத்தினிசமுகங்கண்ணில்
ஆரியனுனைம்வாங்கி யரணமனைக்குள்வந்தாரே.

வ-ம். இந்தப்பிரகாரம் வீமராசனுணவர் தன்மகளேயும் மருமகனேயு ம்ராச்சியமுகலான தமிழந்து வனவாசம்போனவர்களைக் காணுமென் கிறவிசனமடைந்து சகல்வேதவேதியாை யழைப்பித்து சாஸ்திரங்களை ப்பார்த்துபுரோகிதர்களுக்கு வேண்டியவெகுமதிசெய்து இந்தஜம்பத் தாறுதேசங்களும் மலேயனம்வனந்திரங்களெல்லாந்தேடிப் பார்த்துவா ருங்களென் றுசாரளுளாகிய புரோகிதாகளே யனுப்ப அவர்களெங்குந் தேடிக் ணுமல சுவாகுபட்டணம வரும்போது அதற்கதிபதியாகியசு வாகுராசன அரண்மனேயில பிராமணுளுக்கு பூரிகொடுக்க அப்போது விதற்பதேசமதிலிருந்துவந்த சாரணபுரோகிதாளும் இதுதெரிந்து அர ண்மனைக்குள்ளேவர அப்போது கோங்கிலாதேவியானவள் சயனந்திரி யென்கிறதாதியைப்பார்த்துச் சொல்லுகிறவிதம் எப்படியென்றால்,

கோகிலாதேவிசொல்-விருத்தம்.

தாதியேயென துபாங்கி சயனந்திரிமாதேயிந்த
வேதியாதமக்கிப்போது விருப்பொடுசுயம்பாகங்கள்
போதவும்படைத்துநீதான் பொட்டெனவனுப்பவேண்டி
ஆதலாலுனையழைத்தே னப்படிசெய்குவாயே,

வ-ம், அகோவாரும்பெண்ணே சயனந்திரிமாதேநம்மிட அரண்மனே வாசலிலேவந்திருக்கிற பிராமணுளுக்கெல்லாம் தக்ஷிணைதாம்பூலங்கள் கொடுத்து பஞ்சகச்சாயத்துடனே அன்னமும்படைக்கஉத்திரவுகொடு த்துஇன்னம்அவர்களுக்கு வேண்டிய சாமக்கிரயமெல்லாம்கொடுத்தனு ப்பும்பெண்ணே சயனந்திரிமாதே.

சயனந்திரிசொல்-வசனம்.

ஆகோவாருங்களையாசுவாமி புரோகிதகுருக்களே இதோவுங்களுக்

குத்தேவையானதுகளெல்லாந் தருகிறோம் வாங்கிக்கொள்ளுங்களையா சுவாமி.

சயனாந்திரியாகியதமயந்திக்குப் புரோகிதர்சொல்-விருத்தம்,

செந்திருவணையமாதே செயவீமராசனின்ற
சுந்தரத்தமயந்திப்பெண் தோகையேயம்மாநீங்கள்
உந்தநாயகனுமெங்கே யொண்டியாயிங்குவந்து
இந்தவாறானதென்ன யெந்தனுக்குரைசெய்வாயே.

வ-ம், அகோவாகுமம்மாதாயே ராசபரமேஸ்வரி நீ விதர்ப்பபுரி வீமராசன்வயிற்றிற்பிறந்து நளச்சக்கிரவர்த்திக்குபாரியாயிருந்து இப்படிக்குக்காதிகியலல்செய்ய உன்தலையில் பிர்மதேவனெழுதினனே என்னகாரணம் உன்னதிர்ஷ்டமிப்படியாச்சுதோ உன்பிராணநாயகரெங்கே போனார் எங்களுக்குச் சொல்லவேணுமம்மாதாயே.

தமயந்திசொல்-பத்தியம்,

எந்தனைத்தெரிந்துகேட்கு மெழில்மறையோரேகேளீர்
தந்தைதாய்செய்தரூதோ தலைவிதித்தானேபிரமன்
அந்தநாளெழுதும்வாறு மனுக்கறையாதுகண்டீர்
இந்தநாளிதற்காய்த்தேக மெடுத்ததற்கென்செய்வேனே.

தமயந்திபுலம்பல்-தரு-இ-ம்-கும்பகாம்போதி-ஏகதாளம்,

தெய்வமறையோரேயெனை செய்குவன்திருவுளமே
செனமமெடுத்தென்னபலனே பெண்ணென்றுமண்ணில்
செனமமெடுத்தென்னபலனே
மண்ணிற்பிறந்திருந்தும் வாழ்ந்துசுகித்திருந்தும்
வனவாசஞ்செய்யலாச்சுதே மன்னனைவிட்டு
வனவாசஞ்செய்யலாச்சுதே
மன்னனைப்பிரிந்தபாவி வருகையில்கண்டபாம்பை
வனவேடன்கொன்றெரிந்தானே என்மையல்கொண்டு
வனவேடன்கொன்றெரிந்தானே
வேடனெரிந்தபினனுல் விதியைநினைந்துகொண்டு
மெய்மறந்திங்குவந்தேனே விதியையெண்ணி
மெய்மறந்திங்குவந்தேனே
வந்துவேஷமாதினாலும் மாதாகோங்கிலாதேவி
மகாராசிதன்சமுகமே வயிர்வளர்க்க
மகாராசிதன்சமுகமே
வயிர்வளர்த்திடவேண்டி மாலைகட்டித்தான்கொடுத்து
மயிர்வாரிச்சடைபின்னவும் மைபொட்டுமிட்டு
மயிர்வாரிச்சடைபின்னவும்

உடைபின்னிச்சேலைகட்டிக் காதிபோலேவல்செய்து
சயிரந்திரியென்றும்பேரிட்டுச் சனியனாலே
சயிரந்திரியென்றும்பேரிட்டு
பேரிட்டேன்தாயிடத்திற் பிரதஇயார்போலேநானும்
பிழைத்திருக்கிறேனையனே காலங்கழித்துப்
பிழைத்திருக்கிறேனையனே

சாரணள்சொல்-விருத்தம்,

சந்திரவதனத்தாயே தமயந்தியம்மாவுந்தன்
தந்தையினிடம்போய்ச்சொல்லி மையலர்துணையைக்கூட்டி
இந்திரவைபோகமாக விப்போதேவிதர்ப்பதேசம்
வந்துமேசேரச்செய்வேன் மனமகிழ்ந்திருந்திடாயே.

வ-ம், அகோசிரஞ்சீவி ஆசிர்வாதமம்மாதாயே ராசபரமேஸ்வரி உங்களிஷ்டகஷ்டகாலமெல்லாம் தீர்ந்துபோகிறது இனிமேல் சஞ்சலப்படாமலிரும் இந்தட்சணமே வீமராசனிடத்திற்போய்த்தெரிவித்து உங்களை அவவிடமழைப்பிக்கும்படிச் செய்கிறேம் நீ இனிமேல் விசனப்படாமல் சுகமாயிருமம்மாதாயே ராசபரமேஸ்வரி,

சாரணள் வீமராசனுக்குச்சொல்-விருத்தம்,

மாமுடிமன்னர்சூழ்ந்து வணங்குமார்த்தாண்டாகேளீர்
பூமியிலனேகதேசம் போய்ப்பார்த்தோம்களைக்காணோம்
சேதமாயுனதுபுத்ரி சிறியதாய்வீட்டிற்கண்டு
யாமிங்குவந்துரைத்தோம் மையனேயறிகுவீரே,

வ-ம், அகோசிரஞ்சீவி ஆசிர்வாதமையா வீமராசனே இந்தஅவனிகடை ஐம்பத்தாறுதேசம் காடுமலை வனம் ஷேத்திரங்களெல்லாந் தேடிக்காணாமல் சுவாகுபட்டணம் கோக்கிலாதேவியம்மனிடமாக தமயந்தியம்மாள் தாதிவேலைசெயதுக்கொண்டிருககக் கண்டுவந்தோம் ஐயா ராசனே,

வீமராசன்புலம்பல்-தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்,

என்னசெய்குவேனையோ இந்தவிதிக்கு
என்னசெய்குவேனையோ
என்னசெய்குவேனெங்கன் கன்னிகைதமயந்தி
மன்னவனளனென்ன மாகவிருக்கிறோ — என்
நினைத்தால்துயர்பெருகுதே மனம்பதறி
நினைவுமறந்துபோகுதே
கலிசிகதனால்வந்த சர்ப்பனைதானுமுந்த
வனத்திற்குப்போனாரோ மைந்தனைப்பிரிந்தாரோ — என்
தேசமபுகழ்செம் வீரன்செகமுழுதும்
செங்கோலுசெலுத்துந் தீரன்
ஈசனசெயலோமறு வேஷமாகியேயங்கம்
நீசமடைந்தின்னொரு ராசர்க்கேவல்செய்வாரோ — என்
தஞ்சமென்றுனாவைதேனே-மகாகொடிய
பஞ்சமாபாதகஞ்செய்தேனே

மஞ்சன்மனைவியையும் வனத்தில்விட்டவர்போக
வஞ்சகமெண்ணினர்தேடி மயங்கிடவைத்தாரோயோடி — என்

வீமராசன்சொல்-விருத்தம்,

சொன்னசொற்படிநடக்குந் தோகையேபோங்கிமாரே
என்மகள்சுவாகுபட்டண மிருப்பகாலவ்விடமேகி
இன்னவாறெனவேகோங்கி லாதேவிக்கெல்லாஞ்சொல்லிப்
பொன்சிவிகையிலேவைத்துப் புத்திரியையழைத்துவாரீர்.

வ-ம், அகோவாரும்பெண்ணே சகிமார்களே நீங்கள் சுவாகுபட்டணம்போய் என்கொழுந்தியாளான கோங்கிலாதேவியினிடத்தில் தமயந்தியம்மாள்வந்திருக்கிறதைத்தெரிவித்து சகலசம்பிரமத்துடனே அழைத்துவாரும்பெண்ணே சகிமார்களே,

தமயந்தியினிடம் சகிமார்கள்வருகிற-தரு,

இ-ம்-பிலாரி-ஏகதாளம்,

தமயந்திதேவியிடம சகிமார்கள்வந்தனரே
அம்சம்போலேநடந்து ஆரணியங்கடந்து — தம
விதர்ப்பபுரியைவிட்டு வெய்யலிலவதிபட்டு
பாதைப்பாசுவாகுபட்டணம் பாதைகூடியட்சணம் — தம
கோங்கிலாதேவியிடம் கும்பிட்டுரைபாகர
யாங்காய்வீமராசேந்திரன் பாக்கியர்சல்தியாகத் — தம

சகிகள்-விருத்தம்,

இந்திரனுக்கீடாய்வாழு மிராசபத்தினியேகேளீர்
சந்திரகுலத்தில்வந்த தமயந்திதேவியுந்தன
சொந்தமாமகள்தானம்மா சொல்மொழியறிந்துபார்த்து
தந்தையாம்வீமராசன் றான்கூட்டிவரச்சொன்னரே.

வ-ம், அகோசரணஞ்சரணமம்மாதாயே ராசபரமேஸ்வரி எங்கள் வீமராசாவானவர் தங்களிடமாகத தமயந்திதேவிவந்து ஏவல்செய்துக்கொண்டிருக்கிறதுதெரிந்து உங்களுக்குத்தெரியப்படுத்தி அழைத்துவரச்சொன்னரம்மாதாயே.

கோங்கிலாதேவி-விருத்தம்,

தாதிமார்சொல்லக்கோங்கி லாதேவிமெய்மறந்து
கால்தலைமுகத்தைநன்றாய்க் கவனித்துப்பார்க்கும்போது
தாதியரோவல்செய்யத் தாயேவுனறலையில்வேதன
ஏதுக்கென்றெழுதினனோ வெனறவள்புலம்புவாளே,

கோங்கிலாதேவி புலம்பல்-கண்ணிகள்

இ-ம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

என்னசெய்வேனேதுசெய்வே னிவ்விதிக்கென்னசெய்வேன்
இந்தவிதிவந்ததோமகளே
கன்னியர்க்கரசியான மன்னவன்வீமராசேந்திரன்
கருதியதவத்தால்வந்த கண்மணின்மணியே

இந்திரதேவர்களெல்லாம் வந்தனஞ்செய்தேவணங்கும்
ஏகச்சக்ரேஸ்பரியாம் என்கண்மகளே
சந்திரகுலநளேந்திரன் றனக்குன்னைப்பாரியாகத்
தந்தகாரணமிதுவோ என்கண்மகளே
பட்டணஞ்செளபாக்கியமும் பவிசுபண்டாரமுடன்
பாலனும் க்காவுமெங்கே பூமிமகளே
விட்டுநீலண்டியாயிந்த வேஷமென்னிடம்வந்த
விதமொன்றுமறியேனே பிர்மதேவனே
ஆயிரந்தாதிமாருனை யம்சத்தூளிமெத்தைமேலமத்தியுபசரிப்பார் ஐயோமகளே
பூவிதழுநகாலிம்பட்டால் பொறுக்காமற்கொப்பளிகரும்
பொனனடிகள்கொப்புளிக்கப் புறப்பட்டாயே
பொற்சரிகைச்சேலையுடன் பொனபட்டுடைப்பணிகள்
புனைந்துவாழ்ந்திருந்தாயே பூங்கொடியே
துர்ப்பலமாய்க்கேவலமாய்த் துயிலுமில்லாமலிங்கே
தோணினுனெனறுவந்தாயே தோகைமயிலே
பாவியென்கண்ணிலேபார்த்தும் பாக்கியேவல்கொண்டேனேயோ
பற்றுதேவயிறதுநான் பெற்றமகளே.

கோகிலாதேவி-விருத்தம்,

அன்னமேதேனேயெங்க ளருந்தவக்கொழுந்தேயம்மா
என்னகாரணத்தினாலே யிவ்வேஷமாகிவந்தாய்
உன்மனந்தன்னிற்சங்கை யொன்றுமெண்ணமலிப்போ
என்மனந்தேறுதற்கே யியம்புவாயியம்புவாயே,

வ-ம், அகோவாருமம்மா என்னிருகண்மணியானமகளே சர்வலோகேஸ்பரியாகவாழ்ந்து மகாபாவியாகிய என்னிடததில் தாதியென்றுபேரிட்டுக்கொண்டு இந்தவேஷமாகவந்தாயே என்னருமைமகளே நீ யாதொன்றுக்கும் சஞ்சலப்படாமல் நடந்தகாரணத்தை சவிஸ்தாரமாகச் சொல்லடியம்மா தாயே.

தமயந்திசொல்-விருத்தம்,

காரணியாண்டுவாழ்ந்து சனியன்செய்சதியாற்றாழ்ந்து
ஆரணியத்தில்வந்து அரசனுமெனை தூக்கத்தில்
பூரணமாகவிட்டுப் போயினுரசனாலிந்தக்
காரணந்தனக்காளாகிக கன்னிநான்வந்தேனம்மா,

வ-ம், அகோசரணஞ்சரணம்மாதாயே என்னை இந்தவேஷமானவிதம் என்னகாரணமென்று கேட்கவந்தீர்களே நானும் யிராசனும் பிள்ளைகளும் சுகத்துடன் வாழுங்காலத்தில் சனிஸ்வரனமாயையினால் ராச்சியமிழந்து வனவாசம்போனோம் போனவிடத்தில் இராசன் என்னை நிததிரையில்விட்டுப்பிரிந்துபோனார் அவரைத்தேடிக்காணாமல்மிக [illegible]

பேரிட்டுக்கொண்டு உங்கள்சமுகத்துக்குவந்தேன் நான்தமயந்திதானம்மாதாயே.

கோங்கிலாதேவிசொல்-விருத்தம்.

தாயேயென்னம்மாகேளாய்ச் சநியனுலவதிப்பட்டு
நாயகன்றனைபிரிந்து நம்மிடம்வந்துசேர்ந்தாய்
நேயமாய்வந்தத்தாலே நீகலங்காமலுந்தன்
தேயத்திற்றந்தைபக்கஞ் சென்றுவாழ்ந்திருந்திடாயே.

வ-ம், அகோவாருமம்மா எனதுபுத்திரியாகிய தமயந்திநீங்கள்சனிபகவான்மாயையினாலே ராச்சியமிழந்து புருஷனையும் பிள்ளைகளையும்விட்டுப்பிரிந்துஎங்கோமுந்துக்கப்படுகிறாய் உன்தந்தையாகியவீமராசனிடம்போய்உன்பிள்ளைகளைப்பார்த்தாவது சுகமாயிருமம்மாதாயே,

பொது-விருத்தம்.

மகள்தனைவீமராசன் மாளிகைக்கனுப்பவெண்ணிச்
சகலவாபரணவஸ்திரந் தண்டிகைசகிமார்சூழப்
புகழ்பெறுவிதர்ப்பதேசம் போய்வாறுமெனறனுப்ப
அகமகிழ்விலாமற்றந்தை யவரிடன்வருகின்றாளே.

தமயந்தி-தன்தகப்பனிடம்வருகிற-தரு-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்,

தந்தைவீமசேனன்றன்பதம்நாடியேதமயந்திதேவிவந்தாள்
சகிமார்சூழத்தமயந்திதேவிவந்தாள்
அந்தமாந்தாதியர் அருகினிற்புடைசூழச்
சிந்தைமகிழ்ந்தேறிச் சிவிகையதனிலேறி தந்தை

சிறியதாய்கோங்கிலா தேவியுத்தாரங்கொண்டு
சிறப்பாகராஜவீதித் தெருக்கள்பலவுங்கண்டு
அரியமலைவளங்க ளாரணியத்தைநாடி
அழகுதமயந்திபெண் ணரிவையர்தனைக்கூடி தந்தை

மயில்கள்புறாவினங்கள் வாயிதனிலன்னங்கள்
மயிலுங்குயிலினங்கள் மகாவண்டுபூஷணங்கள்
நயமாய்க்கீதம்பாட நரிகள்முயல்களோடே
கயல்விழிமாதராடக் கவரிசாமரைபோட தந்தை

மன்னநளனையெண்ணி மங்கைமனதுங்குண்ணி
அன்னமாகாரந்தண்ணீ ராவல்கொள்ளாமற்கண்ணி
முன்னஞ்செய்தவினை முடிந்ததிப்படியென்று
என்னமாகத்தந்தை யிடத்திற்போய்ச்சேர்வதென்று தந்தை

வீமராசன்-தமயந்தியைப்பார்த்துச்சொல்-விருத்தம்,

ஜீவரத்தினமேயெந்தன் சிரோன்மணியேயான்பெற்ற
பாவையேநான்முன்செய்த பாவபாக்கியமோவுந்தன்

நாயகன்றனைப்பிரிந்து நம்மிடம்வந்துசேர்ந்தாய்
கேவலமாகவந்து கிலேசம்விட்டுரைசெய்வாயே,

வ-ம், அகோவாருமம்மா யென்றபுத்திரியாகிய சிவாத்திரமமே நாங்கள்செய்தபாவமோ அல்லதுநீங்கள்செய்த பூசாபலமோ இராச்சியத்தையும்பிள்ளைகளையும் விட்டுப்பிரிந்து வனவாசம்போனீர்களே உன்னிடபிராணநாயக ரெங்கேபோனார் ஒண்டியாய் அரைநிமிஷமாப் போலவந்தாவல் செய்துக்கொண்டிருப்பனேன் உன்தலையிலிப்படிக்குப் பிரமதேவன் எழுதினானோநல்லதுநீயார்செய்த பூஜாபலத்தினால்என்னிடம்வந்துசேர்ந்தாயினிமேல் நீசஞ்சலப்படவேண்டாம் நீவனவாசம் போனநாள்முதற்கொண்டு நடந்ததைச்சவிஸ்தாரமாகச் சொல்லுமம்மாதாயே,

தமயந்தி-வீமராஜனுக்குச்சொல்-விருத்தம்,

தந்தையேவீமராஜா தயாபராசொல்லக்கேளும்
எந்தனைநீயேன்பெற்றா யித்தக்கண்காகூசிக்கோதான்
சொந்தநாயகனுமென்னைச் சோதிக்கவிட்டுப்போனார்
அந்தரபட்சிபோல வலைந்துநான்வந்தேனையா,

தமயந்தி-தன்தகப்பனிடத்தில்-முறையிடல்-கண்ணிகள்,

இ-ம்-முகாரி-ஜம்பைதாளம்.

ஆதிமுதலின்றளவில் ஐயனேநடந்தகதை
சூதினாற்பதியிழந்தேன் துணைவருடன்காட்டில்வந்து
காதலன்னபட்சிதன்னைக் காவலன்பிடிக்கபின்னே
சோதனைசெய்யவேயன்னந் துகிலைப்பறித்தேகவின்னம்
அரசனும்நானும்வந்து அடவிதனிலேபுகந்து
ஒருதுகிலையிருவோரு முடுத்துநித்திரைசெய்தோம்பாரு
பெருவனத்திலென்னைவிட்டேன் பிராணநாதன்பிரிபட்டு
அருவையென்னையொண்டியாக வரசனும்பிரிந்துபோக
மயங்கித்தியங்கிவரும் வழியில்மறித்தாடிவொரு
புயங்கமென்னைக்கொல்லவந்த போதுவன்வேடனெந்தன்
நயந்தருகில்வந்திருந்தா னங்கையெந்தனுடலெரிந்தான்
மாதவரிஷியைக்கண்டேன் வணிகர்துணையைக்கொண்டேன்
சேதஞ்செய்யசெட்டிதன்னைச் சினந்தானைசெல்லபின்னே
பாகைகூடிச்சுவாகுநாடு பாவிவந்தேன்பட்டபாடு
சிறியதாயுடனேமெய்யாய்ச் செப்பிவிங்குவந்தேனையா

வீமராசன்சொல் விருத்தம்.

பாரினிலெங்களைபபோற் பாலனைபபெற்றோரிந்தக்
காரணங்கண்டாருண்டோ கர்த்தனேகமலவாழ்வே
ஆரணன்முன்னஞ்செய்த வதீதமோபகவானுக்கும்
காரிக்குங்களிப்பாய்ச்செய்த கண்காட்சிக்காளானேனே.

வீமராசன்-தமயந்தியைப்பார்த்து-புலம்பல்-தரு

இ-ம்-சாவேரி-திரிபுடை-தாளம்.

என்செய்வேனம்மா-என்கண்ணேநான்
என்செய்வேனம்மா
உன்சுகம்பார்க்கவு மென்றுபார்திர்க்கவும்
உள்ளந்தனிலெண்ணி வுருகுதுடலகுண்ணி என்செ
பொன்னேகண்மணியே சிலையில்லாபூஷணமணியே
அன்னமேதேனே யமுதேதையழகுயர்மானே
முன்னோர்செய்தவினை மூணடதுவோவுனே
என்வயிற்றினில்வேதனேன் படைத்தான்சுதன் என்செ
நளனுன்னைக்கொண்டான் உன்னைவிட்டுநடுக்காட்டிற்சென்றான்
இனிமொழிமாதே மனதினிற்றிலேசம்வையாதே
அழுகாதேபுலம்பாதே யம்மாபயப்படாதே
விழுகாதேதயங்காதே விதியின்பயன்விடாதே என்செய்
பஞ்சணைவிட்டேஎன்னம்மாயிப்பாடுகள்பட்டே
கைங்கணைபபிரிந்தேயிப்படிபட்டு வந்தாயேபரிந்தே
அஞ்சுகமேயென்றன் அன்னமேசொர்ணமே
நெஞ்சங்கலங்காதே நின்றுபுலம்பாதே என்செய்

தமயந்திசொல்-விருத்தம்.

அண்ணலேயென்னைப்பெற்ற வையனேயருமையாகப
பெண்ணெனவளர்த்திரிந்நாள் பிரிந்தவென்கணவன்றன்னை
கண்ணிலேகாணுமெத்த காலங்களாச்சுதென்ன
பண்ணுவேன்மாலேயிட்ட பத்தாவைவரக்காணேனே,

வ-ம், அகோசரணஞ் சரணமையாசுவாமி என்தந்தையாகியவீமராசனேநாங்கள் ராச்சியபாரம்விட்டு வனவாசமனுத்தவிடத்தில் என்னைவிட்டுபபிரிந்துபோன எனதுபிராணநாயகன் இதுவரையிலும் வரக்காணேம்இனிமேல்சும்மாயிருந்தால் அபகீர்த்திவரும் ஆகையால் நம்மிடசாரணபுரோகிதரானவர்களே இந்தஐம்பத்தாறுதேசங்களிலும் காடு-மலை-வனந்திரம்-ரிஷிசுராளாசிர்மம் இதுமுதலானதுந்தேடிப்பார்த்துவரச்சொல்லுங்களையா சுவாமி.

வீமராசன்-விருத்தம்,

சண்டமாருதத்தையொத்த சாரணரேகேளீர்க
மண்டலத்தனிலேயுள்ள மானகந்தனிலெங்கும்
[illegible]டிலுசேனந்திராசன் காணக்கூடாதவேஷம்
[illegible]டிருப்பார்காணீர்கள் குறியறிந்துரைசெய்வீரே.

வ-ம்; அகோ[illegible]களையா சாரணப்புரோகிதர்களே இந்த அவனிஐம்பத்தாறுதேசங்களும்-காடு-மலை-வனம்-வனந்திரங்கள் ரிஷிசுராள்ஆசிர்மம் இதுகளிலேநீங்கள் தேடினால் அப்படியே அவர்முன்னிருந்தமாதிரியா யிருக்கமாட்டார் வேஷமுமாரியேயிருப்பார் ஆகிலும்நீங்

கள் அபபோடபட்ட விடங்களிலேயுள்ள தந்திரவுபாயமாகவிசாரித்து அவருடன்கலந்துபேசி அந்தக்குறிகுணங்களையும் அறிந்துவந்துசொல் லுங்களையா சாரணபபுரோகிதர்களே.

சாரணன்-நளராஜனைத்-தேடிவருகுதல்-தரு

இ-ம-மோகனம்-ஆதிதாளம்;

தேடிபபார்த்துவருவோம்-வாரீர் நளராசனைத்
தேடிபபார்த்துவருவோம்

தேடிபபார்த்துவருவோம் செயவிடதபதியைக்
கூடிநடவுங்காணுங் குச்சரதேசம்வந்தோம் தேடி.

வசனம், ஒய்சுபபையயரே ஒய்குபபையயரே இவவிடத்தில் நளமகா ராசரிருக்குறாரா பாருங்காணும்பாரும் ஒய்இவ்விடத்தில் காணோம்காணும்காணோம் இல்லாவிட்டால் அளந்தாதான் குறுணிகாணும்,

தரு வங்கணதேசஞ்செல்வோம் வாரும்மராடலிங்க
மாளுவதேசத்தேநீபாரும்
கொங்கணதேசத்திலுந்தேடிக் குருபியாணை
கொற்றவநளன்மன்னனைநாடி
எங்கிலுமவனைக்காணு தேங்கியேமுகம்வாடி தேடி.

வசனம், ஒய் அபபணிபபட்டவரே ஒய்சுபபணிபபட்டவரே எங்கே காணுகோணும் இந்தத்தேசங்களெல்லாம் போய்த்தேடிக் காடு-மலை-வனம்-வனாந்திரங்கள்யெல்லாம் பார்த்தோமேநாம் என்னகாணுஞ் செய்கிறது வீமராசன்முகத்தில் எபபடிகாணும்விழிக்கிறது ஒய் போவோம் வாருங்காணும் அபபடியல்லகாணும் அல்லஇன்னமுண்டான தேசங்களெல்லாந் தேடிபபார்த்துககண்டுவந்தோமேயானால் ஒய் மோகனமாலை கண்டசரபபளி இதுகளெல்லாம் வெகுமதிகொடுபபார்காணும் ஆம் ஆம் அல்லகாணும் எனக்குவருகிறதற்கு மனதில்லைகாணும் ஆனால்நீபோய் வாருங்காணும் சூத்திரபபொட்டிமகனே,

நடந்துவாரகைக்குச்செல்வோம்-அயோத்தியிற்போய்
நன்றாய்விசாரணைசெய்வோம்
அடமாய்நளனைக்கிட்டிணவயோம் அதுகண்டங்கு,
ஆர்வந்தெதிர்பபாரதை பார்பபோம்
படபடவேயுரைத்தால் பார்த்துககொள்ளுவோம்நளன்
இடம்விட்டுவேஷமாறி யிருபபாரதுவேநிசம் தேடி.

வசனம், ஒய்வெங்கடராமகுருக்களே ஒய்கிருஷ்ண குருக்களே இது அயோததியாபுரி பட்டணங்காணும் இவ்விடததில் அங்கே பார்தததுபோல் பார்க்கலாகாதுகாணும் ஒய் அந்தநளராஜா தமையந்தியைவிட்டுபபிரிந்துபோனதினால் அவரைத தூஷணிததுப பேசினோமேயானால் எபபடியும்வெளிபபடுங்காணும் இதற்குச் சந்தேகமில்லை ஆனால்,

திவந்துஅகர்குப்பதிலுக்திரவுகொடுத்தால் பார்த்துக்கொண்டுபோய்த்தெரிவித்துடபோடுசிவாங்காணும்ஓய் ஆம்ஆம்மெய்தான்காணும்சப்பாசுகனுய்யோசனைசெய்காய் சரிசரி ஆனாலந்தரிதுபர்னராசன் சபையிற்போய் தூஷிப்போம்வாருங்காணும் " "

சாரணன்-விருத்தம்,

மண்டலத்தனிலேவாழும் மன்னராயிருந்தபேர்கள்
கொண்டபெண்டிரைப்பிரிந்த கொடுமைமையைக்கண்டதுண்டோ
விண்டிடப்பார்த்துநல்ல வீரமல்லார்க்குவேறு
பெண்டிரும்பிள்ளைவேண்டாம் பெரிதோதன்வயிறுதாமே.

வ-ம், அசோகேளுங்களையா அயோத்தியாபுரியிலிருக்கிற ரிதுபர்ணமகாராசசபையோர்களே கேளுங்கள் அக்தென்னவெனில் உலகத்திலாண்பிள்ளையாகப்பிறந்தால் கொஞ்சமாவது ரோஷம்வெட்கம்இதுமுதலானதுகளுமேனும் இல்லையென்று நிடதபுரியாளப்பட்டநளச்சக்கிரவர்த்திமகாராசனைசெய்த அன்னீதத்தைக்கேளுங்கள் ஆபத்வருங்காலத்தில் தன்பெண்சாதிபிள்ளைகளுடனே குடும்பசமேதராயிருக்கவேண்டியது அப்படிக்கில்லாமல் தன்பிள்ளைகளைஒருபக்கமும் பெண்சாதியைக்கூடஅழைத்துக்கொண்டுபோய்க் காடிபுலி மிருகசாதிகளிருக்கப்பட்டகாட்டிலே தமயந்தியை நித்திரையிலனாடியாய்விட்டுவிட்டுஓடிப்போய்விட்டார் இதுலோகத்தாருக்கடுக்குமா இப்படிக்குச் செய்யலாமாசொல்லுங்களையா புண்ணியபுருஷர்களே,

பாகவன்-விருத்தம்,

ஏதுகாண்சாரணனே யிகத்தினிலெவரானாலும்
தீதினாலனேகந்தொல்லைச் சிறுமையால்மனைவிமக்கள்
காதலைமறந்துபோனார் காணுதவிடத்திலநீங்கள்
பேதமாயிகழ்ந்துபேசப் பித்தரோசொல்லுவீரோ,

வ-ம், அசோவாருங்கள்சாரணப்புரோகிதாளே உலகத்தில்ராஜாதிபதிகளுக்கு ஆபத்வருங்காலத்திலபெண்சாதிபிள்ளைகளைவிட்டுப்போகிறது வருவதும்மனுநிலையில்லை ஆகிலும்நீங்கள்ராசாக்கள்நிறைந்தசபையில் அந்நளமகாராசாவை மானம்வெட்கமில்லையென்றும் இப்படிதூஷணிப்பது அக்காரமசாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது மேலுமந்தராசா என்னஅன்னீதஞ்செய்திருக்கிறார் தன்னுடனேகூடப் பெண்சாதியானவள் காட்டிலகஷ்டபபடலாகாதென்று தாய்வீடுபோய்ச்சேரட்டுமென்றுவிட்டுப்போனால் இதுதப்பிதமா இந்தச்செய்தியெல்லாம் அந்தநளராசனிருந்து கேட்டதேயுண்டானால் உங்களை நாக்கைப் பிடுங்கிப்போடுவார் சிபோ பைத்தியங்கொண்டசாரணப்புரோகிதாளே,

சாரணன் வீமராசனுக்குச்சொல்-விருத்தம்,

மண்டலாதிபனேமன்னர் மதிபனேசொல்லக்கேளும்
எண்டிசைதனிலெண்ணேழு தேசங்களெல்லாஞ்சுத்தி

கண்டுவந்தோம் நளேந்திரன் கருத்தறிந்துரைபகர்ந்தோம்
சண்டையேசெய்துபோனார் தாமிதைதவருகுவீரே,

வ-ம், அகோசிரஞ்சீவி விதர்ப்பதேசமாளப்பட்ட வீமராசன்தேவரீர்திருவுளப்பிரகாரம் ஐம்பத்தாறுதேசங்களும் காடுமலைவனம்வனாந்திரங்களெல்லாம்போய்த்தேடி அவ்விடத்தில்தூஷித்து மறுபடியும் அயோத்தியாபுரிரிதுபர்ணமகாராசன்சபையிலும்நின்று அந்நளராசனைத்தூஷணித்துவரும்போது அவ்விடத்தில்பாகவனென்னும் ஒருவர்வந்து எங்களைத்தடுத்து பேசாதெல்லாம்பேசிப்போனார் அவரைப்பார்த்தால் மெத்தவும்விகாரரூபமுள்ளவராயிருக்கிறார் இதுதான் நாங்கள் போய்க் கண்டுவந்தோமையாராசனே,

தமயந்திக்கு வீமராசன்சொல்-விருத்தம்,

திங்களைநேர்முகத்தினாளே செல்வியேசென்றதூதர்
எங்கும்போய்பார்த்தயோத்தி யிறைரிதுபர்ணன்பககல்
நங்கையேயிருக்கக்கண்டு நவின்றவுத்தாரங்கேட்டு
இங்கிதோவந்தாரம்மா யினியிதற்கென்னசெய்வோம்,

வ-ம், அகோகேளுங்கள் எனதுபுத்ரசிகாமணியாகிய தமயந்திநானனுப்பினசாரணப்புரோகிதாள் செகமுழுதுந்தேடிக்காணாமல் அயோத்தியாபுரிபட்டணத்திற்போய் அந்நளராசனைத் தூஷணித்தார்களாம் அப்போதவ்விடத்தில் தடுத்துபேசினவொருவருமில்லை திரும்புங்காலையில்யாரோ ஒருவிகாரரூபமுள்ளவன்வந்து இவர்களைமறித்துபேசாதெல்லாம்பேசிப்போனானாம் ஆனாலெனக்குச்சந்தேகமில்லை உன்புருஷனாகவேயிருக்கவேணும் இதற்கென்னயோசனைசெய்கிறது சொல்லுமம்மாதாயே,

தமயந்திசொல்-விருத்தம்,

தவஞ்செய்துபெற்றெடுத்த தந்தையேசரணங்கேளீர்
நிலந்தனிற்றமயந்திக்கு யிரண்டாம்விவாகமென்று
சுயமரம்நாட்டினோம்யாம் சுருக்கினிற்ரிதுபர்ணேந்திரன்
வருகவேதிருபந்தூதர் வசத்தினிலனுப்புவீரே,

வ-ம், அகோசரணஞ்சரணமையாசுவாமி எனதுதந்தையாகிய வீமராசனே இப்பவுமென்மகள்தமயந்திக்கு இரண்டாவதுசுயம்வரம் நாட்டியிருப்பதனால் சகலதேசத்துராசாக்களும்வந்திருக்கிறார்கள் நாளையுதயத்துக்கு முகூர்த்தமானபடியால சாமம் அதிசீக்கிரத்தில்வந்து சேருமென்று ரிதுபர்ணமகாராசனுக்கு திருமுகமனுப்பினால் அவருடனே நளதுராயகரும்வந்து சேருவாரையாசுவாமி,

வீமராசன்-விருத்தம்,

சீர்பெறுமயோத்தியாளுஞ் செயரிதுபர்ணேந்திரற்கு
ஏர்பெறும்வீமராச னெழுதியதிருபங்கேளீர்

பாரினிலெளதுபுத்திரியாக்குளதமயந்திக்குச்
சூரியவுதயத்திற்குச் சுயம்வரமெனச்சொல்வீரே,

வ-ம், அகோவாருமையாசாரணரே இந்த நிருபத்தை அயோத்தியாபுரியாளப்பட்ட ரிதுபர்ணமகாராசனிடத்திற்கொடுத்து விதற்பதேசத்தில் தமயந்திக்கு இரண்டாவதுவிவாகமானபடியால் நாளையதினம் சூரியவுதயத்துக்கு முகூர்த்தமென்றுசொல்லி சந்தியாய்வரும்படி தெரியப்படுத்திவாருங்களையாசாரணபுரோகிதரே,

சாரணன் ரிதுபர்ணராசனுக்குச்சொல்-விருத்தம்,

தலமெலாம்புகழ்மிகுந்த சபரிதுபர்ணராசே
சலமறுவீமராசன் சாரணன்வந்தோமையா
நிலமெலாமறியவொண்டாம் விவாகமென்மகளுக்கென்று
உவகையாய்ச்செய்திசொல்லி ஓலையைத்தரச்சொன்னாரே,

வ-ம், அகோவாருமையா ரிதுபர்ணமகாராசனே விதற்பதேசத்தையாளப்பட்ட வீமராசன்புத்திரியாகிய தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரம்நாட்டியிருப்பதால் சகலதேசத்துராசாக்களும்வந்திருக்கிறார்கள் தாமுமதிசீக்கிரத்தில்வரவேண்டியது நாளைசூரியவுதயத்துக்கு முகூர்த்தமானபடியால் வந்துசேரவேணுமையாமகாராசனே,

பொது-விருத்தம்,

கரந்தனிற்செங்கோற்கொண்ட காவலன்வீமராசன்
வரவிட்டநிருபந்தன்னை மன்னவன்ரிதுபரேந்திரன்
தரமிகுஞ்சபையிலோலை தன்னைவாசித்துபார்த்துச்
சிரவணனந்தங்கொண்டு ஜெயபேரிமுழக்கினானே,

ரிதுபர்ணராசன்சொல்-விருத்தம்,

கொண்டதேசர்சக்கிரவர்த்தி கொடுத்துவையாமற்போனார்
பெண்டவள்நமக்கில்லாமற் பின்னொருவருக்குமுண்டோ
இன்றுநான்விதர்ப்பதேச மிக்ஷணஞ்செல்லவேணும்
நன்றாகரதத்தைப்பூட்டி நடத்துவாருர்சொல்வீரோ,

வ-ம், அகோவாரும்பிள்ளாய் சாரதிமார்களே விதர்ப்பதேசத்தில் தமயந்திக்கு இரண்டாவதுமுகூர்த்தமானபடியால் நாம்போகவேணும் ஒருவேளை அந்தபெண்ணானவள் நமக்குக்கிடைத்தாலுங்கிடைக்கும்நாளைசூரியவுதயத்துக்கு நம்மைக்கொண்டுபோய்ச் சேர்க்கிறவர்கள் யார் சொல்லும்பிள்ளாய் சாரதிமார்களே,

சாரதிசொல்-விருத்தம்,

வாழ்வினின்மிகுத்தவெங்கள் மகாராசனேநீர்கேளும்
தாழ்விலாவுமதுவார்த்தை தன்னைப்போலரதம்நடத்த
ஏழுநாமாதஞ்செல்லு மிவிடம்விட்டவிடம்போக
ஆழியானாலுமேக அருணனால்முடியாதையா,

அகோசரணஞ்சரணமையாசுவாமி ரிதுபர்ணமகாராசனே தங்கள் உத்திரவின்படிக்கு விதர்ப்பதேசத்துக்கு ரதம் நடத்தவேணுமானால் ஆயிரம்யோசனை தூரமிருக்கிறது அனபடியால் நாளை சூரியவுதயத்துக்கு ரதம்போகவேணுமானால் எங்களாலேயும சூரியபகவான்சாரதியான அருணனாலேயும் முடியாதையாசுவாமி,

பாகவன்சொல்-விருத்தம்,

போகபூமியர்கள்போற்றும் புரவலாசரணஞ்சேரும்
தாகமாகொடியிற்றேனை தானடத்துவராயென்றீர்
வேகமாய்ரதம்நடத்தும் விதனைதயெனளிடத்திலுண்டு
ஏகவேமனமிருந்தா லேகுவோம்வருகுவீரோ,

பாகவன் சொல்-தரு-இ-ம்-மோகனம்-ஏகதாளம்.

சரணஞ்சரணமையனே தயாபரகிருபாகரா
சாரதியஞ்செய்வேனையனே
அருணன்றேரோட்டினவனெனக்கிணையாமோ
இரணையோசனைவழிதேர்ச்செல்லும்பொய்போமோ

ரிதுபர்ணன்சொல்-தரு,

சொல்லுமென்பாகவனே சொகுசா அவுசா
கரையாகிணாயா தொகைசொல்லும்பாகவனே
தொல்லுலகறியவே சுயவரமெனவீமன்
சுருக்காய்வரச்சொன்னதால் தொலைதூரமிருக்குதே சொ
இருந்தால்நாளை யேகுவோமினிதாய்கனிநா
யிதமாய்பதமாய்ரதமவிடுவேணையனே
வருந்தவேண்டாமொரு முகூர்த்தந்தனில்வீமன்
மானகர்க்கேயும்மைநா னேகொண்டேகுவன் இரு
அ-ன், நான்கொண்டுசெல்வேனென்றாய் நல்லாய் வல்லாய்
நில்லாய்சொல்லாய் நாடும படியேசெல்வாம்
தேன்மலரணிகுழற் தமயந்திக்குமணஞ்
செய்யமோகனங்கூறி க்ஷணத்தில்விதர்ப்பபுரி நான்

ரிதுபர்னராசன்சொல்-வசனம்,

அகோவாரும்பிள்ளாய் பாகவனே நம்முடைய குதிரைலாயத்தில் போய் நல்லபுரவியைப்பார்த்துவந்து நம்மிடத்தை அலங்காரஞ்செய்துக்கட்டிசவாரிக்கேதுவாகவந்து சொல்லுமபிள்ளாய்பாகவனே,

பாகவன்சொல்-விருத்தம்,

அரிகரிஸ்ரீனிவாசா அநாதரக்ஷகரோயானும்
திருவுளசெயலினாலே செகமொருகுடையிலாண்டு
கரியவனாலுமெந்தன் கன்னிசெய்கபடத்தாலும்
சிறுமையாய்ரதசாரதியஞ் செய்வதற்காளானேனே,

பார்க்கவன்புலம்பல்-கண்ணிகள்-இ-ம்-நீலாம்புரி ஆதிதாளம்.

என்னசெய்குவேனையோ என்றலைவிதிவசம்
இப்படிக்கிருந்ததோ என்னசெய்வேன்
மன்னர்மன்னரவர்கட்கு மன்னவனையிருந்து
வாழ்ந்தபலனிதுவோ மாதவனே — சுவாமி
தன்னைப்பணிந்தவர்க்குத்தானே பணிந்துரந்த
சாரத்தியஞ்செய்யவுமென்றலைவிதியோ — சுவாமி
முன்னஞ்செய்தபாவமோ இந்நாள்செய்யுந்தவமோ
முடிந்ததிப்படியோ தாணிமுரகாரியே — சுவாமி
திக்கெங்கும்புகழ்பெற்றசக்கிராயுதந்தரித்த
செய்வனுமையுங்குன்றச்செய்குவாளோஎன்றேவி — சுவாமி
துக்கம்பெரிதென்றெண்ணிச்சுகத்தைவிரும்பினளோ
சோதனைசெய்குவாளோசகிதானே — சுவாமி
தெற்குவடக்காய்த்திங்கள் தினகரன்மாறினும்
சித்தங்கலங்கிடாளே தேவிஐயோ — சுவாமி
சித்திரையிலுமென்றன்னினைவுமறந்திடாளே
தெரியதுரியாச்சேதின்செயலோ — சுவாமி

பாகவன்-விருத்தம்.

ஐயனேயரசர்கோவே அடியேனைரதசிங்காரம்
செய்யவேயுரைத்தாற்போலசிங்காரஞ்செய்துவந்தேன்
மெய்யாகவிதர்க்குவீமன் விதர்ப்பதேசத்தினுக்கும்
ஐயாயிரங்காதங்காண் ஆண்டவாசொல்லுவோமே

வ-ம் அகோவாருங்களையாசுவாமி ரிதுபர்ணமகாராசனே தேவரீர் உத்தாரப்படிக்குத்தேரை அலங்காரஞ்செய்துவந்தேன் இதற்கும்விதர்ப்பதேசத்துக்கும் ஆயிரம்யோசனைதூரமிருபத்தினாலே காலதாமசஞ்செய்யாமல்தேவரீர் தேரிலெழுந்தருளவேணுமையாசுவாமி.

பொதுவிருத்தம்,

சாரதிகொண்டுவந்தகங்கமாரதத்திலேதான்
வாரிதுசுவரமண்விண்மண்டலநடுநடுங்க
மேருவையொத்ததிண்டோளன்வேந்தனுந்தேர்மேற்கொண்டு
சீருயர்விதர்ப்பதேசஞ் சேரவேபுறப்பட்டாரே

ரிதுபர்ணன்விதர்ப்பதேசவருகிறதரு இ-ம் மோகம்ஏகதாளம்.

இராசன்ரிதுபர்ணன்ரதமேறியே விதர்ப்பன்காக்குநடந்தனனே
ஆசிக்கவிவாணர் ஆரியர் — கூறவே
அமைச்சர்பிரதானிக — ளருகினிற்சேரவே
வாசமிகும்பன்னீர் — வாடைகள்வீசவே
மன்னர்திறைபணிந்து — நன்மையம்பேசவே ராசன்
தேயந்தனிலேவீமராஜன்புத்திரிநளன்தேவிதமயந்திக்கே —

மூவுலகமறியசுயமரமாட்டியே முகூர்த்தத்துக்கேருகற்கே
மாவேகமாகத்தேர்பூவலஞ் செய்யவே
வானவர்யாவருமலர்மாரி பெய்யவே
கோபத்துடனேநளன்வாம்பரிக தூண்டவே
குதிரைகளனு மானிக்தேவிண்ணிற் றூண்டவே ராசன்

ரிதுபர்னன்சொல்விருத்தம்.

தேரேறிரிதுபர்னேந்திரன்சொல்லுமப்போதிலேதான்
சாதருநழுவிழச்சாரதிகனக்குரைத்துத்
தேரையிவ்விடம்நிறுத்திச்சீக்கிரந்தன்னிற்சென்று
ஏர்மிகுஞ்சாதருவை யெடுத்துநீவருகுவாயே

வ-ம் அகோவாரும்பிள்ளாய்பாகவாநாம்ரதமேறி வருகிறவேகத்திலேயேலேபோட்டிருந்த சாதருநழுவிபூமியிலேவிழுந்துவிட்டது சற்றுநேரம்தேரைஇவ்விடத்தில் நிறுத்திவிட்டுப்போய்பார்த்தெடுத்துவாரும்பிள்ளாய்சாரதியே.

பாகவன்சொல்விருத்தம்.

தேர்தனைநிறுத்துமெனறு செப்பியவிதற்குள்ளாக
பாறும்யோசனைதான் மூன்றுபாத்திபாவந்துமிப்போ
காரியம்பெரிதுநாமுங்கடுகவேசெல்லவேணும்
வாருமென்றுரைதது த்தேரைவணமையாய்நடத்தினாரே

வ-ம் அகோ வாரும்நளேயாசுவாமிரிதுபர்னமகாராசனேதேவரீரவர்கள்தேரைநிறுத்தவேணுமென்று சொன்னதர்குள்ளாகத்தேரானதுமூன்றுயோசனைதூரம வந்துவிட்டது நாம்வந்தகாரியம்பெரிதேயொழிய இதுபோனது பெரிதல்லகாலதாமிசமாகிவிடும்ஆகையால்தேசத்துக்குடுகிறேனேயாசுவாமி.

ரிதுபர்னராசன்-தரு

அண்டபுவனமிரண்டுங்கதிமதியும் அதிரநக்ஷத்திரமும்
விண்டலந்தனிற்பரியாய்கின்றவேகத்தால்வேலவரொருபுறமும்
கண்டுநடுங்கிக்கிடுகிடென்றேயிவன்
காவலனளன்றனைப்போலேகாணுதிவன்
என்றுபேசிக்கொள்ளவிறைரிதுபர்னராசன்
மண்டலாதிபவுத்தண்டவீரப்ரகாசன் ராசன்ரிது

பொது,விருத்தம்

அதிபனும்ரிதுபர்னேந்திரனநேகதூரங்கள்செல்லக்
குதிரைகளினைப்பாயாகுங்குறிகண்டுபாகனப்போ
அதிதுரையாயவிழ்த்து அசுவமந்திரம்போதித்து
எதிர்மிக்கரிதுபர்னேந்திரனியம்புவான்சாரதிக்கே

வ-ம் அகோதெப்படியெனறால்இந்தப்பிரகாரம்ரிதுபர்னராசனுனவர்தேரிலேற்றிக்கொண்டுவரும்போது போட்டிருந்தசாதருவிழுந்துபோக அதைஎடுத்துவரும்படிசொல்லஅப்போதுபாகவன்அ

துமூன்றுயோசனை தூரத்துக்கப்புறம் விழுந்துபோச்சுதென்றுசமாத் னஞ்சொல்லியழைத்துக்கொண்டுவர அப்போதுகுதிரைகள் அனேகம் யோசனை தூரம்வந்ததினால் இளப்படைந்துதத்தளிக்கிறதைப் பார்த் துபாகவன்குதிரைகளையவிழ்த்துதண்ணீர்காட்டி அசுவத்துக்குஅசுவ மந்திரங்களைப்போதித்துகுதிரைகளை தடவிக்கொடுத்துக்கொண்டுநிற் கிற பாகவனைப்பார்த்து ரிதுபர்னராசன் சொல்லுகிற விதமெப்படி யென்றால்

ரிதுபர்னராசன்சொல்-விருத்தம்

எனதகமகிழும்நல்லயிரதசாரதியேகேளாய்
வனமிதில்வாழுந்தானிமாந்தழைகனிகாய்பூக்கள்
கணிதமொன்றுரைப்பேன்கேளாய்பழம்லக்ஷாதக்ஷம்
புனிதமாயிலைகள்கோடிபோய்பார்த்துவருகுவீரே

வ-ம் ஆகோவாரும்பிள்ளாய் பாகவசாரதியே இந்த அசுவமந்திர மானது இப்பேர்க்கொத்தகேவலமுள்ள அசுவத்திற்குப்போதித்துஇ வ்வளவுதூரம்வந்துநான் எங்குங்கண்டதுமில்லைகேட்டதுமில்லைஆனா ல்நானொருமந்திரஞ்செய்கிறேன் இதோஎதிரேயிருக்கிறதானிமாத்தி ல் பூலக்ஷம்காய்லக்ஷம் கனிலக்ஷம்இலைகள்கோடியிருக்கிறதுநீர்போய் எண்ணிப்பார்த்துவாரும்பிள்ளாய் சாரதியே

பொது-விருத்தம்

கனிமொழியான் தமயந்திமறுகல்யாணக்
  கருத்தறிவோமென்றுரிதுபர்னன்றேரை
அனிலமதற்கெண்மடங்காய்நடத்தும்போது
  அரசனுரைந்திடுங்கணக்கையாய்ந்துபார்க்கத்
தனிநளனும்வந்துமரத்தின்கீழ்நின்றுத்
  தான்றிக்காயொன்றதிகந்தன்னைக்காணச்
சனிபகவானேழரையுஞ்சரியாய்ச்சென்று
  சக்கரவர்த்திமுன்னெழுந்துசாற்றுவானே

சனிபகவான்நளராசனுக்குமுன்வருதல்-தரு.

இ-ம்-கலியாணி-திரிபுடைதாளம்.

சாக்ஷிகொடுக்கநளராசனைதேடி சேரகலிராஜேந்திரன்வந்தார்
சூக்ஷியாகமெத்தசோதனைசோதித்து
மாக்ஷிமையுடன் ருனிமரத்தடியிற்குதித்து
சத்தரிஷிமுனிவர்சி தர்தேவர்களும்
  சனகாதிபகிலேதளரச்செய்தபரன்
அத்தன்மால்பிரமன் சித்தங்கலங்கியவ
  ரவர்கள்நடுங்கும்படி ரடித்தகெதாதான்
எத்தகலந்தனிலுள்ளஜீவமுகத்திற்களையும்
  எறும்புதலைக்கடையானையுயிர்களையும்

பத்திப்பிடித்துத்தாழவைத்திடுந்தீரன்
நத்திப்பணிகுவோ ரைரட்சிக்குமுபகாரன் காகூஷி
ஆதியிலேதமயந்தி தனைக்கொள்ள
ஆசைகொண்டாரவளவேண்டாமென்றுதள்ள
வேதனைசெய்யமனந்தனிலேயெண்ணி
வெகுகாலமாயநளன் வீடுசென்றேநண்ணி
பாதத்திலேகீர்சடா தனிடத்தைப்பற்றி
பதிகுலையச்செய்தசனிபகவான்வெற்றி
கோபத்தையுடனக்குறையையெல்லாம்விட்டுக்
கொடுத்திடலாம்நளன்றனக்கேயுடன்பட்டு காகூஷி
இத்தனைபாடும்படுத்திவைப்பதேசரி
யீசுரன்செயன்செயலென்றிருந்தானளனினி
பத்தினித்தமயந்திபதிவிருதாக்கினி
பத்திக்கதிக்குநேயென்செய்குவோமினி
ஆத்தமும்வாழ்வுமரசாதிபத்யமும்
அவனுக்குண்டாகவருள்செய்துநித்யமும்
வைத்துநிஷதாபுரியாளமுடிசூட்டி
வருகுவோமென்றெண்ணித்திருவுளத்தில்நாட்டி காகூஷி

நளராசன்சனிபகவானைத்துதித்தல்-கண்ணிகள்.

இ-ம்-மத்தியமாவதி-ஆதிதாளம்.

ஆதிபகவானேயருளானாநமஸ்காரம்
வேதமுதலார்துதிக்கும் மேலாநமஸ்காரம்
சந்தன்மூகுந்தனெழில்காமன்ரகுராமன்
முந்தத்துயர்படவேசெய்தமூர்த்திநமஸ்காரம்
விந்தன்கோவிந்தன் அரிச்சந்திரன்சராசந்தன்
எந்தாயிடர்கொள்ளச்செய்தயிறைவாநமஸ்காரம்
சனகன்முனிகனகன்புகழ்கனத்தமாபலியும்
ஞானகிசிறையிருக்கச்செய்தசுவாமிநமஸ்காரம்
ஈசன்அளகேசனிந்திரராசன்விக்கினேசன்
நீசமடையவுமேசெய்தநீலாநமஸ்காரம்
மாசின்மறைதேவர்முதல்வணங்குஞ்செயல்பெற்றோன்
தாசாநுகூலாசனியீசா நமஸ்காரம

நளராசன்சொல்-விருத்தம்

சோதியேசுடரே அண்டர்துயரழுத்தின்பநல்கும்
ஆதவத்தொழுநேதயென்னையாண்டருள்செய்யுமையா
ஏதுகுற்றஞ்செய்தா லுமீஸ்பராபொருத்துக்காப்பீர்
வாசமாமுனதுபாதமலரடிசரணந்தானே

வ-ம்அகோசரணஞ்சரணமையாசுவாமிசனியீசுரபகவானேதேவ
ர்ரவர்கள்வந்தபோதேநான்தன்னியனுனேன்ஜென்மசாபல்யநிவர்த்தி

பெற்றேன் அடியேன்யென்னகுற்றஞ் செய்திருந்தபோதிலும் தேவரீ ரவர்கள்பொருத்துரட்சிக்கவேணுமையா சுவாமி.

சநிபகவான்சொல்-விருத்தம்,

எந்தனைப்பணிந்துபோற்றுமிராசராசேந்திரா கேளாய்
வந்தனைசெய்ததெல்லாமனதுசந்தோஷமாச்சு
உந்தனைச்சோதித்தோமொழுமக்கொருகுறைவுமில்லை
வந்தகாலுனக்குவேண்டும்வரந்தனையருளுவோமே

அதோவாருமையா நானுனக்குச்செய்த வஞ்சனையினாலுங்கொடுமையினாலும் நீர்பொருத்து சத்தியந் தவறிடாலும பெரியோர்களை நிந்தியாமலும் இதுகாலம்வரையில் படாதபாடெல்லாம் பட்டுவந்தபடியினாலே உங்கள்பதிவிரதாக்கினி நம்மைமிகவும் தகிக்குது ஆகையால் நானொருக்ஷணமாகிலும் உங்களிடத்திலிருக்க முடியாது உமக்குத் தேவையான வரத்னதக்கேளும் தருகிறோம்பிள்ளாய் ராசனே,

ராசன்சொல்-தரு-இ-ம-பந்துவராளி, அடதாளம்.

சுவாமிசரணமென்னையாளாய்
சநிபகவானே தங்கத்தாளாய்
நேமகத்தோரணுகூலா-உம்மை
நினையாதபேர்க்குமாத்திரங்குலகாலா — சுவாமி

சிரஞ்சீவியேகளதீராகிருபை
செய்தேன்செய்தேனிதோநேரா
வரமெல்லாந்தருகுவேன்பாரா-யுந்தன்
மனதறிந்தேனினிவாராய் — சிரஞ்சீவி

பண்டுசெய்ததவந்தானோ-இந்தப்
பாரிற்குறையென்செய்தேனோ
தொண்டநாமுமக்கெதிர்நானோ-என்னைத்
தொட்டுவிட்டீர்நலந்தானோ — சுவாமி

உன்னாலாகாதினியேது-உங்க
ளிடமிருக்கமுடியாது
சொன்னால்கேளாமல்வாது-எதிர்
சொல்லவொண்ணாதுஇருங்காணிப்போது — சிரஞ்சீவி

காரணனேகலிராசர்-வும்மைக்
கருதுவார்களன்பர்நேசா
தாரணியிற்சனிபீசா-சர்வ
ஜீவரக்ஷகதரணிவாசா — சுவாமி

நாடுவார்செல்வம்நாளும்-இதோ
நாதனேதந்தேனியாளும்
சோடுகட்டிச்சூதையாடும்-சுக
மாகவுன்னாட்டமங்கைக்கூடும் — சிரஞ்சீவி

நளராசன்சொல்-விருத்தம்.

பானுவின்றவத்துதித்தபகவானேசரணமையா
தானவனனசம்புசதாசிவநடுங்கச்செய்த
மானுபாவாவெங்நாளும்வாழ்வுசம்பத்துண்டாகத்
தீனரக்ஷகரேதேவா திருவடித்துணைசெய்வாயே

வ-ம் சரணஞ்சரணமையாசுவாமி சனியீஸ்வரபகவானே தேவரீரவர்கள் திருமூர்த்திகளையும் நடுநடுங்கத்தக்கதாகச் செய்துவைத்தமகானுபாவரே அடியேன் பேரில்கிருபைவைத்து என்னிடசரித்திரத்தையும் கொண்டாடப்பட்டபேரையும் கேட்டபேரையும் இதுமுதல் தாங்களணுகாமல்வரப்பிரசாதந்தரவேணுமையாசுவாமி.

சனியீசுரன்சொல்வசனம்.

அகோவாரும்பிள்ளாய், ராசனே நீர்கேட்டுக்கொண்டப்படியே வரப்ரசாதமுந்தந்தோம்ஆனால் இந்ததாணிவிருக்ஷத்தினிழலிலே வந்தவர்களைதவிர மற்றொருவர் களிடத்திலும் நான் அணுகிறதில்லை நீர் இந்தக்ஷணமே அந்தபுட்கர ராசனிடத்தில் போய் சூதாடினால் அவனைத் தோர்க்கவைத்து உம்மைக் கெலிக்கவைத்து உனக்குச்சகலசாம்பிராச்சியங்களும் வரும்படிககுச்செய்து உமக்குப்பட்டாபிஷேகம் பண்ணிவைக்கிறேன் போய்வாரும்பிள்ளாய் நளராசனே.

பாகவன்-ரிதுபர்னனுக்குச்சொல்-விருத்தம்,

எந்தனைவைத்தேயாளுமிறைவனேசொல்லக்கேளீர்
உந்தன்வாய்மொழிப்படிக்குவுயர்தாணியிலையுங்காயும்
சந்தேகமிலையிலக்கஞ்சரியாகவிருக்குதிப்போ
சிந்தையுமகிழ்ந்துநாமுஞ்செல்லுவோமெழுந்திடீரே

வ-ம் அகோசரணஞ்சரணமையா சுவாமி தாங்கள்சொல்லிய கணக்குப்பிரகாரம் அந்தத்தாணி விருத்துக்ஷப்பூஇலைகாய் பழம் இது முதலானதுகளும் சரியாக யிருக்கிறது இதுமகா அருமையான வித்தையாயிருக்குதையாசுவாமி

ரிதுபர்னராசன்சொல்.விருத்தம்

அருமையாம்ரதசாரத்யமதுசெயும்பாகவாகேள்
அருமையாமசுவமந்திரமதைநமக்கருளிச்செய்தால்
அருமையாமெனதுவித்தைபதனைநானுனக்குரைப்பேன்
அருமையாமெரியதல்லவசுவமந்திரஞ்சொல்வாயே

வ-ம் அகோவாரும்பிள்ளாய் பாகவா உம்மிட அசுவமந்திரம் நமக்குக்காண்பித்தால் உனக்குத்தாணிவிருக்ஷமந்திரஞ்சொல்லுவேன் பிள்ளாய்பாகவனே,

பாகவன்சொல்-விருத்தம்,

செந்திருவளருஞ்சிலசெகராஜதீராபோற்றி
பைந்தருவாழுந்தேவர்பரமனுமறியாரிந்த

மந்திரமுமக்குரைப்பேன்மண இனில்வருத்துக்கொள்வீர்
வந்துநேரங்களாச்சுவருகுவீர்சொல்லுவோமே

வசனம் அகோவாருமையாரிதுபர்னமகார்ராசாவே அந்தமும்மூர்த்திகளாலுமறியக்கூடாதமந்திரம் உமக்குத்தெரியவித்தேன் அடியேனுக்குதானிவிருக்ஷத்துமந்திரமுந் தெரிவித்து காலதாமசமாகாமல்நாம்வந்த காரியத்தைநாடிப்போவோம் வாருமையாராசனே.

பொது-வசனம்,

இந்தப்பிரகாரம் ரிதுபர்னராசாவானவர்தானிவிருக்ஷத்துமந்திரம்சீரதிக்குவுபதேசஞ்செய்ய அப்போதுபாகவனுல்நளமகாரசாவும் ரிதுபர்னராசனுக்கு அசுவமந்திரமும்போதிக்க இருவரும்சம்மதப்பட்டுவிதர்ப்பதேசத்தைநாடி தேரைவிட்டுக்கொண்டு வருகிறவேகத்தை தமயந்தியானவள்பார்த்து தன்தகப்பனாகிய வீமராசனுக்குச்சொல்லுகிறவிதம்ளப்படியென்றால்

வீமராசனுக்குத் தமயந்திசொல்விருத்தம.

தந்தையேயாணக்கேளீர்தாணிவிண்ணடுநடுங்க
வந்திடும்தேரின்வேகம்மகாராசனேநீர்பாரும்
வந்தபாகவன்றனைத்தன்மணவாளனல்லால்வேறு
இந்தவாறுலகுதன்னிலின்னொருவரைக்காணேனே

வசனம் அகோசரணஞ்சரணமையாசுவாமி என்தந்தையாகிய வீமமகாராசனே இதோதேர் வருகிறவேகத்தையும் அசுவேகத்தையும்பார்த்தால் என்புருஷனானநளச்சக்கிரவர்த்திமகாராசரேயல்லாமல் வேறல்ல அந்தரிதுபர்னராசாவை எதிர்சென்றழைத்துவந்தால் அந்தசாரதியாயிருக்கப்பட்ட நளராசாவும்வருவார் அப்போதுஎல்லாமறிந்துக்கொள்வோமையாவேசுவாமி

பொது-விருத்தம்,

மகள்தமயந்திசொன்னவார்த்தையைக்கேட்டுவீமன்
அகமகிழ்ந்தெழுந்துவந்து அரசனுக்கெதிர்க்கொண்டேகி
தகமையாயழைத்துத்தானுந்தன தரண்மனையில்வைத்துச்
சுகக்ஷேமமதனைப்பேசித்துரைவீமனிருந்தானன்றே

இதுவுமது.

சந்தோஷமாயிருந்துரிதுபர்நேந்திரன்
தமயந்திதனக்குமதுவிவர்க்மென்று
வந்தோமொன்றையுங்காணோமின்றைப்போது
மட்டுமிருந்தறிகுவோமர்மமெல்லாம்
பந்தர்சோடிணையுமில்லைமுகூர்த்தத்திற்குப்
பாராசர்வரக்காணோம்பார்ப்பமென்று
புத்திதனிலெண்ணிரிதுபர்னராசன்
போசனஞ்செய்யாமற்பொழுதைப்போக்கினனே

பொது-வசனம்

அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் ரிதுபர்னராசாவானவர் அதிகவேகமாகரதம்நடத்தி வருகிறவேகந்தைத் தமயந்தியானவள்பார்த்துதன் தகப்பனாராகியவீமராசனுக்குத்தெரிவித்து எதிர்சென்றழைத்துவரும்படிசொல்ல அப்போதுவீமராசனானவர் ரிதுபர்னராசனை எதிர்சென்றழைத்து வந்துவுபசாரஞ்செய்து க்ஷேமகாரியங்களைப் பேசிக்கொண்டிருக்க அப்போரிதுபர்னராசன் தமயந்திக்கு மறுமுகூர்த்தமென்றுசொல்லி யனுப்பினார்களே இவிடத்தில் பந்தல்ஜோடிக்கவில்லை தேசதேசத்து ராசாக்களும்வரவில்லை இன்றையவரையிலிருந்துபார்ப்போமென்றுயோசித்திருக்க அதற்குளபாகவனாகிய சாரதியானவார்த்தத்தை நிறுத்தி குதிரைகளை யவிழ்த்துக்கொண்டுபோய் குதிரைகட்டும்மேடையில்கட்டிவிட்டிருக்க அதற்குமேல்தமயந்தியானவள்செய்கிறவிதமெப்படியென்றால்.

தமயந்திதாதிக்குச்சொல் விருத்தம்,

வாருமென்தாதிமாரேவார்த்தையொன் றுரைக்கக்கேளீர்
சாரதிகுதிரைலாயந்தனிலிருப்பார்போய்நீங்கள்
கூறியென்வளமையெல்லாங்கூடவேகலந்துபேசிப்
பாருநீயவர்சொல்வார்த்தைதப்பயனைநீயறிகுவாயே

வசனம் அகோவாரும்பெண்ணேசகிமார்களே நம்மிட குதிரைலாயத்திலேரிதுபர்னமகாராசாவுக்குரதசாரதியாகவேகுருவமாறிவந்திருக்கிறாரே அவரண்டையில்வெகுதந்திரவுபாயமாகப்போய் என்வளப்பங்களையும்வருத்தங்களையுஞ்சொல்லி அவர்குறிக் குணங்களை யறிந்துவருவோம்பெண்ணேசகிமார்களே

தாதிகள்-சாரதிக்குச்சொல்விருத்தம்,

சாலமெல்லாமறிந்தசாரதிமானுப்பாவா
காலங்கண்டேநீரிந்தக்கபடமாயிருப்பதேனோ
மேலவாவிண்ணோருமமை மெச்சுவாரதிசாரதியம்
காலமுமறியோர் போலக்கலக்கமாயிருக்கின்றீரோ

தாதி-சொல் தரு இம் ஆகிரி திரிபுடைதாளம்.

என்னகாணையா நீர் ஏதொன்றமறியார்போலிருக்கின்றீரே
மன்னவனும்ரிதுபர்னராசனிடம்
உன்னிதமாய்ரதம்ஓட்டுஞ்சாரதியேனீர்
இன்னமில்லைபோதெங்களெனனை தமயந்தியை
முன்னந்தனியேவிட்டார்மோசத்துக்குடன்பட்டார் என்
கொண்டபெண்ணைநளேந்திரன்ஒண்டியாகவிட்டு
மண்டலந்தனிலெங்கேமறைந்திருக்குறாரையா
பண்டைதேவர்களெல்லாம்பாணிக்கிரகணஞ்செய்ய
விண்டமொழிதுறந்தார்கொண்டு விட்டேமறைந்தார் என்

பிள்ளைபெண்டீரைவிட்டுபிரிந்தபேர்களுக்கு
எள்ளத்தனையிரக்கம்உள்ளத்தினிலிராதோ
கள்ளத்தனஞ்செய்தாலுங்காலைச்சுற்றியபாம்பு
கடிக்காமற்போகுமோஐயாவே
பாதித்துயிலுடனேபாரவனத்தில்விட்ட
நாதனைத்தேடியநாயகிபாவியோ
ஆதியிலேகொண்டஆசைவெருத்தனன்
ஆண்பிள்ளையல்லவோஐயாவோ

பாகவன்சொல்-விருத்தம்.

கன்னியேகளேந்திரன்செய்தகதையெலாமென்னிடத்தில்
அன்னீதமெனவேசொன்னீர்யான்செய்யலாவதென்ன
உன்னிடதமயந்திக்குஉபகாரஞ்செய்யவந்த
மன்னவன்ரிதுபானேந்திரன்வாய்மொழியறிவீர்மாதே

வ ம் அகோவாரும்பெண்ணேசகிமார்களே நீங்கள்என்னிடத்தில்வந்து அந்தகளராசர்செய்த அக்கிறமத்தையும்மோசங்களையும்சொல்லுவதிற்பயனென்னநானே ரிதுபர்னராசாவுக்குச்சாரதியாகவந்தவன்என்னை களனென்றுபாவித்து தமயந்திக்குச்செய்த பிழைமோசத்தைச் சொல்ல வந்தீர்கள் இதல்லாமல் அந்த ரிதுபர்னராசா வண்டையிலே போய்ச்சொன்னூன் அவர் அதற்குத் தகுந்த வுத்திரவு சொல்லுவார் நீங்கள் என்னுட னபேசுவதை எங்கள் ராசாகண்டால் கோபிப்பார் போய்வாரும் பெண்ணே சகிமார்களே,

தாதிகள் தமயந்திக்குச் சொல் விருத்தம்,

நாரியர்க்கரசியான நற்றமயந்தித்தாயே
கூறியமொழிப்படிக்கு குதிரைலாயத்திற்சென்று
சேருடனுங்கள்வார்த்தை செப்பினேம்நளனைக்காட்டி
ஏறுமாறாகப்பேசி எங்களையனுப்பினூரே.

வ-ம் அகோ சரணஞ்சரணமம்மாதாயே ராசபரமேஸ்பரி தங்கள்திருவுளப்பிரகாரம் நளமகாராஜனைப்போல அவரைப் பாவனை செய்து தங்கள் வளப்பம் வருத்தங்களையெல்லாஞ்சொல்லினேம் அவர்ஒப்பாமல் வெருப்பாகப் பேசினூரம்மா தாயே,

தமயந்திசொல்-விருத்தம்.

நல்லதென்சகியேயெந்த னாயகனளேந்திரபூபன்
வல்லவனானதாலே மர்மமாய்வார்த்தைசொல்வார்
செல்லுவீர்மடப்பள்ளிக்குத் தின்னுங்காய்கறிகள்சாதம்
ஒல்லையிற்சமயலாகு முபாயத்தையறிவீர்மாதே

வ-ம் அகோவாரும்பெண்ணே சகிமார்களே நீங்கள்சொன்ன வார்த்தைக்கு அவரிடங்கொடாததினால் சமயல்சாப்பாடு முதலானதுஞ் செய்கிறவிதங்களையறிந்து வாரும்பெண்ணே சகிமார்களே,

தாதிகள்சொல்-விருத்தம்

என்னதான்சொல்வமம்மாயேந்திழைக்கரசியாரே
நன்னிலந் தனிலேமாந்தர் நளபாகமெனவேசொல்லும்
உன்னிடஉபாயமுந் தானுயிர்ப்பிராணநாதன்செய்யும்
அன்னமுங்கறிபதார்த்த மமரர்க்குமகப்படாதே.

சகிகள்-சமயல்செய்கிறவிதஞ்சொல்லல்-கண்ணிகள்

இ-ம்-சஹானா-ஆதிதாளம்

சொல்லுவேமம்மா அதிசயம்சொல்லுவோமம்மா
அல்லியங்குழல்மடவார்க்கதிபதியேயன்புடன்கேளம்மா
ஞாலந்தனில்வானுலகத்திலும்நாங்கள்கண்டறியோமம்மா
ரதசாரதியஞ்செய்யுஞ்சமயல்விநோதமும்பதமாயிருக்குதம்மா
ம்ரமமாயடுப்பெரியநெருப்பில்லாமகத்துவந்தன்னையம்மா
ஆயிரநாவுள்ளவாதிசேடனாலுமாகாதுரைக்கவம்மா
தண்ணீரில்லாதுலைபொங்கிப்பானையில்சாதங்கொதிக்குதம்மா
வினையோர்மேலோரவர்செய்யுஞ்சமயலைமெச்சுவார்களம்மா
காய்கறிவகையுஞ்சாதமும்பொரியலுங்கம்கமென்றவாசம்
தாயேவீசுதுநாயகன்போலவேதானேதோன்றுமம்மா
தெய்வப்பிரசாதந்தனின்முதற்பாகந்தேவர்க்குநளபாகம்
மெய்பொய்யுங்கள்திருவுளமறியவும்வெகுசிரேஷ்டமம்மா
வேஷமாறியேவிகர்தரூபமாய்மெத்தவிங்கேவலமாயிந்தக்
காசினிமேலவாசஞ்செய்முழுசபடனாடகனம்மா
ஈசன்செயலாம்ராசனளேந்திரனிவராகவேயிருந்தால்
ஆசையுடனுங்களிடம்வந்துசேர்ந்தாலதுவெங்கள்தவமம்மா
பாசமில்லார்போலேரோஷமிலார்போலப்பழமையையறியார்போல்
பாகவன்போலவிருப்பதுங்கள்பாக்கியந்தானம்மா

தமயந்திசொல்-விருத்தம்

ஆறுதலடையாளங்கலறிந்திடவம்மமாரே
சாரதிதன்பால்சென்றுசாதமுங்கறிபதார்த்தம்
தீரமாய்க்கேட்டுவாங்கிச்சீக்கிரம்வந்தீரானால்
சீருயர்சகிமாரேயானதைப்பார்த்துசாரசெய்வேனே

வ-ம் அகோவாரும் பெண்ணேசகிமார்களே அவர்சனமக்கிரசாதமுங்கறிபதார்த்தங்களில் மெள்ள தந்திரமாகக்கொஞ்சங் கேட்டுவாங்கிவந்தீர்களேயானால் நான்போசனஞ்செய்துசொல்லுகிறேன் சகிமார்களே.

சகிசொல்-விருத்தம்.

ஐயாசாரதியேயெங்களரசியாந்தமயந்திப்பெண்
வையகந்தனில்மூன்று வருஷபோசனமுத்திரை
செய்யாமல்மெலிவதாலேதிருவுளமகிழ்ந்துவுந்தன்
கையமுதளித்தாலுண்டுகளைதெளிந்துய்குவாளே

வ-ம் அகோவாருங்களையா சாரதிசிரேஷ்டரே எங்கள்ராசாத்தியானதமயந்தியம்மாள் தன்னிடநாயகனை பிரிந்து போனமுதலாய் நல்லநித்திரைசுகபோசனமில்லாமல் மெலிந்திருக்கிறாள் தேவரீர்களபாகம்போற்செய்திருக்கிற சாதத்திற்கொஞ்சங் கொடுத்தீர்களானால் நாங்கள்கொண்டு போய்க்கொடுப்போம் ஆகையால் கொஞ்சம் கொடுத்தால் சுகிர்தமுண்டாகுமையாசாரதியே.

சாரதிசொல்-விருத்தம்.

மாதிமாரேநீருங்கள்தமயந்திகதைசொல்வானேன்
சாதமாகேட்பாராகிற்றருவதேசகீதியாகும்
போதுமானதுகொடுப்போம்புசித்துங்கள்பசியையாற்றிக்
காதலியேநீரிப்போகடிநகர்க்கேகுவீரே

வ-ம் அகோவாரும்பெண்ணே சகிமார்களே நீங்கள்என்னிடத்தில்வந்து தமயந்திக்குச் சாதமவேணுமென்று கேட்கவந்தீர்களே சாதமென்றுயார்கேட்கிறார்களோ அவர்களுக்கில்லை யென்னுமற் சாதம் போடவேணுமென்று தருமசாஸ்திர முறையிருது இதோவுங்களுக்குத்தேவையான சாதமுங் கறி பதார்த்தங்களுந் தருகிறேன் கொண்டு போம் பெண்ணேசகிமார்களே.

சகிகள்சொல்-விருத்தம்.

பெருமையில்மிகுந்தவெங்கள்புண்ணியவதியேகேளாய்
சிறுமையாய்வந்திருக்கும்தேர்ப்பாகனிடம்போய்நீங்கள்
அருமையாய்ச்சாதங்கேட்டோமவரிதோதந்தார்நீங்க
ளொருமனதாகவுண்டு வுண்மையையறிகுவீரே

வ-ம் அகோவாருங்களம்மா லோகபரமேஸ்பரி தங்களுத்தாரப்படிக்கு அந்தசாரதி அண்டையிலேபோய் மெள்ளதந்திரவுபாயமாக சாதமுங் கறிபதார்த்தங்களும்வேண்டியமட்டும்வாங்கிவந்திருக்கிறோம் இதைப்புசித்து இளப்பாருங்களம்மாதாயே.

தமயந்திசொல்வசனம்,

அல்லவேதாதிமாரேயாசட்டும்நீங்களெந்தன்
செல்வரைக்கூடக்கூட்டிச்சென்றவர்முன்னேவிட்டால்
சொல்வதையறிந்துநீங்கள்சுருக்கினில்வந்துசேர்வீர்
இல்லையேபுத்திரசோபமெந்தனுக்குரைசெய்வீரே

வ-ம் அகோவாரும் பெண்ணே சகிமார்களே நீங்கள் வாங்கிவந்த சர்தமும் கறிபதார்த்தங்களும் என் பத்தாவாகிய நளராஜன் செய்த சாப்பாடே யல்லாமல் வேறல்ல ஆகிலும் இன்னமொருதரம் பிள்ளைகளைக்கூட்டிக்கொண்டுபோனால் அவர் அந்தப்பிள்ளைகளைக் கண்டவுடனே புத்திரவாஞ்சை யிருப்பதும் இல்லாமலும் பார்த்துவந்துசொல்லும் பெண்ணே சகிமார்களே.

சகிகள் - பாலரைக்கூட்டிவருதல்-தரு-இம்

சங்கராபரணம்- ஆதிதாளம்.

பாலரையழைத்துவந்தாரேசாரதியிடம்
பாலரையழைத்துவந்தாரே
ஞாலமெங்கும்புகழ்நளராசன்வனவாசஞ்செல்ல
சீலமிகும்வீமனல்லசெல்வி தமயந்திசொல்ல — பால

வாலவயதினிற்பிரிந்தேதந்தையைவிட்டு
வந்துதாதையிடமிருந்தே
காலங்கழித்திடவந்தகலிசெய்தகபடத்தாலிந்த
கோலமாயிருக்கும்விந்தைகொற்றவனிடத்திற்சொந்தம் — பா

மாயச்சூதாடிக்கெடுத்தோகாடுநகரும்
மனைவியையுங்காட்டிவிடுத்தே
போய்வனத்திலவேஷமாறிப்புரவலர்க்காளாகத்தேறி
சேயினும்மனம்வேசாரித்திரியுறுமென்றுகூறி — பால

சாரதி-பிள்ளைகளைக்கண்டுபுலம்பல்-கண்ணிகள்

இ-ம்-பிலஹரி-திரிபுடைதாளம்,

ஆதிகேசவஅச்சுதானந்தகோவிந்தா — நாரணனே-இந்த
அல்லலுக்கெல்லாநாளழகாகப்பிறந்தானே — நாரணனே
பூதலந்தனிற்பவபுற்கொலைபிரிந்தேனே — நாரணனே-பூர்வ
புண்ணியமோவிந்தப்புதுமையெல்லாம்பார்க்க — நாரணனே
எதுக்குஇந்தவுடலையெடுத்தே-னெடுத்தேனரி — வாசுதேவா-நான்
இந்தக்கண்காக்ஷிக்கோ இருந்தேனிருந்தேனரி — வாசுதேவா-செய்த
காதல்மனைவியுமிந்தவாதனைப்படஅரி — வாசுதேவா-செய்த
கருமவசமோவிதிவசமோநான்காணேனே — வாசுதேவா

வேலைத்துரும்பதுபோல்மெலியுதேமனதையா வேணுகோபாலஎன்னை
விட்டகுறையோவிந்த வேஷமாகினேனையா வேணுகோபா
பாலராசையைநீக்கப்படுவதில்லையோ அரிவேணுகோபா கொண்ட
பாவையைப்பிரிந்திடலாவதுனசெயல் வேணுகோபா
மன்னராசப்பிறந்துவாழ்ந்ததுபோதும் போதும் மாதவனே இந்த
வாறுகவேயுயிர்வைத்திருந்தவருண்டோ மாதவனே
பொன்பொருளாசாக்ஷிபுத்திரரையும்விட்டேன்மாதவனே இந்தப்
பிள்ளைகையிற்கொடுக்கப்பொருளொன்றுமில்லையேமாதவனே ஆதி

பிள்ளையைப்பார்த்துராசன்சொல்விருத்தம்.

அப்பாவென்சுவாமியையாயார்பெற்றபாலர்நீங்கள்
நடப்பாகவென்முன்வந்தீர்நமக்கொருசொந்தமுண்டோ
ஒப்பாகுமுங்களைப்போ லுண்டெங்தன்குழந்தையேக்கம்
இப்போதுதீர்ந்துதுங்களிருப்பிடமேகுவீரே

வ-ம் அகோவாரும்என திருக்கண்மணியானசெல்வமைந்தர்களே
நீங்களார்பெற்றபாலர்களோ உங்களைபோலஎனக்கிரண்டுகுழந்தைக
ளிருந்தது அதுகளைவிட்டுப்பிரிந்து அநேகநாளாச்சுதுஇதென்னசென்
மம்நம்முடையவயிறுபெரிதென்று பிள்ளைபெண்சாதியையும்விட்டுவி
ட்டுரிதுபானராசனிடத்தில்ஏவல்செய்துக்கொண்டிருக்க பிரமதேவன்
தலையிலெழுதினுனே உங்களைக்கண்டவுடன்பிள்ளைகள்ஞாபகம்வந்து
அநேகவிசனமடைந்துஉங்களைக்கண்டமாத்திரத்தில் மறுபடியுஞ்சந்
தோஷமாகினேன்இப்போதுஏதாவது உங்களுக்குகொடுப்போமென்
றாலஎன்கையிலொன்றுமில்லையேபோய்வாருங்களப்பா மைந்தர்களே.

சகிகள்-இராசனைத்தற்கித்தல்கண்ணிகள்.

இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

என்னகாணுமுபக்கித்தனை துயரங்கள்
எங்கள்குழந்தையைக்கண்டேதுகாணையா
கன்னியரேயெனக்குப்பிள்ளைகளிரண்டுண்டு
கண்டுவெகுநாளாச்சேபெண்ணரசே
தமயந்திநாள்ரசன்சரியனிடக்கத்தினுல்
தான்வந்தார்வனவாசமேனீரவந்தீரையா
சமையல்செய்யவும்சாரத்தியஞ்செய்யவும்
தலைவிதியிருக்கையில்தவறிடுமோபெண்ணே
மானமில்லாமலிந்தப்படிக்கெங்களரசனும்
மக்களைவிட்டுவயிறுவளர்க்கச்சென்றாரையா

நளந்தானொருவரிடத்திற்சேவகமாக
இருப்பதுமிகவுந்தானங்கிளிமொழியேபெண்ணே
தந்திரமாய்ச்சென்றநளனிவராவிடில்
தமயந்திமொழியாள்காண்சாரதியேயையா
இந்தப்பிரதாபத்தையென்னிடத்தினிற்சொன்னால்
எனக்கென்னதெரியுங்காணேங்கிளிமொழியேபெண்ணே

தாதிகள்தமயந்திக்குச்சொல்-விருத்தம்

அன்னையர்க்கதிகமானவம்மாளேசரணந்தாங்கள்
சொன்னசொற்படிக்குவுங்கள்சுதனையுமெதிரேவிட்டு
பன்னியேயோடிவந்துபார்க்குமுன்பாலர்தம்மை
தன்னிடமாயிற்சேர்த்துத்தழுவியேயனுப்பினாரே

வ-ம்- அகோவாருமம்மாராசபரமேஸ்பரிதங்கள்திருவாய்மொழிப்படியேபிள்ளைகளையழைத்துக்கொண்டு அவர்முன்பாகப்போகிறபோது அதற்குமுன்னுதாகவோடிவந்துபிள்ளைகளைக்கண்டுவாரியெடுத்துஉச்சியைமோந்து அழுதுபுலம்பி அப்பாவுங்களுக்குக்கொடுக்களென்கையிலொன்றுமில்லையே போய்வாருங்களென்று அனுப்ப அப்போது நாங்களவரைமறித்துஎங்கள் பிள்ளையைக்கண்டு அழவேண்டியகாரணமென்னவென்றுகேட்க அவரதற்கிடங்கொடாமல்எனக்கிரண்டுபிள்ளைகளுண்டு அதைவிட்டுவந்துஅநேககாலாச்சுதென்றுசொல்லிஅவர்ஒப்பாமல்வெறுப்பாகப்பேசினாரம்மாதாயே

தமயந்திவீமராசனுக்குச்சொல்-விருத்தம்.

தந்திரமாகவந்த சாரதிவரலாறெல்லாஞ்
சுந்தரமானதாதிசோதனைபார்க்கவேந்தன்
மைந்தரையவர்க்குக்காட்டமனமெலிந்தழுதரிப்போ
னந்தனயகனேபார்ப்போமிவ்விடமழைத்திடீரே

வ-ம் அகோசரணஞ்சரணமையாசுவாமியெனதுதந்தையாகியவீமராசனேநம்முடையதாதிகள்குதிரைலாயத்தில்வந்திருக்கிறசாரதியிடத்திற்போய்அவர்குறிகுணமும்சமயல்சாப்பாடுவிதமும்புதரவாஞ்சையுமிருக்கிறதாகநமக்குத்தெரிவித்திருக்கிறார்கள்மேலும்நானென்கண்ணாலேபார்க்கவேண்டியபடியினால்அவரைநம்முடையஅரண்மனைக்குவரும்படிரிதுபர்ன்ராசனுக்குஅறிவித்தழைப்பிக்கவேணுமையாசுவா

வீமராசன்விருத்தம்.

சந்ததந்தருமநீதிதவறிடாச்சொரூபசீல
சுந்தரமிக்குமயோத்திதுரந்தராவுமதுபக்கல்

வந்தசாரதியைப்பார்க்கவஞ்சையாயிருப்பதாலே
எந்தனற்சமுகந்தன்னிலீக்ஷணமனுப்புவீரே

வ-ம் ஓகோசேஞமையா அயோத்தியாபுரியையாளுகின்றரிதுப
ர்ணமகாராசனே உமக்குரதசாரத்தியஞ்செய்துவந்திருக்கிற சாரதி
யைப்பார்க்கமெத்தவும்அபேக்ஷயாயிருக்கிறதுநமமிடசமுகத்திற்கு
அனுப்பிவைக்கவேணும் மகாராசனே

ரிதுபர்னன்சாரதிக்குச்சொல்-விருத்தம்,

ஜெகமெலாம்புகழுமெந்தன்தேர்ப்பாகவர்கேளுன்னை
மகிபதிவீமராசன்வரவழைத்திருப்பதாலே
அகமதிற்குறையையர்மலவர்சபகத்திற்சென்று
சுகமுடனகண்டுபேசித்துரிதமாய்வருகுவாயே

வ-ம் அகோவாருப்பிள்ளாய் சாரதியே வீமராசரவர்னவர்நேர்சா
ரத்யஞ்செய்துவர்தஙின்பேரில்உன்னைப்பார்க்கவேணுமென்றுவரும்ப
டிநமக்குத்தெரிவித்திருக்கிறார் ஆகையால்நீபோய்அவரைக்கண்டுபே
சிசவுதியில்வந்துசேரும்பிள்ளாய்சாரதியே.

சாரதிவீமராசனுக்குச்சொல் விருத்தம்,

தேகத்திற்கழலைப்புண்கள்சிரங்குசீயொழுகுமென்னை
லோகத்தார்பழிக்கும்பாவிநானொயானப்பொருட்டாயெண்ணித்
தாகமாயழைத்தவாறுதார்வேந்தேயுரைத்தால்நீயும்
பாகவனிந்தமாநம்பகர்ந்துவாளேகுவேனே

வ-ம் அகோசரணஞ்சரணமையாசுவாமிவீமராசனேஉலகத்தார்
என்னிடத்தில் நெருங்கிப்பேச அசிங்கப்படும்படியானஎன்னைதேவரீ
ர்ஒருபெரிதாயெணணிஎன்னையழைப்பித்தகாரியம்அருளிச்செய்யவே
ணுமையாசுவாமி.

வீமராசன் விருத்தம்.

பாரெல்லாங்கீர்த்திபெற்ற பாகவனேரேட்டரேநீர்
தேர்நடத்துவதில்மிக்க திரமையுள்ளவரென்றார்கள்
வாருஞ்சிம்மாசனத்தில் மனமகிழ்ந்திருந்தெனக்குத்
தேறுதலானவார்த்தை செப்புவீர்செப்புவீரே

வ-ம் அகோவாருமையாபாகவசிரேஷ்டரேஇவ்வுலகத்தில் ரதசார
த்தியஞ்செய்யசாமர்த்தியமுள்ளவராரென்றால்என்னுடையமருமகனு
னநளராசனைத்தவிர மற்றொருவரையுங்கண்டதுமில்லை கேட்டதுமில்
லை ஆகிலும் அவருக்குமேலானசாமார்த்தியமுள்ளவரென்று உம்மைச்
சொல்லுகிறார்கள் ஆகையால்எனக்குமிகவும்அதிகபிரீதியுண்டாயிற்று
என்னுடைய சிம்மாதனத்தின் பேரில்உக்காரும் நாமிருவரும்சந்தோ

ஷமானவார்த்தைகளைப் பேசிக்கொண்டிருப்போமைய்யா சாரதிசிரேஷ்டரே.

சாரதிசொல்-கண்ணிகள் இ-ம் காம்போதி ஏகதாளம்.

சிம்மாசனங்கொடுக்கத்தகாது தேரோட்டுஞ்சாரதினுன்
உம்மிடன்சரியானராசனுமருகனுசம்மதியேசுவாமி
உம்மிடபெண்தனக்கேசுயமரவோலைவந்ததினாலே
எம்மிடாராசன்பின்னேயிதபாகவனுக்கிதுதருமோசுவாமி
எங்கள் தன்றுசாவுமந்திரிதுணையில்லாமலேயொண்டியாச்
சங்கையால் வீற்றிருப்பாரே யான்போகவேதான்விடைதாருமையா
மங்களகரமென்ன அதிவேகமாகவந்ததினாலே
அங்கம்வேசாரியதாலெனக்குத்தாவது செய்வீர்வாரனையா
ஈதென்னகாரணங்காணேனேயிந்தபாக்கியசாலி
ஏதென் தவக்குறைபோ அரிகரிஎனதன்விதிதானே
போதும்போதுமையா இந்தகன்னல்ல போகவிடைதருவீர்

வீமராசன் விருத்தம்.

குறியறிந்துரைத்தபாகன் கொத்தவனளன்றுனென்று
தெரிந்துவேவீமராசன்செயநளன்றுகைத்தாங்கி
அருமையாம்போர்கன்னே யவாமடிதன்னில்வைத்து
ஒருமையாய்தமதும்பண்ணு ளுடனழுதுரைசெய்வாரே

வீமராசன்புலம்பல் கண்ணிகள் இ-ம் காம்போதி ஆதிதாளம்.

ஐயனேநளராஜேந்திராயானும்மைவரவழைக்க
செய்தஉபாயந்தானிது தெய்வமதுசாக்ஷியாக
வையகமுழுதுந்தேடி மன்னான்றிதுபர்னனிடம்
மெக்கருகி யேவல்செய்தவிதமுமிகத் தெரிந்தோம்
இந்தவெத்தினங்கள்செய்தேயிவ்விடத்திலழைப்பித்தோம்
சந்தேகமாய்நினைந்திரோ சம்மதிப்பாளோ உன்தேவி
எந்தன்மேற்கோபம்மையாமலென்மகளைச்சேர்ந்துவாழ்வீர்
மைந்தன்முகம் பாருமையா மனவறியாமர்மமுண்டோ   அய்

சாரதிசொல்விருத்தம்.

பூதலம்புகழநல்ல பிள்ளையைப்பெற்றபேர்கள்
காதலால்மிகுந்தகீர்த்தி களிப்புறுவிகட்சிதோன்றும்
தீதுயர்மக்களானல் செகத்தினில்வகையுண்டாகும்
நிசெந்தனிடத்திற்சொன்னு லியாதொன்றுமறிகிலேனே

வ-ம் அகோசரணஞ்சரணமையா சுவாமி உலகத்திலே நல்லபி ள்ளைப்பெற்றவர்களுக்குக்கீர்த்தியுண்டாகும் கெடுதியாயிருக்கிற பிள் ளைப்பெற்றவர்களுக்கு அபகீர்த்தியுண்டாகும் ஆகையால்நானிரிது. பர்னராஜாவுக்கு வூழியஞ்செய்யப்பட்டவன் கேவலமாகிய என்னைந ளனென்றுபாவித்து எண்ணிப்பேசுவதுதருமமல்ல இப்பேர்பட்டபா க்கியவதியைப்பெற்ற வுமக்குளென்னகுறைச்சல் அந்தநளராசா வான வர்தானென்ன அவருக்கதிகமாகரிதுபர்னராசாவைவரவழைத்திருக்கி றீர் அவருக்கேமருகலியாணஞ்செய்துவையும்எங்கள்ராசன்தனியேயி ருப்பார்நான்போய் வருகிறேனையாசுவாமி.

தமயந்திசாரதிக்குச்சொல்-விருத்தம்

வல்லமைகூறுமெந்தன்மன்னவாசுவாமிநாதா
சொல்லுகிறமொழியைக்கேட்கத்துடிக்குதேயெந்தனுவி
வெல்லுவோர்பொய்வழக்கைமெய்ப்போலபேசுவார்கள்
பொல்லாதபாவியென்றேபுறங்கூறத்துணிந்தீரையா

தமயந்திசொல்-கண்ணிகள்-இ-ம்-புன்னாகவராளி-ஏகதாளம்.

என்னவார்த்தைசொல்லத்துணிந்தீர்-பிராணநாதனே
இதுதகுமோநீரெனை
கன்னியெந்தனையாரென்றெண்ணியே
கபடமாயுரைத்தீர்கதைமிகவேவிரித்தீர்
பொன்னும்பொருளும்பூமியெனையும்
பிள்ளையையும்பிரிந்திரிந்தவேஷமாயிருந்தீர்
மன்னரிதுபர்னன்வராவிட்டாலிங்கு
வருவீரோசாமிவந்தும்அறியீரோசுவாமி
பெண்டீரைவிட்டெந்தமண்டலஞ்சுத்திப்
புரிந்திருப்பாருமுண்டோதாங்கள்பேசுவதும்நன்றோ
கொண்டபுருஷனும்ரெண்டகஞ்செய்திடக்
கோதையென்செய்வாளோதேவர்க்காயென்னநாளோ
சண்டாளியென்யென்னைக்கைவிடச்
சம்மதித்தாயோஎன்துரையேதர்மமாமோ

பொதுவிருத்தம்.

வந்தசுயம்பாகியிடங்கொடாமற்செல்ல
மன்னுவென்றுரைந்தேவாதாடும்போது

டுடு

கந்தமலர்க்குழலிதமயந்திமாது
கணவனுருமாறியுமைக்கருத்தும்வாடிச்
சிந்தையனல்மெழுகவேசிதரிச்சோபந்
தீரமாலொருவகையாய்த்துன்பமெய்திச்
சுந்தரமாயிருந்ததிருமுகம்பேதித்துத்
துயரமுற்றுகோபமுடன்சொல்லுவாரே

சாரதிதமயந்தியைப்பார்த்து-கோபமாய்ச்சொல்-தரு
இ-ம்,புன்னாகவராளி-அடதாளம்

என்னைக்கண்டழுவதேது-பெண்ணே
என்னைக்கண்டழுவதேது
இதற்குமுன்னெருந்தமுண்டோவதையோது
உன்மனக்குறையெல்லாந்தீர இன்றே
உன்தந்தைபுகந்தனுக்கேசுபமீற
மன்னன்ரிதுபர்னர்க்கோலைபெண்ணே-தீட்டி
மறுகலியாணமென்றனுப்பினத்தாலே
இன்னம்விசாரமென்னமானே-இது
சொன்னேனுன்றங்கையர்க்கேர்க்காதுதானே என்னைக்

நளராசன்சொல்-விருத்தம்.

நளனெனவேனையென்றுதேகற்றமயந்திமாதே
அழகுமாப்பிளைபாம்வீமனழைப்பித்தார்நளனுக்கொப்பாய்
வளர்மதிமுகத்திறுளேமறுகலியாணஞ்செய்து
வுளமகிழ்ந்திருக்கலாமேவுனக்குண்டோகிலேசந்தானே

வ-ம் அகோவாரும்பெண்ணேதமயந்திஎன்னைஉன்புருஷனென்றுநினைத்து மிகவும்வருத்தப்படுகிறாய்இதோவுன்தகப்பனாகிய வீமராசன்நளனுக்குமேலானநாயகனையழைத்துஎனக்கு மறுகலியாணஞ்செய்யப்போகிறார் இனிமேலுனக்குக்கிலேசம்வேணடியதென்னசொல்லு பெண்ணேதமயந்தி

தமயந்திசொல்-விருத்தம்.

அன்னியர்போலேயென்னையகற்றிநீர்பேசலாமோ
உன்னைநிங்கழைக்கதிந்தஉபாயஞ்செய்தோமென்சுவாமி
என்னிடபுடவைபாதியிடையினிலிருக்குதேதான்
மன்னவாபோதும்போதும்மகிழ்ந்தேனையாளுவாயே

தமயந்திக்கும்-நளனுக்கும்தர்க்கம்-தரு
இ-ம்-துர்வதி-ஆதிதாளம்

சொல்வதுநியாயமாமோ-என்சுவாமியேநீர்
சொல்வதுநியாயமாமோ

வ-ம் அகோசரணஞ்சரணமையாசுவாமிதேவரீர்என்னுடையமனதையறிந்திருந்தும் இப்படிக்குச்சொல்வதுநியாயமல்ல அப்படிக்குமறுகலியாணஞ்செய்யநானெத்தனித்தால் ஆகாயவாணிபூமிதேவி யறியார்களா இரண்டாவதுசுயமரம்நாட்டி யிருக்குதாபாரும்சகலதேசத்துராசக்கள்வந்திருக்கிறார்களோசொல்லும் நீரிதுபர்ணராசாவினிடமாயேவற்பணிவிடைசெய்துக் கொண்டிருக்கிறது தெரிந்து உம்மை இவ்விடத்துக்கழைக்கவேண்டியகாரணமாயழைத்தேனேஒழியவேறல்லமனதிலொன்றுவாக்கிலொன்று நினைத்திருந்தது சங்களுக்குச்சந்தேகமிருந்தால் முப்பத்துமுக்கோடிதேவர்க்கும் ஸ்ரீமந்நாராயணமூர்த்திபாதசாக்ஷியாகஇந்தஅக்கினியில் மூழ்கியெழுந்துவருகிறேன்பிற்பாடாகிலும்தேவரீர்கிருபைவைத்து என்னை இரக்ஷிவேணுமையாசுவாமி

தேவர்கள்வருகிற-பொது விருத்தம்

தந்தையுடன்றமயந்திமயிலாள் தானுந்
  தனையரொடுநளராசன் றனின்வீழ்ச்சச்
சந்திரனையனையமுகவதனஞ்சோர்ந்துந்
  தாமரையினிலைநீர்போற்றயங்கும்போது
இந்திரனிந்திராணிபிரமதேவன்வாணி
  யிலக்குமிநாரணனரனீஸ்பரியுந்தேவர்
வந்துவாகனமூடராகவானில்
  மகிழ்ந்துநளன்றன்னைக்கண்டுவசனித்தாரே

வ.ம் அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம் தமயந்தியானவள்குதிரைலாயத்திலிருந்த சாரதியைவரவழைத்து வுற்றுப்பார்த்து தன்னுடையவஸ்திர அடையாளத்தையுங் கண்டுபிடித்துதன்புருஷனென்றுநிச்சயித்து அநேகவிதமாகராசனைப்போகவழிவிடாமல்மடியைப்பிடித்துக்கொண்டு ஒருவருக்கொருவர்சம்மந்தா சம்மந்தமில்லாமல் இடங்கொடாமல் நளராசன்றிடச்சிந்தனையிருக்கிறதைத்தமயந்திபார்த்து ஓய்பிராணநாதாநான்மறுகலியாணஞ்செய்யஎத்தனித்ததல்ல உம்மையழைக்க இந்தயோசனைசெய்ததல்லாமல்வேறல்லஅப்படிக்குச் சந்தேகமிருந்தால்இந்தஅக்கினிக்குழியில்மூழ்கியெழுந்துவருகிறேனென்று அக்கினியில்மூழ்கிநீந்திவிளையாடிவருகையில் அப்போதுமுப்பத்துமுக்கோடிதேவர்களும்நாற்பத்தெண்ணாயிரம்ரிஷியீசுரர்களும்ஆகாயவாணிபூமிதேவியும்திரிமூர்த்திகளும்அவரவர்களேறுகிறவாகனங்களின்மேலேறிக்கொண்டுஆகாயமார்க்கமாய்வந்துநளராசனுக்குச் சமாதானஞ்செய்யவருகிறவிதங்காண்க

தேவர்கள்-தரு இம் மோகனம் ஏகதாளம்

கங்காதரனும்வந்தார் மகிழுவாய்
கங்காதரனும்வந்தார்
பங்கயத்திருமாலும்பார்வதிதேவியும்
ஐங்கரக்குரிசிலுமறுமுகனுமுடன் கங்காதரனும்

இந்திராதிதேவர்வாரிஷிமுனிவரெழுந்துகைலாகுதா
சந்திராதித்தர்தொழஇஷ்டவசுர்கள்தருமதேவதைகள்சூழ
சுந்தரத்தும்புருநாரதரூர்வசித்
தோகைமேனகைரமபைதிலோர்த்தமைநடனமாடக் கங்கா.

ஆகாயவாணியுடன்வயிரவனுமையனோடெள்கேசனும்
ஏகாதசிருதராளும்பூசக்ணக்கலியவினபாகவதாளும்
போகபூமியருமேகாதிபரும்
புலிபதஞ்சலியுடன்புனிதரிஷபருடன் கங்கா

தேவர்களும் ராசனும்மனைவியும் தோத்திரஞ்செய்தரு

இம் நாதநாமக்கிரியை ஆதிதாளம்,

அரகரசிவசங்கராநாராயணா அம்பிகைநாதாசரணம்
சிவசம்போசங்கராசிவசரணம்
பரமரகசியபக்தரக்ஷகா
பாலலோசனுசிவசரணம்திருசூலபாணியேசிவசரண
நவநாயகர்துதிநாதாநீநர்
நடனப்பொற்பாதாசிவசரணம் லோக
நாயகிநாதாசிவசரணம்பவசாகரப்ரசவிநாசா
பஞ்சனதீக்ஷாசிவசரணம்கடல்நஞ்சையுண்டவாசிவசரணம்

இராஜன்சொல் விருத்தம்,

சிவசிவனேபோற்றி செந்திருமாலேபோற்றி
பவமறுத்தாண்டழிக்கும்பக்தரக்ஷகனேபோற்றி
நமனுதித்தர்போற்றும்நம்பனேயன்பர்வாழ்வே
அவமறுத்தாள்வாயெங்களாண்டவர்போற்றிபோற்றி

வசனம் அகோசரணா ...மையாசுவாமி முப்பத்துமுக்கோடி தேவர்கள்நாற்பத்தெண்ணாயிரம்ரிஷீசுரர்கள்கின்னகிம்புருடர் சித்தவித்தியாதரர் தும்புருநாரதர் இந்த அண்டபிண்ட சராசரங்களிலிருக்கப்பட்டவர்களும்புகலையானைமுதல் எறும்புகடைநான்குலக்ஷம் சீவராசிகளுக் கெல்லாம்பிதவாயிருக்கப்பட்ட திரிமூர்த்திகளே சரணஞ்சரணமையாசுவாமி

தேவர்கள்சொல் விருத்தம்

தருமமேசொரூபமானசத்யவாசகனேபதிரா
பத்வப்பட்... ...டாம்பத்தினிபுனறன்தேவி

ஒருகுறையுங்கட்டில்லையுலகெலாம்நீயேயாள்வாய்
கரியனகார்க்கோடன்செய்தகாரணமகலுந்தாரே

வசனம் ஆகோவாரும்பிள்ளாய் சத்தியந்தப்பாதாள மகாராசாவேநீர்க்காய்சாகவிருப்பாய்உன்தேவியாகிய தமயந்தியின்பேரில்ஒரு அணுவளவாகிலும் நீர்சம்சியமெண்ணத்தகாது இந்தப்பதிவிரதையானபத்தினியும் நீயும்பிள்ளைகளுங் கூடிவாழ்ந்துக் கொண்டிரும் இதோகார்க்கோடகன்தன்விகாரரூபத்தை வாங்கவந்திருக்கிறார் ஆனதால்உம்முடையவிகாரரூபத்தை வெளிப்படுத்தி எப்போதும்போலே அரசாக்ஷிசெய்துக்கொண்டிருந்து அந்தியகாலவேளையில் நம்மிடபதவி வந்துசேரும் பிள்ளாய்நளராசனே

சநியீசுரன்சொல்-விருத்தம்.

சத்யவாசகமெந்நாளுந்தவறாதநிடதபூபா
இத்தனைநாளுமுன்னையிடுக்கங்கள்மிகவேசெய்தேன்
சித்தமுமகிழ்ந்துவுன்றன்செல்வருந்தேவியோடும்
சுத்தமுஞ்சூழவாழ்ந்து சுகித்தரசாளுவாயே

வசனம் ஆகோவாரும்பிள்ளாய் நளராசனே அந்தத் தமயந்தியைநான்கலியாணஞ்செய்யவேண்டுமென்று எண்ணியிருந்தேன் நீர்வந்துகலியாணஞ்செய்தபடியால்உன்னைப்படாதபாடுகளெல்லாம்படுத்திவைக்கவேணுமென்றுஉம்மண்டையில் பனிரெண்டுவருஷங்காத்திருந்தேன்இக்கப்பனிரெண்டுவருஷமாய்உம்மிடத்தில் அணுகிறதற்குவதுவில்லாமலிருந்துவிட்டது ஆகிலும்நான்நினைத்தபிரதிக்கினைநிறைவேறவேணுமானதால்உம்மிடகுதிக்காலில்ஒருநாளுமுனைநனையாமலிருந்துவிட்டதுஅதின்வழியாகஉன்னுடலிற்கலந்து புத்திகளைப்பேதலித்து இவ்வளவுஅலங்கோலஞ் செய்துவிட்டேன நீரிதுவரையிலும்தருமமேஜெயமென்றுநம்பியிருந்தபடியால்உன்பேரிலும்மறுபடியும்சந்தோஷம்வந்துவிட்டது ஆகையினாலேநீரிந்தக்ஷணமே உம்மிடபூர்வத்தனதப்பெற்றுஉன்பெண்சாதிபிள்ளைகளுடன்கலந்து அந்தப்புட்கராசனிடத்திற்போய்மறுசூதாடிஉம்மிடராச்சியமெல்லாங்கைகொண்டுமுன்போலபதின்மடங்கதிகமாய் ராச்சியபரிபாலனஞ் செய்துக்கொண்டுசுகமாயிரும்பிள்ளாய் நளராசனே

கார்க்கோடகன்-விருத்தம்.

கடல்நஞ்சையுண்டவீசன்கலச்செய்ததேவன்
படமங்கைமீதிற்கொண்டமையலாலேத்தவாதை
உடனைகொண்டாய்நளராசேந்திராவுன்னுடன்முன்போலாகும்
விடமெகொண்டசரீரமெத்தோர்த்தேனமேன்மேலுங்கீர்த்தியாமே

ஆகோவாரும்பிள்ளாய்நளராசனே திரிமூர்த்திகளைப் பங்கப்படு த்திவைத்த சனீசுரபகவான் அந்தத்தமையந்திபேரில்வைத்தஆசை யினால்உம்மை இவ்வளவுபாடாதபாடுகளெல்லாம் படுத்திவைத்தார்,எ ன்பேரில் நீர்ஆயாசப்படவேண்டாம் உம்முடையசத்தியமானதுசாத் திடமேசனீசுரபகவானை நடுங்கும்படியாகச்செய்து அந்தசனீசுரப கவான் பயந்து எங்கேசாபங்கொடுக்கிறாரோவென்று எண்ணங்கொ ண்டிருக்கிறார்நான்முன்னமே என்விஷத்தினாலேயிருந்தரூபம் வரும் படிசெய்திருந்ததை இதோநான்வாங்கிக்கொண்டு உம்முடைய பூர்வரூப த்தைத்தந்துவிட்டேன் நீயும்உன்பெண்சாதிபிள்ளைகளுங்கூடவாழ்ந் துஏகசக்கிராதிபதியாயிருந்து அரசாட்சிசெய்துகொண்டிருக்கையில் அரியி னிட்டபாதாரவிந்தகமலங்களின்மேல் வந்துசேரும்பிள்ளாய்ராசனே.

பொது-வசனம்.

அகோதெப்படியென்றால் இந்தப்பிரகாரம்தமயந்தியும் நளராசனு ந்தர்க்கஞ்செய்து அக்கினியில்தமயந்திமூழ்கியெழுந்துவர அப்போது முப்பத்துமுக்கோடிதேவர்களும்வந்து சமாதானஞ்செய்துகார்க்கோ டகனால் முன்பூர்வரூபத்தைப்பெற்றுக்கொள்ள பிறகு சகலதேவதை களும்அவரவரிடங்களுக்குச்சொல்ல அதின்பிறகுசகலராசர்களும்தம யந்தியும்வீமராசனும்பிள்ளைகளும் தவனும்பியும்வந்து இடம்புரிவலம்பு ரியாகநளராசனுக்குச்சரணமடைந்துநிற்க அப்போது அயோத்தியை யாளப்பட்டரிதுபர்ணராசன் இந்தச்சேதிகளையெல்லாங்கேட்டு நடுக் கிட்டுப் பயந்து நடுநடுங்கி ஏவற்பணிவிடைகளைச்செய்யச்சொன்னே மேயென்றுநளராசனண்டைவந்து காலில்விழுந்து அழுதுபுலம்பிநான் செய்தஅபசாரத்தையெல்லாம்பொறுத்துநானென்னமறியாமற் செய்த பிழையைப்பொறுக்கவேணுமென்று மிகவுந்துதித்துசரணஞ்செய்கி றவிதமெப்படியென்றால்

பொது-விருத்தம்.

தேயவிராசருநளனைக்கண்டுசென்றார்
  நீண்டியகார்க்கோடகன்றன்னுருவைமாற்ற
மாயமாய்வந்துநின்றுதன்ரூபத்தை
  வாங்கிக்கொண்டேகிய பின்னளராசேந்திரன்
ராசரூபத்துடனே விளங்கக்கண்டு
  நாடகியும்பணிந்துமகிழ்ந்தருகில்நிற்க
ஆதரனைசெய்தரிதுபர்ணனவந்து
  அடிபணிந்துவணங்கியும்பவாடுவானே

நளராசனை ரிதுபர்னராசன் தோத்திரஞ்செய்கிற கண்ணிகள்.

இ-ம்மோகனம்-திரிபுடைதாளம்,

சரணஞ்சரணமையாநளராஜேந்திர
 தயாநிதியேசரணம்
வருணமாறின தாலறியாமலுனைமேவலை
 வாங்கினேனேமன்னவா
அறிந்துந்தேவரீரையலுவல்செய்யச்சொல்லவும்
 ஆகுமோ ஆண்டவனே
தெரிந்துசெய்தாலந்தத் தோஷமனுபவிப்பேன்
 தேவரீர்பொறுத்தருள்வீர்
வருந்தியே என்மனமெத்தநோகுதே யென்சொல்வேன்
 மன்னர்க்குமன்னர்கோவேயிது
பொருந்துமோ வுலகோர்க்குமறிந்தவஞ்சனையல்ல
 பொறுத்தருளுமையனே

ரிதுபர்னன்-விருத்தம்.

விக்ரமவிசக்ஷணிகவேந்தர்கட்கரசேலோக
சக்ரவர்த்திக்குண்மிக்கதலைவனேநிடதக்கோவே
இக்கருத்துடனிவ்வேஷமெடுத்தென்னைசோதித்தாள்
அக்கரைவந்தெனனை அருள்செய்வீர்சரணந்தானே

நளராசன்-விருத்தம்.

உம்மைவைத்தாதரித்தராசனேரிதுபர்னேந்திரா
உம்மிடபேரிற்குற்றமொருதினையளவுமில்லை
சும்மாநீவருந்தவேண்டாஞ்சுகதுக்கமனுபவித்தேன்
தம்மிடநகரிற்சென்று சந்தோஷமாய்வாழ்வீரே

வ-ம் அகோவாருமையா ரிதுபர்னமகாராசாவே இதுகாலவரையில்நீர்நம்மைவைத்தாதரித்து சவரட்சணை செய்துவந்தீர் உம்மிடபேரில ஒருநாளுங்குற்றமில்லை தேவரீரனுக்கூலத்தினாலேநான் தன்னயனானேன்என்சென்மசாபல்லியமீடேறிற்று அந்தசகிபகவான்மாயையால்நடந்ததல்லாமல் வேறல்லநீர் என்பேரில் தயைசெய்து இந்தவஸ்திரபூஷணாதிகளையணிந்துக் கொண்டு தங்கள்நகரம்போய்ச்சுகமாயிருமையாராசனே.

பொது-விருத்தம்.

அபோத்திரிதுபர்னராசனுக்கும்
 அன்பாக விடைகொடுத்தேயனுப்பிவிட்டுத்
தையல் தமயந்திமைந்தன்வீமராசன்
 தபனுபியுடனே சந்தோஷமீறச்

சையோகமாயிருந்துரதமேற்கொண்டு
தமயந்திமயிலாளுந்தனுங்கூட
வையமெல்லாம்வணங்கநிடதபுரிராசன்
மன்னவன்புட்கரம்சமுகனதில்வந்தாரே

நளராசன்-தரு-௰௩-அசாவேரி-ஆதிதாளம்,

தேசம்புகழுநளராசன்மறுசூதாடச்
செயநிடதபுரிவந்தார்
நேசமாகமைந்தர்மனைவியுடனேநாடி
நீதியுயர்மைத்துனன்தபனுபியுடன்கூடி தேச

வஞ்சனையாய்ச்சனிமாயையினாற்செய்த
வாழ்வும்பதிரரசுமானதைச்சூதால்விட்டு
அஞ்சியென்றவன்வாசந்துலைத்துமாயன்
அருளினால்புட்கரனுடனேமறுசூதாட தேச

முந்திசெய்யுந்தவத்தால்சந்திரகுலந்தழைக்க
மூர்த்திகளும்வந்துநம்மைமிகவளிக்க
சந்தோஷமாய்ச்சுற்றத்தார்களரசுடன்
தானரசாள்வேசதிருடன்வாழவே தேச

பத்தினிதமயந்திச்சத்திரபதிநளேந்திரன்
பட்டபாடுகளெல்லாந்தொட்டார்கலிராசனும்
இஷ்டமாகமனதிரங்கிவேண்டியவரம்
இசைந்தநன்றனந்தயிந்திரவைபோகமுடன் தேச

நளராசன்-விருத்தம்,

பூவுலகத்தையாளும்புட்கசராசனேகேள்
தீவினைப்பயனலெந்தன்தேசத்தையுனக்களித்தேன்
தேவிமைந்தரைபிரிந்துதேசசஞ்சாரஞ்செய்தேன்
ஆவலாய்மறுசூதாடயான்வந்தேனுடுவீரே

வசனம்.

அகோவாருமையாபுண்ணிய சீலராகியபுட்கரமகாராசனேநீர
ன்னிலும் மகாபராக்ரமுடையவரானதினாலே என்னுடன்கபடமாகவ
ந்துசூதாடிஎன்னுடையநாடுராச்சியங்களையெல்லாங் கெலித்துக்கொ
ண்டு எங்களையும்வனவாசம்போகும்படிசெய்துவைத்தீர் நாங்களும்வ
னவாசம்போய் இம்மிட அநுக்கிரகத்தினால் வந்துசேர்ந்தோம்முன்ன

ஆடினசூதை இன்னமொருதரமாடவேணுமென்று மனதாய்வந்தேன் நாமிருவரும்சூதாடலாம்வாருமையாராசனே

புஷ்கரராஜன்சொல் விருத்தம்

என்னகாணளனேகேளீர்யென்பாக்கியவசத்தினாலே
தன்னிடநாடுதோர்த்தீர்தானேவந்தேசூதாடி
உன்னிடகஷ்டகாலமூர்விட்டுப்போயிருந்தும்
இந்நாள சூதாடவந்தீருண்டோவதைச்சொல்வீரே

வ-ம் அகோவாருமையாநளராசனே முன்னம்நாமிருவரும்மனது சம்மதமாகப்பந்தயம்வைத்துசூதாடினோம்உம்முடைய விதிப்பயனால் நீர்தோர்த்துவிட்டீர் இப்போதுமறுபடியும்வந்து சூதாடவேணுமெ ன்கிறீர்பந்தயமென்னகொண்டுவந்தீர்சொல்லுமையாருசனே,

நளராசன்சொல்-விருத்தம்.

பந்தயமென்றனுக்குமென்னபாக்கியமிருக்குதென்றீர்
எந்தநாயகியையீடாயிணைகட்டிவைத்தேனிப்போ
உந்தனன்னகருநாடுமொருமிக்கவெல்லாஞ்சேர்தது
வந்துநீரெந்தனோடேமறுசூதையாடுவீரே

வ-ம் அகோவாருமையாபுஷ்கரராசனே நாமிருவரும் இன்னமொ ருதரம்சூதாடவேணுமென்றுசொல்லுதற்குபந்தயங்கட்டவும்மிடத்தி ல்என்னவஸ்துஇருக்குதென்றுகேட்டீர் உம்முடையநாடுநகரம்ராச்சிய ங்களும் அதிலுள்ள ஒருக்கம்யானைசேனை ரதகஜதுரகபதாதிகளுக்கு ப்பதில்என்னிட தேவியாகிய தமயந்தியையீடாகக் கட்டிவைத்தேன் நாமிருவருஞ்சூதாடுவோம் வாருமையாராசனே.

புஷ்கரராசனுக்கும்நளராசனுக்கும் உ-வதுசூதாடல்-தரு

இ-ம்-மத்தியமாவதிஏகதாளம்,

சொக்கட்டானாடுவோம்வாரீர்நளமகிபா
சொக்கட்டானாடுவோம்வாரீர்
திக்கெட்டுமறியகேமறுசூதாடவந்தீர்
கைதொட்டுப்பாற்சிகையைவைத்தெடுத்துசுருட்டியே சொ

பாரய்புஷ்கரராசதீராவந்தென்முதல்
பனிரெண்டனைக்குவிழுந்துமேஅமைத
சேர நுவிருத்தம்யிருக்க விருப்பமுடை
[illegible]பெறச்சூழ்ந்ததுமே

ஓரெட்டுமூன்றத்தொன்றுநமக்குவீழ்ந்ததுகாண்
சோராமலென்கைக்காய்சோடுகட்டபார்த்து பாராய்

கட்டாமலென துகாய்வெட்டுப்பட்டாலென்ன
கட்டுவதுபெரிதோநளமகிபா
தொட்டாலென துகைக்குவிருத்தங்கள்விழுவதும்
சோடுகட்டுவதரிதோ
நட்டமெனவிதோகுட்டுபெட்டுத்தொயில்
விட்டவுந்தன்பாச்சிகைஎட்டிப்போச்சுதுபார் சொச்

மஞ்சட்காய்க்கிருக்கால்மறுக்காய்பனிரெண்டெட்டும்
மாராமல்விருத்தமிதோ-புஷ்கரனே
செஞ்சுதுகைறுப்புக்காய்சிகப்புஞ்சோடுகட்டாமல்
கிடப்பதைபாருமிதோ
பஞ்சையென்றெண்ணுதேபச்சைமஞ்சளும்பழந்
துஞ்சாமற்புழுத்ததுதோர்க்குழுந்தகாட்டம் பாராய்

நளராசன்-விருத்தம்

பந்தயம்வைத்துத்தோர்த்தபாவிபுஷ்கரனேகேளாய்
உந்தனால்நானுமெத்தஉபகாரம்பெற்றுக்கொண்டேன்
எந்தனன்னகருநாடுமிப்போதென்வசமாய்விட்டு
இந்தநாளுமதுதேசமேகுவீரேகுவீரே.

வ-ம் .அகோவாருமையா புண்யசீலராகிய புஷ்கரராசனேயாவருக்கும் சுகதுக்கம்வருவதும்போவதும் நிலையல்லஆதியிலேநான் உம்முடனேசூதாடி என்னுடைய நாடு ராச்சியங்களெல்லாம் உம்மிடத்தில் தோர்த்துவிட்டு நாங்கள் ஸ்திரீபுருஷாளிரண்டுபேரும் இருக்கும்போதுகொஞ்சமாகிலும் சூரியவம்சத்து ராசா வாச்சுதே என்றெண்ணிப் பாராமல்எங்களையும் பட்டணத்திலிருக்கவெட்டாமல் வெளியேதுரத்திவிட்டமகானுபாவனல்லவா இப்போதுநீர் இனிமேல் என்னசெய்யப்போகிறீர்ஆகிலும் நீர் அப்படிக்குத் தயைதாக்ஷண்யமில்லாதவராயிருந்தாலும் நான்உன்பேரில்மிகவும் அதிகபிரிமாயிருக்கிறேன் இப்போதும்இந்தவஸ்திராபரணபூஷணாதிகளை யணிந்துக்கொண்டு பூர்வமாகியபுட்கரதேசப்போய்ச் சேர்ந்துசுகமாய் அரசாக்ஷிசெய்துவாருமையாராசனே

புஷ்கரராசன்சொல்-விருத்தம்

சக்கராயுதநளேந்திரதயாபராசரணங்கேளும்
இக்கணமெனதுதேசமேகுவேன்தடையொன்றில்லை
அக்காலந்திருநல்லாற்ருணைக்கினைப்படிநடந்தேன்
எக்காலுமென்னைவைத்தேயிரட்சிப்பீரிரட்சிப்பீரே

வசனம்,

ஆகோசரணஞ் சரணமையாசுவாமி ஏகசக்கிராதிபதியான மகாரா்சனே என்பேரிலொருக்கா லுங்குற்றமில்லை அங்கசனியீசுரபகவான் மாயையால் ந ந்த லாமல்வேறல்ல நான்மனமறியச் செய்ததில்லை என்பேரில் தயைசெய்துஎப்போதும் போல இரக்ஷித்திடவேணுமையா சுவாமி.

பொதுவிருத்தம்

சூரியகுலந்தனிலுதித்தநளராசேந்திரன்
  சுக்ஷிசெய்தபுஷ்கரனையனுப்பிவிட்டுக்
காரியஸ்தர்மந்திரிபிரதானிமார்கள்
  கனத்தகுடியானபேர்தமையழைத்துச்
சீருடனேநகரையலங்காரஞ்செய்துத்
  தினமுமுகூர்த்தம்பார்த்துத்தான்மீந்து
பாரிலுள்ளோர்தெண்டனிடப்பணிந்துபோற்றப்
  பரிவொடுபட்டாபிஷேகமுடிகொண்டாரே

தரு இம் பூபாளம் ஏகதாளம்

பாரெங்குஞ்செழிக்கநளேந்திரன்சிம்மாசனாதி
  பதியாகவாழ்ந்தனனே
பேரணிமன்னர்மறையோர்கவிவாணர்
  பெரும்புகழ்கூறியேசிரங்குவித்தேநிற்க
நாரியர்மஞ்சணீரால்மெடுக்கவே
  ராசாதிருசர்கள்காணிக்கைகொடுக்கவே பாரெ

பட்டவர்த்தனர்கள்மகுடவர்த்தனர்கள்
  பழமைபேசித்துதிக்க
மெட்டியர்வாணவர்களாரியர்சுபஞ்சொல்லி
  வியப்புடனேமதிக்க
கிட்டிவந்துநின்றுசாரதிபௌஷியன்
  கீர்த்திபரதாபஞ்சொல்ல
துஷ்டநிக்ரஞ்செய்துஆறிலொருகடமை
  தோராமற்கொண்டேநல்ல
சிஷ்ட பரிபாலனஞ்செய்துதாமங்களுத்
  தினங்குறையாமலேதன்தானியங்களும்
அஷ்டலட்சுமியகலாமல்விளங்காளும்
  இஷ்டவைபோகப்ரதிஷ்டையுடன்மேன்மேலும் பாரெ

சத்ரபதிநளராசன்முப்பத்திரண்டு
  தானதருமங்கொடுக்க

பத்தியுடனேதேவாலயம்பூசைகள்
பாங்குடனேநடக்க
சுத்தத்தாருந்தவமுனிவர்களியாவர்க்குஞ்
சொர்ணுபிஷேகஞ்செய்ய
தொல்புவியாவுஞ்செழிக்கப்பழமுத்து
சொரிந்துமும்மாரிபெய்ய
புத்ரமித்ராதியர்பொங்கமாகக்கூடி
புந்திமகிழ்வுடன்பட்டாபிஷேகஞ்சூடி
உத்தமன்சகிபகவானருளைக்கொண்டாடி
ஓமவெக்கியஞ்செய்யபூமழையெங்கும்பெய்ய பாரெ

பொது விருத்தம்

சீர்வாழிவிநாயகனுங்குகனும்வாழி
தேவருடன்மும்மூர்த்தித்திருநாள்வாழி
பார்வாழிகடலிரவிமதியும்வாழி
பாமாதுபூமாதுபலநூல்வாழி
கார்வாழிமறையோநான்மறையும்வாழி
கன்னிதமயந்திநளன்கதையும்வாழி
ஏர்வாழியிராசர்கவிராசர்வாழி
இதைப்படித்துநடப்போர்களென்றும்வாழி.

தமயந்திநாடகம்.

முற்றிற்று,

———

